உ

சிவமயம்.

பாண்டிநாட்டிலுள்ள

திருக்கானப்பேர் என்னும்

# காளையார்கோயிற்புராணம்.

இஃது

தஞ்சாவூர், சதாவதானம்,

பிரம்ம - ஸ்ரீ,

**சுப்பிரமணிய ஐயரவர்கள்**

இயற்றியது.


தேவகோட்டை ஜமீன்தார்

ஸ்ரீமான் - அள. அரு.

**இராமசாமிச் செட்டியாரவர்கள்**

விருப்பத்தின்படி

சென்னை:

வே. நா. ஜூபிலி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1899.




[illegible]

உ

திருச்சிற்றம்பலம்.

திருக்கானப்பேர் என்னும்.

காளையார்கோயில்.

# தேவாரப்பதிகங்கள்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பிடியெலாம்பின்செலப்பெருங்கைமாமலர்த்தழீஇ
விடியலேதடமூழ்கிவிதியினால்வழிபடுங்
கடியுலாம்பூம்பொழிற்கானப்பேரண்ணலின்
னடியலாலடைசரணுடையரோவடியரே. (௧)

நுண்ணிடைப்பேரல்குனூபுரமெல்லடிப்
பெண்ணினல்லாளையோர்பாகமாப்பேணினான்
கண்ணுடைநெற்றியான்கருதியகானப்பேர்
விண்ணிடைவேட்கையார்விரும்புதல்கருமமே. (௨)

வாவிவாய்த்தங்கியதுண்சிறைவண்டினங்
காவிவாய்ப்பண்செயுங்கானப்பேரண்ணலை
நாவிவாய்ச்சாந்துளும்பூவுளுஞானநீர்
தூவிவாய்ப்பெய்துநின்றூட்டுவார்தொண்டரே. (௩)

நிறையுடைநெஞ்சுளுநீருளும்பூவுளும்
பறையுடைமுழவுளும்பலியுளும்பாட்டுளுங்
கறையுடைமிடற்றண்ணல்கருதியகானப்பேர்
குறையுடையவர்க்கலாற்களைகிலார்குற்றமே. (௪)

ஏனப்பூண்மார்பின்மேலென்புபூண்டீறிலா
ஞானப்பேராயிரம்பேரினானண்ணிய
கானப்பேரூர்தொழுங்காதலார்தீதிலர்
வானப்பேரூர்புகும்வண்ணமும்வல்லரே. (௫)

பள்ளமேபடர்சடைப்பாற்படப்பாய்ந்தநீர்
வெள்ளமேதாங்கினான்வெண்மதிசூடினான்
கள்ளமேசெய்கிலார்கருதியகானப்பே
ருள்ளமேகோயிலாவுள்குமென்னுள்ளமே. (௬)

மானமாமடப்பிடிவன்கையாலலகிடக்
கானமார்கடகரிவழிபடுங்கானப்பே
ரூனமாமுடம்பினிலுறுபிணிகெடவெண்ணின்
ஞானமாமலர்கொடுநணுகுதனன்மையே. (௭)

வாளினான்வேலினான்மால்வரையெடுத்ததிண்
டோளினானெடுமுடிதொலையவேயூன்றிய
தாளினான்கானப்பேர்தலையினால்வணங்குவார்
நாளுநாளுயர்வதோர்நன்மையைப்பெறுவரே. (௮)

சிலையினான்முப்புரந்தீயெழச்செற்றவ
னிலையிலாவிருவரைநிலைமைகண்டோங்கினான்
கலையினார்புறவிற்றேன்கமழ்தருகானப்பேர்
தலையினால்வணங்குவார்தவமுடையார்களே. (௯

உறித்தலைச்சுரையொடுகுண்டிகைபிடித்துச்சி
பறித்தலும்போர்த்தலும்பயனிலைபாவிகாள்
மறித்தலைமடப்பிடிவளரிளங்கொழுங்கொடி
கறித்தெழுகானப்பேர்கைதொழல்கருமமே. (க0

காட்டகத்தாடலான்கருதியகானப்பேர்
கோட்டகத்திளவரால்குதிகொளுங்காழியா
னாட்டகத்தோங்குசீர்ஞானசம்பந்தன
பாட்டகத்திவைவலார்க்கில்லையாம்பாவமே. (கக

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ்
சூதனமென்முலையாள்பாகமுமாகிவரும்
புண்டரிகப்பரிசாமேனியும்வானவர்கள்
பூசலிடக்கடனஞ்சுண்டகருத்தமருங்
கொண்டலெனத்திகழுங்கண்டமுமெண்டோளுங்
கோலநறுஞ்சடைமேல்வண்ணமுங்கண்குளிரக்
கண்டுதொழப்பெறுவதென்றுகொலோவடியேன்
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (க

கூதலிடுஞ்சடையுங்கோளரவும்விரவுங்
கொக்கிறகுங்குளிர்மாமத்தமுமொத்துனதா
ளோதலுணர்ந்தடியாருன்பெருமைக்குநினைந்
துள்ளுருகாவிரசுமோசையைப்பாடலுநீ
யாதலுணர்ந்தவரோடன்புபெருத்தடியே
னங்கையின்மாமலர்கொண்டென்கணதல்லல்கெடக்
காதலுறத்தொழுவதென்றுகொலோவடியேன்
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (உ

நானுடைமாடெனவேநன்மைதரும்பரனை
நற்பதமென்றுணர்வார்சொற்பதமார்சிவனைத்
தேனிடையின்னமுதைமற்றதனிற்றெளியைத்
தேவர்கணாயகனைப்பூவுயர்சென்னியனை
வானிடைமாமதியைமாசறுசோதியனை
மாருதமும்பனலும்மண்டலமும்மாய
கானிடைமாநடனென்றெய்துவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (ங

செற்றவர்முப்புரமன்றட்டசிலைத்தொழிலார்
சேவகமுந்நினைவார்பாவகமுந்நெறியுங்
குற்றமிறன்னடியார்கூறுமிசைப்பரிசுங்
கோசிகமும்மரையிற்கோவணமும்மதளு
மற்றிகழ்திண்புயமுமார்பிடைநீறுதுதை
மாமலைமங்கையுமைசேர்சுவடும்புகழக்
கற்றனவும்பரவிக்கைதொழலென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (ச

கொல்லைவிடைக்கழகுங்கோலநறுஞ்சடையிற்
கொத்தலரும்மிதழித்தொத்துமதனருகே
முல்லைபடைத்தநகைமெல்லியலாளொருபான்
மோகமிகுத்திலகுங்கூறுசெயொப்பரிசுந்
தில்லைநகர்ப்பொதுவுற்றாடியசீர்நடமுந்
திண்மழுவுங்கைமிசைக்கூரெரியும்மடியார்
கல்லவடப்பரிசுங்காணுவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௫)



பண்ணுதலைப்பயனார்பாடலுநீடுதலும்
பங்கயமாதனையார்பத்தியுமுத்தியளித்
தெண்ணுதலைப்பெருமானென்றெழுவாரவர்த
மேசறவும்மிறையாமெந்தையையும்விரவி
நண்ணுதலைப்படுமாறெங்ஙனமென்றயலே
நைகிறவென்னைமதித்துய்யும்வணம்மருளுங்
கண்ணுதலைக்கனியைக்காண்பதுமென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௬)

மாவையுரித்ததள்கொண்டங்கமணிந்தவனை
வஞ்சமனத்திறையுநெஞ்சணுகாதவனை
மூவருருத்தனதாமூலமுதற்கருவை
மூசிடுமால்விடையின்பாகனையாகமுறப்
பாவகமின்றிமெய்யேபற்றுமவர்க்கமுதைப்
பானறுநெய்தயிரைந்தாடுபரம்பரனைக்
காவலெனக்கிறையென்றெய்துவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௭)

தொண்டர்தமக்கெளியசோதியைவேதியனைத்
தூயமறைப்பொருளாநீதியைவார்கடனஞ்
சுண்டதனுக்கிறவாதென்றுமிருந்தவனை
யூழிபடைத்தவனோடொள்ளரியுமுணரா
வண்டனையண்டர்தமக்காகமநூன்மொழியு
மாதியைமேதகுசீரோதியைவானவர்தங்
கண்டனையன்பொடுசென்றெய்துவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௮)

நாதனைநாதமிகுத்தோசையதானவனை
ஞானவிளக்கொளியாமூனுயிரைப்பயிரை
மாதனைமேதகுதன்பத்தர்மனத்திறையும்
பற்றுவிடாதவனைக்குற்றமில்கொள்கையனைத்
தூதனையென்றனையாடோழனைநாயகனைத்
தாழ்மகரக்குழையுந்தோடுமணிந்ததிருக்
காதனைநாயடியேனெய்துவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௯)

கன்னலையின்னமுதைக்கார்வயல்சூழ்கானப்
பேருறைகாளையையொண்சீருறைதண்டமிழா
லுன்னிமனத்தயராவுள்ளுருகிப்பரவு
மொண்பொழினாவலர்கோனாகியவாரூரன்

பன்னுமிசைக்கிளவிபத்திவைபாடவல்லார்
பத்தர்குணத்தினராயெத்திசையும்புகழ
மன்னியிருப்பவர்கள்வானினிழிந்திடினு
மண்டலநாயகராய்வாழ்வதுநிச்சயமே. (௧

திருச்சிற்றம்பலம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பொது.

திருக்ஷேத்திரக்கோவை - பண் - இந்தளம்.

ஆரூர்தில்லையம்பலம்வல்லநல்லம் வடகச்சியுமச்சிறுபாக்கநல்ல
கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணி கடல்சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார்
நீரூர்வயனின்றியூர்குன்றியூருங் குருகாவையூர்நாரையூர்நீடுகானப்
பேரூர்நன்னீள்வயநெய்த்தானமும் பிதற்றாய்பிறைசூடிதன்பேரிடமே. (

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### பொது.

பாவநாசத்திருப்பதிகம் - பண் - பழம்பஞ்சுரம்.

ஆனைக்காவிலணங்கினையாரூர்நிலாயவம்மானைக்
கானப்பேரூர்க்கட்டியைக்கானூர்முளைத்தகரும்பினை
வானப்பேரார்வந்தேத்தும்வாய்மூர்வாழும்வலம்புரியை
மானக்கயிலைமழகளிற்றைமதியைச்சுடரைமறவேனே. (

க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்.

ஆரூர்மூலட்டானமானைக்காவு மாக்கூரிற்றான்றோன்றிமாடமாவூர்
பேரூர்பிரமபுரம்பேராவூரும் பெருந்துறைகாம்பீலிபிடவூர்பேணுங்
கூரார்குறுக்கைவீரட்டானமுங் கோட்டூர்குடமூக்குக்கோழம்பமுங்
காரார்கழுக்குன்றுங்கானப்பேருங் கயிலாயநாதனையேகாணலாமே. (

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

திருநாட்டுத்தொகை - பண் - இந்தளம்.

தென்னூர் கைம்மைத் திருச்சுழியற் றிருக்கானப்பேர்
பன்னூர் புக்குறையும் பரமர்க்கிடம் பாய்நல
மென்னா ரெங்கள் பிரானுறையுந் திருத்தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்னூர் புரிசைநாட்டுப் புரிசையே. (

ஊர்த்தொகை - பண் - பழம்பஞ்சுரம்.

காட்டூர்க்கடலே கடம்பூர்மலையே கானப்பேரூராய்
கோட்டூர்க்கொழுந்தே யழுந்தூரரசே கொழுநற்கொல்லேறே
பாட்டூர்பலரும் பரவப்படுவாய் பனங்காட்டூரானே
மாட்டூரறவா மறவாதுன்னைப் பாடப்பணியாயே.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

சிவமயம்.

# சிறப்புக்கவி.

தேவகோட்டை,

வித்துவசிகாமணியாகிய - ஸ்ரீமான்

வீர - லெ.

சிந்நயச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமணியாயதஞ்சைப் பூசுரமணிநாறென்னுந்
தூமணியவதானந்தேர் சுப்பிரமணியமேலோன்
பாமணியென்னயாத்துப் பைம்மணிவண்ணாற்கொண்ணு
மாமணிவாழ்கானப்பேர் மான்மியமணிதந்தானே.

# படலவட்டவணை.

உ

சிவமயம்.

திருக்கானப்பேரென்று வழங்குகின்ற

# காளையார்கோயிற் புராணம்.

## பாயிரம்.

### விநாயகர் துதி.

சீர்பூத்த மணிமார்பன் வியன்படையு மயன்படையுந்
தேவர்கோமான்
வார்பூத்த வயப்படையும் வியப்படையு நுறிந்தந்த
வரைகோலகொண்டு
பார்பூத்த புகழ்ந்தாதை கைச்சிலைசிறு நிறுத்தாவரு
பாரதந்திட்
டேர்பூத்த கானப்பேர்ச் சிங்காரகணபதிதா
ளிறைஞ்சி வாழ்வாம்.

### காளீசர்.

பாமேவு மலரனங்கா ணுமுடிகண் டாமெனவுங்
மகிழ்வுபூத்துத்
தேமேவு நறுங்கொன்றை முகமலரக் கங்கையலை
திரண்டுபொங்க
மீமேவு வெண்பிறையு மெய்வளர்ந்து பூரிப்ப
வேணிதாங்குங்
காமேவு கானப்பேர்க் காளீசன் கான்மலரைக்
கருத்துள்வைப்பாம்.

சுவர்ணவல்லியம்மை.

கலைவல்லி கடவுளர்க ளமுதவல்லிக்
கரணிகொடு கடைந்துபண்டு கண்டதிம்பா
லலைவல்லி யுடற்கண்ணு னில்வாழ்வல்லி
யாதியவல் லிகளெல்லா மண்மிப்போற்றுந்
தலைவல்லி நகையெனுந்தன் போதோடங்கை
தனமூக்கென் றேனையமுப் போதும்பூத்த
மலைவல்லி சோதிவனச் சுவணவல்லி
மணவல்லி மலர்த்தாளுண் மலருள்வைப்பாம். (௩)

சோமேசர்.

இப்பாரின்முன் னமைச்சரண்டுக் கருச்சித்த பனவச்சே
யினைக்கறுத்த
வெம்பகடூர் தியைக்கழலிற் றேய்த்திட்டா மின்னுலகம்
வேண்டிப்பூசை
நம்பியுஞற் றிடுமடியார்க் கெவ்விகனே யினுந்துமிப்பா
ஞாட்பேற்றென்னுத்
தும்பையணிந் தருள்மவுலிச் சோமேசன் றுணைமலர்த்தா
டொழுதுவாழ்வாம். (௪)

சவுந்தரநாயகி யம்மை.

கருவளரு மூலத்துத் தருணரவி நேர்வித்திற்
கலையாகி
யிருவளரு மிதயத்திற் றிரகோப நேர்வித்தி
னிடைச்சியாகித்
தருவளரு மாஞ்ஞையினின் மதியினைநேர் வித்திற்சிற்
சத்தியாய
திருவளருங் கானப்பேர்ச் சவுந்தரிய நாயகிதாள்
சென்னிசேர்ப்பாம். (௫)

சுந்தரேசர்.

துன்னியமெய் யிடப்பாலி லொருபெண்ணை மணந்ததுவுந்
தூயதிங்கட்
பொன்னிறொளிர் வேணியிசை யொருபெண்ணை மணந்ததுவும்
போதாவென்றுக்
கன்னவிறே ளொருமாறன் பெண்ணைமுன மணந்தமையாற்
கானப்பேரிற்
பின்னுமொரு தென்னவனிற் பெண்மணந்த சுந்தரனைப்
பேணிவாழ்வாம். (௬)

மீனாட்சியம்மை.

புயற்கணுடங்கி னறைகமழ் பூங்குழற் பூவை
யயற்கணுயங்கி ரீசனு ருயிரனு ளன்ப
ருயற்கணுயங்கி லங்கண்முற் றளித்தரு ளூட்டுங்
கயற்கணுயங்கி கழற்புணை கொடுபவங் கடப்பாம். (௭)

சபாநாயகர்.

உலகெலாமென வுதித்ததோ ரோசையா னுலகத்
தலகிலாதவ ராந்திருத் தொண்டர்த மருமை
யிலகுமாக்கதை தோற்றுவித் தக்குண மின்றிச்
சுலவுசீர்ச்சிதா காயத்தி னடிப்பவர்த் தொழுவாம். (௮)

சிவகாமியம்மை

ஒருமாமறையிலிருகுவளை யொளிசூழ்ந்தென்ன வுயர்மன்றத்
தருமாமறையினுபநிடமு மயனுமாலு நேடரிய
பெருமானடனகுஞ்சிதத்தாள் பெட்டாற்றுணைக்க ணூக்கிநலம்
வருமாநிற்குஞ்சிவகாம வல்லிதுணைத்தாண் மலர்போற்றி (௯)

தட்சணாமூர்த்தி.

வாலியர்சார்மாணுக்கர் வார்த்திகர்குரவராதன்
மாலியலையந்தீர்த்தல் வாய்திறந்துரைத்தலென்னும்
பாலியலதற்குமாறுப் பண்டூழ்ப்படைந்தநால்வர்க்
காலியலடிக்கீழ்மோனத் தாற்பொருடெளித்தார்த்தாழ்வாம். (௰)

வயிரவர்.

குரைத்தலைமேவும்வேதக் குக்கனுங்கயலிற்சூழ
விரைத்தலையெழப்பல்வானோர் மெய்யினின்றிழிநெய்த்தோரா
றரைத்தலையோட்டினுக்கு மரையளவென்னவேற்கு
மரைத்தலைமாவாழ்சோதி வனவயிரவன்றாள்போற்றி. (௰௧)

வாள்மேனடக்குவம்மை

தோண்மேலடல் சூழ்ப தென்னவனோ
டேண்மேலெதி ரேற்ற புலிக்கொடியோன்
கோண்மேலுயர் கோட்டை யெனப்புரியும்
வாண்மேனடந் தாளை வணங்குவமால். (௰௨.)

செல்வவிநாயகர்

வில்வமறுகருங்கிதழி முதலாயவிரைமலர்தூய் பேணுளாற்று
நல்வினையாற்றனைப்பூசை புரிபவர்க்கைந்தருநிழலு நளினவீடும்
பல்வகைப்பொறிவிரவு பாப்பணையுமாதியவாப் பகராமிற்குஞ்
செல்வமெல்லாந்தந்தருளுஞ் செல்வவிநாயகனடியைச் சிந்தைசெய்வாம்.

சுப்பிரமணியர்

பாமிநாதன் பதியென வாழ்பவன்
றேமிநாக தொடர்தாக் குட்டியே
யோமிநாத வுரைக்குரை யோதிய
சாமிநாதன் சரண்சர ணாகுமே. (௰௪)

திருநந்திதேவர்.

பண்டரன்வடிவிற்பட்ட பாண்டியன்பிரம்பின்போத்துக்
கண்டிடிற்பொதுவேயாகக் கயிலையுட்கோயில்சாரு
மண்டர்மெய்தொறுஞ்சிறப்பா மடிதரும்வேத்திரங்கைக்
கொண்டுலாநந்திதேவன் குளிர்மலர்த்தாள்கள்போற்றி. (௰௫)

சம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

முன்புகோதமன் மொய்வரச் சார்பினாற்
பின்புகல்வினைப் பெண்ணென வாக்கியோன்
வன்புகாணுற மாதென வஃகிலா
தென்பையாக்குசம் பந்தரை யேத்துவாம். (௰௬)

திருநாவுக்கரசு சுவாமிகள்.

வேணியேறந்த வெள்ளத் துமையொடேர்
தோணியேறிதன் சொற்றுணை யாற்கழு
நாணியேறுநர் வீழ்த்த நரலைகற்
றோணியேறிக் கடந்தார்த் தொழுவமால். (௰௭)

சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

பண்டுதான்றடுத் தாண்ட பரிசென
மண்டுசோதி யனந்திறை காளையாய்த்
தண்டியிர்ப்பத் தமிழ்ப்பதி கஞ்சொல்வன்
றொண்டர் தொண்டர்க்குத் தொண்டுசெய் வாமரோ. (௰அ)

மாணிக்கவாசக சுவாமிகள்.

வேதமாதியுள் விட்டுணு வென்றபோர்
மாதுபாதியற் கேயெனை வைபமோர்க்
தோதமாறற்கொண் டூங்கடிப் பிக்கநம்
வாதவூரர் மலரடி வாழ்த்துவாம். (௰௯)

சண்டேசர்.

திண்ணனூர்மென்று தின்றுள மிச்சிலுண்
டுண்ணியெய்த வருங்கதி யுய்த்தவ
னுண்ணவெஞ்சிய வுண்டுமற் றென்றுணுக்
திண்ணமேவுசண் டேசரைச் சேவிப்பாம். (௨௰)

அறுபத்துமூவர்.

தம்பிரானார்தனித்தோழர் சாற்றுதொண்டத் தொகைக்கரும்பி
நம்பியாண்டார் நம்பிபண்பா னவிலந்தாதி வழிற்போதா
வெம்பிரான்சேக்கிழார்பெருமா னிசைத்தபுராணத் திடைமலர்ந்து
பம்பிநீள்சீர்ப்பத்தராறு பத்துமூவர் பதம்பணிவாம். (௨௧)

கலைமகள்.

வலக்கையிற்படிகமாலை வாமக்கைம்மலரின்ஞான
மிலக்குபுத்தகமொன்றேந்தி யியல்வரமபயங்காட்டி
நலத்ததண்மதிசேர்தன்மெய்ந் நகைக்குக்கூம்பாவெண்கஞ்ச
மலர்க்கண்வாழ்கலைமானுக்கென் மனக்கமலமும்புக்கில்லாம். (௨௨)

தமிழாசிரியர்.

சுத்தமெய்யறிவானந்த சுந்தரக்கடவுள்கூட
னத்தியசங்கத்தாரு ணக்கீரனுரைநோக்கி
யித்தரைநம்மையொப்பா ரென்னவாய்மலரப்பெற்று
முத்தமிழ்க்குரவுபூண்ட முனிவன்றாண்முடிமேற்கொள்வாம். (உ௩)

வாழ்த்து.

மாமறைக்கீதம்வாழ்க வளர்மகவிசேடம்வாழ்க
தூமழைபொழிந்துவாழ்க துன்னியபயிர்கள்வாழ்க
பூமலியுயிர்கள்வாழ்க பூதிசாதனங்கள்வாழ்க
பீமிசைசைவம்வாழ்க வேந்தர்மெய்ச்செங்கோல்வாழ்க. (உ௪)

நூற்பயன்.

கானப்பேர்மான்மியத்தைக் கனிந்தநல்லன்பிற்கேட்போர்
மீனப்பேருவரிசூழ்பூ மீதுபன்னாள்வாழ்வும்பர்
மானப்பேசழியார்செல்வ மன்னிநன்மகார்ப்பெற்றுப்பின்
யூனப்பேறுடன்மீட்டெய்தா வுயர்சிவகதியைச்சார்வார். (உ௫)

---

அவையடக்கம்.

வனசமாமலர்ப்பொருட்டு வாழ்பவன்முதலவானோர்
மனவனுக்கொடுதேர்ந்தோத மாட்டாமைவெள்கிநிற்ப
வெனதுவெள்ளறிவியார்க்கு மெளிமையிற்றெரியும்வண்ண
மினிதுநீகானப்பேரு நீசன்மாக்கதைசொல்கென்று (உ௬)

சங்கொடுகமலரூப தனநிதிதம்பாலென்றுந்
தங்கலாலீகையத்தாற் றகுசிவதருமமத்தாற்
றுங்கமார்போகமத்தாற் றாயநீடின்பமேவி
யிங்குவாழ்பெரியோர்கூற விசைந்தனன்சிறியேன்கூற. (உ௭)

என்கவியிளையும்பற்ப லினியநூல்கண்டமேலோர்
பன்கவியாக்கொள்வாரெப் பான்மையினென்னினன்றோர்
நன்கவிபுனைதியென்றியா நாட்டியசொன்மருமே
யென்கவியேனுஞ்செப்ப வெழுந்தனனென்னுமன்பால். (உ௮)

திங்களினொளியைக்கான்று திகழுமிப்பியின்முத்தோடு
தங்குபைங்கழையின்முத்துந் தரளமாக் * கணித்தல்போலப்
பொங்குபேரறிவான்மிக்கோர் புகன்றநற்பாக்களோடு
புங்கமிலாதேன்சொற்ற புன்சொலுங் கணிப்பர்தூயோர். (உகூ)

நன்குசால்கரும்பின்சாறு நச்சினர் † பருவங்கோட்ட
மன்கழிகோதுநாடா ரஃதெனவழுவிராய
வென்கவிப்புன்மையுன்னு தேற்பர்கானப்பேரிசன்
றன்கதைச்சுவையளாய தன்மையானன்மைசான்றோர். (ஙூ)

சிறப்புப்பாயிரம்.

நாற்றிசைபரவுந்தஞ்சை நகரில்வாழுந்தகுளன்
போற்றுறு சதாவதானப் புலமையிற்றலைமைபூண்டோன்
றோற்றலில்கலைகள்கற்றோன் சுப்பிரமணியசனமன்
சாற்றினன்கானப்பேரூர்த் தலத்துமான்மியத்தைமாதோ. (ஙுக)

பாயிரமுற்றிற்று.



---

* கணித்தல்-கணக்கிடல். † பருவம்-கணு.

## நாட்டுப்படலம்.

இறைவனங்கயற்கணம்மை யிருந்திறற்சேயென்றின்னோர்
முறைவழிகார்த்தியங்கண் முழங்குகானப்பேர்முன்னாப்
பிறைமுடிப்பெம்மான்வாழ்க்கை பெறுதலம்பலபுனைந்த
மறைவளர்பாண்டிநாட்டின் வளஞ்சிலவழுத்தலுற்றாம். (௧)

எழினலமுடையார்தம்மு ளிசைக்குழற்கண்ணனென்ன
வழிவிலாச்செல்வர்தம்முளளகையம் பதியானென்னப்
பழியொழிகற்றோர்தம்முட் பஃறலைச்சேடனென்னச்
செழியதன்பன்னாட்டுள்ளுஞ் சிறந்ததுபாண்டிநாடு. (௨)

நதிகளிற்கங்கைமாவி னவில்வயச்சிங்கவேறு
பதிகளின்மநுவேந்தம்பொற் பணியின்மங்கலநாண்கூர்த்த
மதிகளின்மதியளித்த வண்புதன்மதியேயென்ன
நிதிவளப்பன்னாட்டுள்ளு நிவந்ததுபாண்டிநாடு. (௩)

துங்கமன்னின்றேடென்னத் துறுவளமடைந்திலேமென்
றங்கனகர்த்தநன்று டயர்ந்தவ மதிப்புற்றிங்குத்
தங்கமென்றேதுநாடாய்த் தனிப்பறந்தந்தரத்திற்
றொங்கவண்மல்லன்மல்கிச் சுரப்பதுபாண்டிநாடு. (௪)

இகலொரீஇச்செழியராள விருமைகொண்டன்றிந்நாடு
பகருநின்மரபில்வந்த பார்த்திவர்க்கெனையுங்காப்பாய்
புகன்மதியெனமதிப்பாற் போந்திரந்தாங்குநீக்க
ணகனமருலருநிற்கு மணியதுபாண்டிநாடு. (௫)

வறியவர்மெலியுநோயர் வன்கணர்படிறர்சிறிற்
குறியவர்கற்குநூலிற் குறைந்தவர்பதியாலென்று
சிறியவர்மடமைசான்ற சிந்தையர்சான்றோராஞ்சொலு
யெறிதருவாரின்னோரை யில்லதுபாண்டிநாடு. (௬)

துய்யபஞ்சவன்பெண்வேள்வித் தொகுபலபண்டமூண்டு
நையுமோர்பாரிடத்தி னனிவிடாய்தணித்திட்டாங்கு
மையதீவினையரேனும் வன்பவவிடாயுந்தீர்க்கும்
வையைமாநதியுஞ்சூழும் வளர்ந்ததுபாண்டிநாடு. (எ)

ஆலவாய்கானப்பேரு ராடானைபுனவாயில்குற்
றாலமேடகம்பரங்குன் றப்பனூர்சுழியல்புத்தூர்
மாலிராமேச்சுரம்பூ வணங்கொடுங்குன்றுவேப்பெல்
வேலியாந்தலமுறுப்பா மேயதுபாண்டிநாடு. (அ)

வேதகந்கீதமெங்கும் வேள்விசெய்சாலையெங்கு
மூதறப்புறங்களெங்கு மொய்கடிமணங்களெங்கு
மேதகுவிழாக்களெங்கும் விரிமகரிகைகளெங்கு
மாதவர்குழாங்களெங்கு மங்கலவள்ளையெங்கும். (௯)

வேறு

கங்கைமாநதி கடற்றலை மகனெடுங்கலப்பப்
பொங்குநேயமிக் கெழுவழிக் கொடுசெலல்போல
வெங்குமேவிவிண் ணிடைப்படர்ந் தொளிரும்வெள் ளெழிலி
செங்கணயிர முடையவன் றிசையினிற்சென்ற. (௰)

அங்கவன்புடைப் புணர்ப்புநீ ரனைத்தையுமயின்று
தங்குபோகமுற் றுந்திளைத் தங்கண்முற்சார்ந்த
புங்கநீர்நிறை யமுனைதன் பிறப்புழிப்போதப்
பொங்குவானெறி மீண்டென மீண்டனபுயல்கள். (௰௧)

இன்னவாறெழு மெழிலிமுத் தமிழ்முனிக்குண்டு
முன்னநீயுமிழ்ந் ததிற்செருக் குற்றதுமுந்நீ
ரன்னதுங்கெட மடுத்துமென் றறைந்திடச்செலலபோற்
றென்னநாட்டுறு பொதியமேற் சேருபுமொய்த்த. (௰௨)

பம்பிவிண்ணிடைப் படர்தரு கருங்குயின்படலம்
வம்பின்மாமில பாமொரு வதுவொடுமலைத்து
வெம்பவாட்டுவெவ் வேனில்வேந் தாண்மையின்றகுதி
யிம்பர்நன்றென நக்கென மின்பலவிளைத்த. (௰௩)

2

நிவந்துநீர்க்கரு வூறிய மைநிறநீள்வான்
கவன்றுகோவுற வேனிலோ டெதிர்த்துமுற் கனன்று
துவன்றியாகுல முறவிடித் ததன்சடங்தொலைப்பான்
கவண்கல்வீசிய காட்சியிற் பொழிந்தனகரகம். (௰சு)

பன்னிறத்தவொண் மணியினங் குயிற்றியபான்மை
யென்னவிற்றிகழ் போகிவிற் குனித்துரு மென்னு
மன்னுவண்முர சார்த்துவெங் கோன்முறைவழியிற்
றுன்னுவேனிலும் வெங்கிடக் கூரம்புசொரிந்த. (௰ரு)

நயமடுத்தமைம் முகில்பொழி யம்பினுணையாக்
கயமடுத்திடு வேனிலின் வெந்தொழில்கழிந்த
தியமடுத்திடச் சமர்புரி யிருவர்கடம்முட்
பயமடுத்தவ ரோடுரு தெதிர்வரோபாரில். (௰சா)

கமமுறும்படித் தண்கடற் பருகியகருங்கார்
சிமயநீடிய பொதியமேற் செறிமழைபொழித
னமதுகொற்றவை காளையார்முடிமிசை நறிய
நிமலநீர்த்திரு மஞ்சனமாட்டுத னேரும். (௰எ)

எண்ணிலாப்பெருந்தவமியல் குடமுனியினைமுன்
கண்ணுறும்படி யடைந்தவோர் கடலவற்காணாஉ
வுண்ணிறைந்ததன் னுவர்க்குண மொழிந்துபல்லுருவ
மண்ணிமீண்டென விழிந்தன பொதியமின்றருவி. (௰அ)

உதித்தவீட்டிருந் தொண்பொருள்பற்பல கருவி
மதித்தகுங்குமஞ் சாந்தகில்பொன்மணி மருவிக்
கதித்தகொங்கையர் கணவர்பாற்சேறலைப் பொருவி
யதிர்த்திழிந்தன மகிழொடுதேக்கெறிந் தருவி. (௰கூ)

பல்வழிப்படு மூதியப் பொருளெலாம் படியின்
மல்வழிப்படு வழூதிதன் கோசநண்ணியல்போற்
செல்வழிப்படு மருவிக ளொன்றியேசேர்ந்தோர்
நல்வழிப்படச் சாரலினண்ணிய வன்றே. (உ௰)

பொருவின்மாமல யந்தரு மருவியாம் புதல்வி
குருவில்வாளுத ஞூசிகைக்குமிழ்முலைக் கோங்கு
மருவுதோட்பணை கோடலங்கையையு மன்னிப்
பொருனையென்னுமோர் பெயர்கொடுநடந்தனள் புவிமேல். (உக)

கோடெறிந்தெதிர் கயத்தலையடர்ந்தடல் கொண்டு
நாடுமங்குச பாசமுந் துதிக்கையு நயந்து
நீடுகுஞ்சர சுமுகமேவிக்கட னீர்தோய்ந்
தாடிமுன்னவற் போன்றதாலறல்விரி பொருனை. (உஉ)

எறிந்தவேலினு லெதிர்த்ததிண் மாமரஞ்சாய்த்துச்
செறிந்ததண்கடம் பணிந்துபைஞ் சிகண்டியைமேவிக்
குறிஞ்சிபுக்குறை குறவர்தம்மாதினை மணந்து
முறிந்திடாவலி முருகனைப்போன்றது பொருனை. (உங)

கொன்றைவேய்ந்துசெம் மானிடமேந்திநீள் கோட்டுக்
குன்றநேர்பொரு மத்தியையடர்த்துரி கொண்டீங்
கொன்றுமம்புலி முடிமிசையணிந்துசே வுந்திப்
பொன்றவில்கறைக் கண்டனைப்போன்றது பொருனை. (உச)

குலவுதண்டுவாள் கொடுமரந்திகிரிசங் கேந்தி
மெலிவில்பாடிபுக் கிழுதுபான்மிடாவொடு மிசைந்தாச்
கலகிலாய்ச்சிய ரகமுறுகற்பினைக் கவர்ந்து
பொலியுமாயனைப் போன்றது புதுப்புனற் பொருனை. (உரு)

கருவியாகியங் கலையவளந்தனங் கலந்தே
ருருவமாமரை மேவிநால்வாயுமுற் றுலகி
லொருவிலாவிக டந்துபன்னியமழு முற்றுப்
பொருவில்போதனைப் போன்றதுபுதியநீர்ப் பொருனை. (உசு)

புனனிறைந்துள கடலெனும்பதியைநீர்ப் பொருனை
யெனுமொர்கன்னிகான் றண்ணடைநெய்தலை யேய்ந்து
தனஞெமுங்குறத் தழீஇவிராய்மணந்ததா லவ்வவ்
வினமினத்தினை வேட்குதல் வையகத் தியல்பே. (உஎ)

வேறு.

உக்கிரமாறனுடொட் டும்பர்கோனுக்கேயென்றுந்
தக்கசீர்க்காரைக்காத்தார் தருபிணைபிழையாவண்ண
மிக்கவான்மழைதகப்பெய் வித்திடல்கடமைத்தென்னி
னக்கவின்வளஞ்சொல்வாரா ரைந்திணைவளமுஞ்சொல்வாம். (உ௮)

குறிஞ்சி.

ஒருமலையுதித்துக்கையா லொருமலைகுனித்துவெள்ளி
யொருமலையிருந்தாற்கூடி யொருத்தியீன்றளிக்கத்தோன்றி
யொருமலைவேட்டகம்புக் குளவுரிமையினூற்பேயா
லொருமலைபுகுந்தாற்காத்தோ னுவந்துகாப்பதுகுறிஞ்சி. (உ௯)

முருகுலாங்கூந்தன்மாவை மூந்துநல்கியவலாரி
முருகவேளைக்கண்டாட முகில்கண்டுமயில்களாடு
மருகனைமாமன்காணூஉ மகிழ்வுறமாமனூர்தி
மருகனூரூர்திகாணூஉ மகிழ்வுகொண்டாடனேரே. (௩௰)

கொம்புளவேங்கைமீது கொம்பிலாவேங்கைபாயக்
கொம்புளநாகமீது கொம்பிலாநாகம்பாயும்
வம்புளவெற்புமீது வம்பிலாவெற்புப்பாய
வம்புளவண்டுமீது வம்பிலாவண்டுபாயும். (௩௧)

வரைமிசைக்கிளைத்துநீண்டு வளர்ந்துவான்மீன்கடோய்ந்து
வரைசெயற்கரிதாய்த்தூற்று மன்னியவரைகளீட்டம்
வரைசெயுங்கயற்பதாகை மாறர்முன்னுண்டார்தம்மை
வரைசெய்துகணித்துக்காணும் வழிக்கொருதுணையாய்நிற்கும். (௩உ)

இறவுளரிதைவிதைப்பா னிரும்புனந்திருத்திக்கிண்டி
யெறிகதிர்மணிக்கற்குப்பை யெடுத்தயற்புறங்குவிப்பார்
குறமினூரவற்றையெல்லாங் கோத்தெறிகவண்கல்லாக்கி
மறவரைமீட்டும்வேலை வாங்குவாரிதண்மேலோரே. (௩௩)

வேடுவரொடிபோக்கோதை வேழநீர்பருகுமோதை
மாடுளகொடிச்சிமார்கண் மாத்தினையிடிக்குமோதை
நீடருவிகள்வீழோதை நெருங்குபல்விலங்கினோதை
பாடுமிவ்வைந்துங்கூடிப் பஞ்சதூந்துமியைத்தாழ்த்தும். (௩௪)

சண்முகன்படைவீடாறுட் சந்தநாசலமுந்திங்கட்
டண்முகப்பிடியைவேட்ட தனிப்பரங்குன்றும்பூவிற்
பண்முகவளிகள்சூழும் பழமுதிர்சோலைவெற்பு
மண்மியோர்பாதியாங்க ணுயின்வேறுரைப்பதென்னே. (௧௫)

மாதவனூர்திதன்னை வாய்ப்பெய்தவழுவைப்பாற்று
மேதுவின்மயூரம்பூசை யியற்றித்தீர்வுற்றுத்தூய்தாய்
மேதகுகுமரவேளை வெரிநிடைச்சுமவாநிற்குங்
கோதிலாக்கிரியுமந்தக் குறிஞ்சியேற்புனையப்போமோ. (௧௬)

முல்லை

வேறு.

முன்றுளோர்பிருந்தையுடன் முயங்கிநலனுகர்மாலோன்
பின்னுளுமவ்வேட்கை பெரிதாகப்பல்லுருவ
மன்றுநின்றவளுருவாம் வனங்கள்பலவளர்வனமீ
தென்றுநெஞ்சுவந்துகலந் திருந்துபுரப்பதுமுல்லை. (௧௭)

இன்னிலத்தரோயண்ட ரெழிலாக்களேதேனு
துன்னுபயமேயமுதந் துறுவனமேகற்பகமாங்
கன்னவிரேறுட்காவலனுங் கரியவனுங்கண்கூடா
மன்னிதுவேசுவர்க்கமன்றி மற்றைதவான்கண்டவர்யார். (௧௮)

பொதுவியர்கள்பல்லோர்க்கும் போகம்வெவ்வேறாட்ட
மதுகையிடவர்ச்சாய்த்த மாயவனுகியபுத்தேள்
புதியவுருப்பலகாட்டிப் பொற்புறநிற்றன்மான
மதுவொழுகுமிதழ்விரித்து மலர்ந்துநிற்கும்பலகாயா. (௧௯)

தொறுவியர்நம்மெயிற்றினுக்குத் தோற்றுடைந்ததளவரும்பி
முறுவலித்தவென்னென்று முனிவரும்பித்தாநகைப்பத்
துறுமலைகண்மீட்டுமேதே தொழின்மிருக்கத்தம்மியற்கை
யறிகிலராயலர்விரிப்பார்க் கியியல்பேயெனச்சிரிப்பார். (௨௰)

எள்ளிறுங்குசாமைபய றீரவரைகோத்திரவங்
கொள்ளுழுந்தாடகமலைபோற் குவிப்பாரவ்விடையுள்ளார்
தெள்ளுசுவைப்பாலட்டுத் தீந்தயிர்தோய்த்தேடெடுத்துக்
கொள்ளருவெண்ணெய்மலைபோற் குவிப்பாரவ்விடையில்லார். (௨௧)

ஆயர்விடைதழீஇயடக்கி யம்மடவார்மார்பகத்துத்
தோயவெழுயானைகளைத் தோண்மலைக்குள்ளடக்குவரந்
நாயகர்வாயெழுகுழலி னுதவொலியினையந்த
வாயமகளிர்தகைடயு மார்பினுக்குள்ளடக்குவரால். (௩௨)

பெரும்பசுவின்பான்மணமும் பெய்துருக்குநெய்மணமு
மரும்புதளவின்மணமு மாய்ச்சியர்மெய்யியன்மணமும்
விரும்பிநனிகுமிழ்மரமும் வீநாசிபலபெற்று
விரும்புவிழியிலவைமோக்கா ரெவரவரின்மூக்காரே. (௩௩)

பசுக்களைத்தன்னுதரத்தின் பாற்காட்டித்தமையென்று
நசிப்படையாப்பாலனஞ்செய் நன்மாயனிற்சிறந்தே
பசுக்களெலாந்தம்முறுப்பிற் பசுபதிமுற்றேறவர்களை
வசிப்பியலாற்காட்டியுயிர் வளர்க்கும்வனவனப்பெளிதோ. (௩௪)

வேப்புடையார்குலத்துமுனோர் மீனவன்வேட்டம்புரிந்து
நாப்புடையார்நீருலர்ந்து ஞாலமிசைச்சோர்ந்துவிழக்
காப்புடையாவவன்விரதங் காப்பான்காட்சிக்கரனு
ராப்புடையாராந்தலமுன் னும்பலவாங்குரைப்பதெவன். (௩௫)

மருதம்.

வேறு.

அந்தரத்தர சாட்சியுண் டெனினும்பல்லவுணர்
வந்துவந்திடை யூறுசெய் வறுமையைமறுப்பான்
மைந்துமிக்குயர் மன்னர்நம் படைத்துணைவேண்டி
யிந்திரன்புரந் தாளுவ தெழில்வளமருதம். (௩௬)

அங்கண்வானதி மேலதென் றிடிலவணதனீர்
தங்குமேரிசெய் யெத்தனை விளை*சொலெத்தனையென்
றிங்கணெண்ணுகான் முயன்மருப் பெனவதையிழித்துப்
பொங்கியார்ப்பொடு வந்தது பொருநைமாநீத்தம். (௩௭)

மலயமேயசெம் மணிக்குவைகளைவிழைஇக் காண்பான்
செலவினீர்நோ ரேறுவசெல்லுவ சிலமீன்
குலவுவேலையுள் வெண்மணிக்குவைகளை நோக்கச்
செலவினீரொழுக் கின்வழிச்செல்லுவ சிலமீன் (௩௮)

---

*சொல்-நெல்.

பெருநெடுங்குலை யடர்த்தடங்காவரு பெருக்கைக்
கருமைமண்டொடு கருவியினடக்கியே காலின்
மருவிநேர்செல வுய்த்தனருழவர்கண் மதமா
விருமையங்குசத் தடக்குமம்மள்ளர்பே ரெடுத்தார். (௪௯)

நலமுலாமரு தத்திடைப்பொருநைநன் னதியிற்
சுலவிநீடிய கால்பலபிரிந்திடு தோற்ற
முலவுதிங்களின் விம்பநின்றுண்ணிலாக் கற்றை
பலவிரிந்திடு பான்மையைச்சிவணுறும் பரவி. (௫௦)

இந்நாட்டுள படப்பைகட் கவற்றெழிலெல்லா
முந்துமன்பொடு நோக்குறக் கால்பலவுற்றுக்
கொந்துதெண்டிரைப் பொருநைதண் ணடைகொடுலாவு
மந்தநீர்மையாற் றண்ணடை யெனும்பெயரறைவார். (௫௧)

வேறு.

மள்ளர்கூக்குரற்கலிப்பு மகளிர்வாய்க்குரவையார்ப்பும்
வெள்ளநீரடையொலிப்பு மிகுமதகொழுக்கிரட்டும்
பள்ளவாய்மடைமுழக்கும் பண்ணைநீர்பாய்தெழிப்பும்
வள்ளியல்பறையதிர்ப்பும் வாய்ப்பெயுங்கடற்கரைப்பை. (௫௨)

உழவர்கடாம்புமாட்டி யுறுநுகம்பிடரினூட்டி
மழவிடைபகடுபூட்டி வலக்கையின்முட்கோனீட்டி
யெழின்மலர்க்கற்பநாட்டி னிறைபதமுடிமேற்சூட்டிக்
கொழுநுதியேரையோட்டிக் குறையெலாமோட்டுவாரால். (௫௩)

உழுதனர்கழனியெல்லா மொழுகிளந்தொள்ளியாக்கிப்
பழுதினோர்பரம்புபோக்கிப் பளிங்கெனச்சமப்படுத்தி
விழுமியவின்சொல்வித்தை விதைத்தார்மாணவருட்செய்யை
மெழுகுசெய்தின்சொல்வித்தை விதைக்குமாசிரியரொத்தார். (௫௪)

சொல்லினுட்பொருளாயுள்ள தூயகாளீசன்மெய்போ
னெல்லினுட்பொருளாயுள்ள நீண்முளைவௌர்த்துத்தோன்றிச்
சொல்வினதுருவாயுள்ள சுவணவல்லியின்மெய்போல
நல்லியற்கவுரம்வாய்ந்து நனிதழைஇப்பசந்தமன்றே. (௫௫)

கோட்டையுட்டொகுத்தவித்தைக் கொண்டுசெல் பணையில்வீசி
நீட்டிமுன்வகைசெய்திட்ட நீர்மைசால்கருங்கான் மள்ளர்
மீட்டுமச்செயல்விரிப்பார் மேயநாறுகள்பறித்து
நாட்டுபற்பலவயற்க ணட்டனர்விருத்திசெய்தார். (ருசு)

பருவமதுணர்ந்துமள்ளர் பாய்ச்சுறுபயமடுத்து
மருவுநெற்பைங்கூழெல்லாம் வளர்ந்தனபழனந்தோறுங்
கருவுயிர்த்திட்டதாயர் கனிசுவைப்பயம்புகட்டப்
பருகிமெய்தழைவுற்றோங்கும் பச்சிளஞ்சேய்கண்மான. (ருஎ)

பெற்றதம்மகார்தமக்குப் பிணியுறிற்றந்தைபாராய்
வுற்றுரைகுறிப்பிற்றீர்வை யுஞற்றியவெழுமாய்மார்போற்
சுற்றிளம்பயிர்க்கூறுகிச் சூழ்களைகளைகவென்று
முற்றியகளமரோத முயன்றனருழத்திமார்கள். (ருஅ)

தம்முகத்தோடெதிர்த்த தாமரைகளைந்தார்மீட்டுந்
தம்முகநிழலைப்பற்பல் தரங்களைந்தொழிந்தின்றென்றுச்
செம்முகம்வெயர்த்ததையுற்ற சிந்தையர்நிற்பவாங்கோர்
பைம்முகத்தேரைநீரிற் பாயமுற்றுயவென்பார். (ருகூ)

காவியைக்கண்கள்காட்டக் கைரவங்களைவாயோத
மேவுசைவலத்தைக்கூந்தன் மேல்விழுந்தேகுறிக்கத்
தாவவைகளைந்துஞ்சாய்த்த சலசமுமுழத்திமார்கை
பாவியபிறர்தெவ்வுஞ்சாய்ப் பவர்கடம்பகைநீப்பாரோ. (சுO)

ஏரியல்குயங்கைகாலோ டிகல்செயல்பெரிதுன்றும
லாருயிருணவினுக்கூ றுகியவெனக்களைந்த
வாரிசங்களைநீர்சிந்தி வயற்கரைசேர்ப்பாரந்தக்
காரணக்குறிதேர்வையா கரணரோகடைசியோரும். (சுக)

கருமைசால்கடைசிமாதர் களைகட்டபைங்கூழெல்லா
மருதநன்னிலத்துவேந்தன் வகுத்திடுகாவற்கஞ்சித்
தருநிழலமருந்தேனு தலையணுந்தாசைகூர்ந்தே
யுருவகாநீட்டிநிற்க வுயர்ந்துமேல்வளர்ந்தமாதோ. (சுஉ)

உலகெலாமுயிர்த்துக்காக்கு மொருவன்காளீசன்வேணி
நிலவுதண்கதிர்பரப்ப நீள்கருப்பற்றிமுற்றித்
தலையுயர்பைங்கூழன்றுற் றாழ்ந்தெனக்குனிந்துநின்ற
கலவுசெய்நன்றியுள்ளுங் கனமுளார்வணங்கார்கொல்லோ. (௬௩)

செவ்விதின்முதிர்ந்தசாலி திண்ணியகூன்வாள்பற்றி
யவ்வயற்கருங்கான்மள்ள ரரிந்தரிபல்லவைத்தா
ரிவ்வரிகளிலொவ்வொன்றே யிவ்வுலகோம்பச்சாலு
மவ்வரிதொழினீத்துக்கை யாற்றுகவென்பாரானர். (௬௪)

அரிகளைப்புரியாற்கட்டி யடித்துச்செங்களப்போர்செய்து
விரியவீழ்த்திப்பகட்டான் மிதிப்பிக்குமள்ளரேபோ
லரிகளைப்புரியாற்கட்டி யடித்துச்செங்களப்போர்செய்து
விரியவீழ்த்திப்பகட்டான் மிதிப்பித்தாரப்பேராளர். (௬௫)

துவைத்துவைநீத்துச்செந்நெற் றூற்றிக்குன்றெனக்குவித்து
நவைத்திலாதாறிலொன்று நல்கிமன்னவர்க்குமீந்த
வவைத்திடப்பண்டியேற்றி யைம்புலத்தாறுமோம்பிச்
சுவைத்திடமாடஞ்சேர்த்தித் துய்க்குநற்குடிகளெங்கும். (௬௬)

இஞ்சிபைங்கமுழியினோங்க விருங்கமுகமுகினோங்க
மஞ்சள்கன்னியின்மேலோங்க மற்றவைதெங்கினோங்க
மிஞ்சவைகற்பத்தோங்க வெள்வளையரைக்குலங்க
ளஞ்சிருசிதியினோங்கு மணியதுமருதவைப்பு. (௬௭)

உலகெலாமுருவமானோ னுயர்பிரமரந்திரத்தி
னிலவு மீராறின்மேலா னித்தியமாகிநின்ற
தலமுதலுண்மைச்சைவ சமையாசாரியர்தேவா
மலிபலதலங்கள்கொண்ட மருதச்சீர்வகுக்கற்பாற்றோ. (௬௮)

நெய்தல்.

வேறு.

நாற்றிசைபுரக்குநால்வர்கடம்மு ளூட்டுதக்கவாசியென்றோதும்
வேற்றுமைத்திசையாளிருவருக்கின்றி வெள்குறநானிலத்திரண்டிற்
சாற்றியவொன்றுகீட்டிசைக்கிறைவன் றன்வயக்காவலிலமைய
மேற்றிசைக்கிறைவன்காப்பினைப்பூண்டு மேதகுவளத்ததுநெய்தல். (௬௯)

வேறு.

முன்னரோர்பொய் மொழிபழிகேதகை
யின்னுந்தீர்ந்தில தீர்ங்கடளுந்தோய்ந்
துன்னுஞ்சைவம் பழிக்குநர்க்குய்வேனோ
வென்னவாய்மலர்ந் தென்னவலர்ந்திடும். (எ௦)

பின்னையாளுரம் பெட்டவன்முன்புகா
னன்னலாருடை யாடைகொண்டேறுசீர்
மன்னவேட்டவன் வாழ்மனைவாயினின்
றென்னநாகங்க ளீர்ங்கரைமல்குமால். (எக)

விரவுவார்திரை வீசியமுத்தமு
மருவுபுன்னை மரத்துகுமொக்குளுங்
குருவினென்றெனக் கோக்குநுளைச்சியர்
பரவளிக்குலம் பாய்தலோர்ந்துள்குவார். (எஉ)

உரவுநீடிமி லோட்டப்படுமொலி
பரவர்வீசிய பாசமிழுப்பொலி
விரவுமங்கலர் மீன்விலைகூறொலி
பரவையார்ப்பொடு பாயுமெதிரொலி. (எ௩)

பரமனாரும் பரதவராகியோர்
பரவமாதினைப் பாணிபிடித்தெலாம்
பரவவாழும் பதிமுதற்பஃறலம்
பரவுநெய்தலின் பண்பெவர்பாடுநர். (எ௪)

பாலை.

கோங்குபாடலங் கூருங்குராநெலி
தாங்குமீந்தொடு சார்சிலமல்கிச்சூழ்
ஞாங்கர்வாண்மே னடந்தவள்காப்பச்சீ
ரோங்குபாலையு மோதுந்தகைத்தரோ. (எ௫)

திணைமயக்கம்.

குறிஞ்சியும், முல்லையும்.

(வேறு.)

மலையின்மேவிய மஞ்ஞைகளாலுவமுல்லைத்
தலையில்வாரணங் கண்டுடன்றானுநின்றாடுந்
தலைமெய்யாயிரு தானவராமொருவடிவி
னிலவுகூறுகளாகிய வுறவினைநிகழ்த்தும். (எ௬)

முல்லையும், குறிஞ்சியும்

கருமைமன்னிய கான்குயில்கூவுறச் சாரற்
பெருவரைக்கிளி பேதையர்மொழியெனப் பயிலு
மிருமைமேவிய குரவர்களிசைத்ததை யிசைக்குந்
திருவின்மேவிடை மாணவர்தஞ்செயறேற்றும். (எஎ)

குறிஞ்சியும், மருதமும், மருதமும், குறிஞ்சியும்.

கருவரைப்பக டுறுபணைக்கரும்பினைக் கறிப்ப
மருதம்வாழ்கரும் பகடுகள்வரைத்தினை மேய்வ
விருநிலத்துமாக் களும்பரிவருத்தனை யியற்ற
விருதிறத்தவிம் மாக்களுமதுசெய லேய்க்கும். (எஅ)

குறிஞ்சியும், நெய்தலும், நெய்தலும், குறிஞ்சியும்.

வரைக்கணுகங்க ணெய்தனுகங்களில் வாவத்
திரைக்கருங்கொடி கறிக்கருங்கொடியிற்றாய்ச் சேர்வு
தரைக்கண்மற்றவை பரற்பரம்பெயர்கள்சார்ந் தனவென்
றுரைக்குமொற்றுமை யோர்ந்துறவுறுசெய லுறழும். (எகூ)

முல்லையும், மருதமும்.

வனத்தினான்பயம் வயனிறைபயத்தொடு மருவி
யனத்தினாலும்வே றறிதரவரியதாய்க் கலவல்
சினத்தினாலெதிர் சென்னிதாழ்ந்தளித்ததென் னவனிற்
றனத்தின்மங்கைகா ளீசன்மெய்க்கலந்ததைச் சாற்றும். (அ௰)

மருதமும், முல்லையும்.

மருதநின்றெழு வயலையம்பொற்கொடி வனத்துத்
துருமமென்னும்வண் குருந்தினுனுழைந்துமேற் றுலங்கல்
பருவநேர்தரு சுவணவல்லிக்கொடி பண்டு
மருவுகாளலிங் கத்துளார்ந்திலங்குதன் மானும். (அக)

முல்லையும், நெய்தலும், நெய்தலும், முல்லையும்.
மருதமும், நெய்தலும், நெய்தலும், மருதமும்.

முல்லைவெண்மல ராற்கடற்சங்கினை மூடப்
புல்லுமங்கவை வெண்மணியாலவை புதைக்கு
மல்லலம்புய நெய்தல்கள்கூம்புகான் மகிழு
மொல்லுநெய்தலன் னவைகுவிதருபொழு துவக்கும். (அஉ)

நாற்றிணையும்.

வேறு.

மலைத்தேனுவ லூர்க்கோன்சொல் வனத்தான்பானு வரசுமொழி
யுலப்பினெய்தன் மலர்ப்பிரச முயர்காழிக்கோ னுரைபொக்குந்
தலைப்பெயம்மூன் றையுங்கொண்டு தடத்திலார்தேம் பொற்கமலங்
குலத்தேவாரத் திருமுறையாங் கோசம்புதைபொன் மன்றேக்கும். ()

ஐந்திணையும்.

பலவின்சாறுங் கான்வெள்ளிற் பலவின்சாறும் பணையரம்பைப்
பலவின்சாறுஞ் சுரநெல்லிப் பலவின்சாறு நெய்தலின்வா
யலருந்தேனும் பூஞ்சாறு மைந்துங்கலவி நிறையவல்கள்
குலவும்பெருமைத் திருவருட்பாக் கோசங்களையொத் திலங்குறுமால்.

வரைகொள்வலிய வச்சிரமும் வன்பானுகச் செம்மணியு
மரைகொண்முல்லைச் சுரபியும்வன் மருதத்தருவும் பதுமமுநீ
டிரைகொள்கடற்சங் கமுமாமைந் திணைப்பல்பொருளுந் தலைக்கூடிச்
சுரைகொளுடு பலகொலெனச் சுரருண்மயங்க மயக்குறுமால். (அரு)

இன்னும்பல்ல வளங்களுள வெழிலார்பாண்டி நாட்டணியைப்
பன்னப்பன்ன சேசனும்வாய் பலவாயுற்று முற்றனனுண்
சின்னஞ்சிறியே மேதுரைத்தேந் திகழுங்கானப் பேரூராம்
பொன்னம்பதியின் வியன்சீரும் புந்திக்கெட்டி யவாறறைவாம். (அசு)

நாட்டுப்படலமுற்றிற்று.

---

ஆக செய்யுள் ௱௰௭.

---

# நகரப்படலம்.

சொற்பதப்பொருளதாய்ச் சுவணவல்லிதாய்ப்
பொற்புறப்படருபு பொலியிடத்ததா
யெற்பகலொளிசெய்கா ளீசனுழுயர்
கற்பகமுறைவது கானப்பேர்நகர். (௧)

வழுதிநாட்டினியதே வாரப்பாசுரந்
தழுவுமீரேழுமா தலத்தொன்றாயது
வழுவிலாவன்போடு வதிவர்ழும்மலங்
கழுவுநீரதுதிருக் கானப்பேர்நகர். (௨)

மலைமகளுறத்தரும் வாமபாகநீர்த்
தலைமகளுறத்தரும் சடிலவிடுபா
லலைமகளுறத்தரு மாக்கமெய்க்கலை
கலைமகளுறத்தருங் கானப்பேர்நகர். (௩)

விதியுறவருள்வது மேயநல்லற
நிதியுறவருள்வது நிலவுவான்முதற்
பதியுறவருள்வது பகருமின்பமேற்
கதியுறவருள்வது கானப்பேர்நகர். (௪)

விண்மணிசூழ்தர விரிந்தவைபமாம்
பெண்மணிமுகநிகர் பெற்றித்தாயது
நண்மணியொளிர்தமிழ் நாடகன்வலக்
கண்மணியனையது கானப்பேர்நகர். (௫)

புறநகர்.

வேறு.

பொன்னகர்ச்சூழ்ந்தைந்தென்னப் புகன்றிடப்பட்டகாவிற்
கென்னெழிலுளதென்றேசி யெழீஇப்பொருவான்சென்றவ்வூர்
மன்னவனூர்தியேழும் வழித்தடைசெயக்கீழ்த்தாத்தி
யன்னதைவளைந்தெனச்சூழ்ந் ததுமரனளப்பில்சோலை. (௬)

பலர்நுகர்தரநிவந்த மன்மரம்பொதுள்பொதும்ப
ரலர்தருநெடியகோட்டி னடர்ந்தமஞ்சரிபரப்பு
மலரைமேற்போர்த்துநின்ற மலர்த்தலையுலகந்தன்னை
மலர்தலையுலகமென்ப வருத்தபல்விகாரந்தேர்ந்தோர். (௭)

மதுக்குடம்விரிந்தாற்போன்று வள்பொழின்மலரின்வாரு
மதுப்பெருக்கார்க்துழுந்நீர் வயிறுகண்டப்பாற்பாயு
மதுப்பெயர்நதியிங்குள்ள வாய்மைகண்டநுமானத்தான்
மதுக்கடலொன்றுண்டென்றே வழங்கினர்வையத்தோரே. (அ)

ஒவ்வொருமலருந்தேவ ருறையுளாப்பெறீஇத்தழைத்த
செவ்விநந்தனத்துவீழ்ந்து திமதுப்பருகும்வண்ட
ரவ்வியலமரரில்லத் தரும்பொருளளைத்துந்துய்ப்பான்
கவ்வினர்கொள்ளைகொள்ளுங் கரியதானவரைமானும். (கூ)

சேவரைதுவசக்கைமா தேவனுர்பொதுமையின்றி
மீவருமீசநாம மேவியதென்னப்பாரிற்
பூவெனப்படுவதிந்தப் பொறிவாழ்பூவெனச்சிறந்து
மாவுயர்கமலம்பூத்து மலிபலதடங்கள்சூழும். (ம)

இருமருப்பினிலொன்றில்லா விபமொன்றைச்சூழ்ந்திறைஞ்சி
யிருமருப்புடையயாங்க ளிருவினைதுமித்தும்வானி
ரிருமருப்புடையயானை யெம்மைத்தாழ்ந்தேத்திலெம்மி
னிருமடங்கிடர்துடைக்கு மென்னுமால்பானைபல்ல. (கக)

வாரியில்யாத்தவேழ மதப்பெருக்கறுகாற்கூட்ட
மார்தலினுலடங்கு மல்லதேலாழியெட்டாஞ்
சேருமக்கூடமெல்லாந் திமில்களாந்தறிகளெல்லாஞ்
சீரியகூம்பாமேன்மொய் சீழுதம்பாயாபன்ே. (கஉ)

பாற்கடற்பிறந்துவந்த பரித்தலைகுரமிதித்து
மீக்குலவென்றாழேற மிளிருமோராழித்தேரை
யேற்கவானீர்த்துச்செல்லு மெழுமாவுமெழாமாவாக
மேக்குறப்பாய்பல்வாசி விசித்தமந்திரங்கள்பல்ல. (கங)

கதிகளோரைந்துங்காட்டிக் கவனவேகத்திற்சென்று
குதிகொளுந்துரகதத்தின் குழாங்கள்வாயுமிழ்விலாழி
பதியுமவ்வயனச்சேற்றிற் பருமச்செம்மணிகள்வீழ்ந்து
வதிதராவென்னிலாங்கு வழுக்குறுதேவர்செல்வார். (கச)

நண்ணுநாலுருள்கள்பூண்டு நாற்றிசைச்செல்மாண்பேம்யாம்
விண்ணகத்திரவிதேவன் மேவுபுலூரும்வைய
முண்ணிலவுருளொன்றேபூண் டோர்திசைக்கேபோநீர்த்தத்
திண்மைகாற்காற்கூறென்றே சிரித்தெனவொளிருந்தேர்கள். (கரு)

உயர்ந்திடுங்கொடிகண்மேலா லூன்றியதணிமட்டன்று
வயந்தருகுறிப்பிற்கென்றே வகுத்துளை நரப்பொலிந்து
பயந்தருபான்மையில்லாப் பகைஞர்தானையையுஞ்சாய்க்குஞ்
சயந்தனமாகப்பூண்ட சயந்தன சாலைபல்ல. (௧௬)

கூற்றுநேர்படினவன்மெய்க் கூறிரண்டாக்குங்கோளார்
சீற்றமேற்கொள்ளின்விண்ணின் சீயத்தின்மேலும்பாய்வார்
மாற்றுதற்கரியதாய மானமேபூணுப்பூண்பார்
தோற்றவெங்காண்பாரன்றித் தோற்றுவெங்காட்டார்வீரர். (௧௭)

தோமரம்வாள்வேல்குந்தஞ் சூலந்தண்டாழிநாஞ்சில்
காமருநாந்தகந்திண் கப்பணம்வீசும்விஞ்சை
நாமவெஞ்சிலைநாண்பூட்டி நற்கணைதொடுக்கும்விஞ்சை
காமன்சேய்பிகர்த்தவீரர் கற்குங்கல்லூரிபல்ல. (௧௮)

முன்னைநாட்சென்னியேற்று முடுகிவந்தியற்றப்பட்ட
துன்னும்வாட்கோட்டை தன்னைத் துவைத்துப்பூவெனமிதித்துப்
பன்னருந்துகள்படுத்த பாழியம்புயத்துவீர
ரின்னகரத்தாரென்னி னிவர்வலியிசைக்கற்பாற்றே. (௧௯)

வேழமாவாதிகட்கு வேண்டுமூண்சமைக்குஞ்சாலை
சூழுநாற்படைக்கியன்ற தோட்டிமத்திகைவாராதி
யேழுயர்கொடிஞ்சிமற்று மெழில்படவமைக்குஞ்சாலை
யாழிவேலாதியேதி யாக்குஞ்சாலைகள்பற்பல. (௨௰)

இடைநகர்.

வேறு.

சுவணமாமலை யினைத்தினமொழிவின்றிச் சூழ்ந்து
கவலயர்ச்சியை மாற்றுவானென்பது கதிரு
மவிர்தாக்குழீஇப் பொலிவினோருழையுறைந் தாங்கு
நவமணிக்கணங் குயிற்றுசெய்குன்றுக ணகுமால். (௨௧)

தரளவெண்மணிக் காவணங்களும்பொனிற் சமைத்த
வரமியங்களும் பளிக்குமாமேடையு மரங்குங்
கரவில்செம்மணித் தெற்றியுமொளிர்மர கதத்தான்
மருவுவேதியுங் கண்கவர்வனப்பின வயங்கும். (௨௨)

தூம்புநுண்டுளைச் சிவிறியுந்துருத்தியுங் குழலுங்
காம்புறழ்ந்ததோண் மாதருமைந்தருங் கைக்கொண்
டோம்புகந்தநீர் புயமுலையூடுற வீசிக்
கூம்பலில்தட நீர்வழிதரக்குடை குவரால். (௨௩)

கதிரும்வாவிநீர் குடைதலிற்கன்னியர் கொங்கை
பொதியுநுண்டுகில் விலகல்கண்டாடவர் புளகித்
ததிகரித்திடு வியப்பினராய்மகிழ் வடைவார்
புதைதனம்வெளிப் படிற்களிப்புறுரெவர் புவிமேல். (உசு)

மண்ணுசந்திர காந்தமாடத்தவர் மார்பிற்
கண்ணுறங்குறு மங்கையர்முகத்தெழில் கள்ளத்
தண்ணிலாமதி கதிர்க்கரஞ்சாளர நுழைக்க
வுண்ணனீர்பெரு கலும்விழித்திடவவ ளேடும். (உ௫)

அம்பொனுக்கிய மாடமேலரமியத் தலத்து
வம்புலாமல ரமளியின்மைந்தர்தம் புதிய
கொம்பனார்கலை நெகிழ்க்கநாண்கொண்டுகண் புதைப்பப்
பம்புமோர்துறைக் கோவைநூல்பாடுவர் குமரர். (உசு)

பளிக்குமாடமேற் பள்ளியினூடிய நல்லா
ரொளிக்கவாடவ ரெதிர்ச்சுவர்த்தோன்றவ ருருவை
விளிக்கவுட்புக முட்டுறீஇவெள்கினர் நிற்பக்
களித்துவந்தவர் குயம்புயமுட்டிடக் களிப்பார். (உஎ)

கூடமேனிலைப் பள்ளிகொளரையினுட் கொண்க
ரோடுமேவிய புதுக்கடிமின்னனு ருறச்சூ
டூடியிற்பொலி தந்நிழன்மாற்றவ ராமென்
றூடவன்னவ ரடிமுடிச்சூடியஃ தொழிப்பார். (உஅ)

மணிசெய்மேனிலை மாடமேலூடிய மடவார்
பணியுமாடவர் சென்னியிற்பதமெடுத் தோச்ச
வணிசெய்நூபுரத் தெழுமொலியரம்பையர் செவியி
னணுகவன்னரு மூடுவரந்நல நயந்தே. (உகூ)

கண்டுகொண்மாமணி மாடமேற்கந்துகம் பயில்கா
லணங்கனாரணி யணியிற்சிந்தியமணி யொன்று
வணங்கிவானவ ரூர்விழவலிந்தவ ருரிமை
யிணங்கமுன்னடை யெதிர்மறையாச்சொலிக் கவர்ந்தார். (௩௰)

சங்கவெண்சுதை திற்றியமாடமேற் சரிக்கு
மங்கைமார்பதத் தலத்தகச்சுவடுகள் வயங்க
றங்குதிம்பயச் சலதியின்மீமிசைப் பரவிப்
பொங்குகோகந தம்பலமலர்ந்தன போலும். (௩க)

சந்தமாடமே னடம்பயின்மங்கையர் தங்கள்
கந்தவார்குழற் பூந்துகணறவொடு கலவி
வந்துகீழ்ப்படி தரவதில்வழுக்கிவீழ்ந் தெழுவார்
மைந்தரன்னதும் பரதத்தோர்வகையென மகிழ்வார். (௩௨)

வாய்ந்தபேரெழின் மாடமேற்பந்தெறி மகளிர்
கூந்தனின்றுதிர் நறுமலர்க்குப்பையைப் பணிசெய்
மாந்தர்மாற்றவுங் கற்பகம்பொன்மலர் குவிப்ப
வாய்ந்திடாதுல வாக்கிழியிதுகொலென் றயிர்ப்பார். (௩௩)

இந்துகாந்தவெண் சிலையினிமியற்றுமா ளிகைமேற்
கந்தவாகனுற் றுறுத்திடுகளங்கநீர் பெருக்கிப்
புந்திதாதைநச் சலுங்கழுவுறுதொழில் பூண்டா
றைந்துநாட்கொரு நாடொழிலொழிவையு மடைந்தான். (௩௪)

வடுக்களில்லா மியத்திடையிருந்தெழின் மாத
ரெடுத்தெறிந்திடு வெண்மணியம்மனை யிருவா
னடுத்துமேற்பதிந் திருந்துபின்விழுவன வறியா
ருடுக்கள்வீழ்ச்சியென் றுரைப்பரவ்வுரையுயோர் பொருளோ. (௩௫)

வதியுமாடமேன் மடவரலொருத்தியெய் யாது
மதியைப்பாங்கிதன் முகமெனத்திலதமுன் வனைந்தா
ளதனையோர்தரா திம்பரார்களங்கமென் றறைவார்
முதலெய்யாமையென் முற்றுமெய்யாமையா மன்றே. (௩௬)

நீனிறத்துகிற் கொடிபலமாடத்து நிவந்து
தூனிறத்தவா னதிப்புனறோய்ந்து பஃறுளிகண்
மேனிலத்துமின் றெங்கணும்வீசுவ கண்டோர்
நீனிறப்புயல் பொழிந்ததென்பார்சுர நிலத்தே. (௩௭)

மொய்த்தநீன்மணி மாளிகைநுழைந்துராய் முன்னு
ளொத்தயாமதி யுடல்கறுப்புற்றிடும் பின்னுண்
முத்தவெண்சுதை மூடுமாடத்துராய் வெளர்க்கு
மித்திறத்தினு லிருபக்கமாயின வென்றும். (௩௮)

பொன்னினுலுயர் பொங்கொளிமாடமே லூடு
மின்னனார்களைந் தெறிதருவெறிமலர் மாலை
மன்னும்வீதிசெல் குமரர்தோள்வீழ்தலு மணத்தூழ்
பின்னராம்பவத் தாயினுமாமெனப் பெட்பார். (௩௯)

மணியுமாடையு மாடையுமுண்டியு மலிந்து
திணிதலாலவண் வறிஞரேயில்லைசிற் சிலராங்
கணுகின்மாடமே ளூடினர்களைத்தெறி யாரத்
தணிகளத்திலூ மூல்விழத்தனடதி யாவார். (௪௰)

உண்ணகர்

வேறு.

தவத்துயர்பொதியக் கும்பசன்கையா சமனித்துத்தாழ்த்திடப்பட்ட
வுவர்க்கருங்கடலும் விந்தமாம்வரையு முற்றனனந்தமாமுனிவன்
றவப்பெருவலிமை தூயகாளீசன்றனைமுனஞ்சூழ்ந்ததாலென்றே (லும்.
துவக்குமுன்னுருவுற் றடைந்துசூழ்ந்தாங்குச் சூழ்ந்தனகிடங்கருமெயி

நொச்சியுமகழு முன்றவஞ்சிறிது நோற்றிலாவிழிவினி னன்றோ
நச்சியஃதுஞற்றி யுயர்தமிழ்முனிவ னக்கியேதாழ்த்தினன்முன்னு
ளச்செயலிந்நா ளகத்தியரநேக வாயிரர்துவன்றினுமாகா
நிச்சயநங்கா ளீசனைச்சூழ்ந்த நிகரில்புண்ணியவலி யெளிதோ. (௪௨)

எத்தகையவரு மெட்டொணுவழலா யெழுந்தருளெம்பிரான்முடியை
மெய்த்திடவயன்பிற் கண்டிடலிந்த வியன்மதின்முடியையுங்காண்பாம்
பத்தருள்ளுறைவோ னடியினையரிபிற் பார்த்திடியாமும்பிற்பார்ப்பா
மித்திருநகரை வளைந்துகம்பீரத் திலங்ககழியினடியையுமே. (௪௩)

உயர்ந்துமேற்புகுந்து நீண்மதிலரண முப்பர்தம்பதங்கடந்ததுநீர்
பயந்துகீழாழ்ந்து பாம்புரிநாகர் பதத்தினைக்கடந்ததேயன்றி
முயன்றுமுன்னையதின் முடியினையேறி முற்றியகடந்தவரில்லை
யியன்றபின்னையதி னடியினைமூழ்கி யிழிந்துகீழ்க்கடந்தவரில்லை. (௪௪)

ஆழ்ந்தகழப்பட் டதகழியென்ன லாய்ந்திடுகாரணக் குறியாங்
கீழ்ந்தவிவ்வகழிக் கப்பெயருலகு கிளந்தகாரணவிடு குறியே
சூழ்ந்தரண்செய்வ தரணியென்றுரைத்தல் சூழ்ந்திடுகாரணக்குறியாம்
வாழ்ந்தவிம்மதிலுக் கப்பெயரெவரும் வகுத்தகாரணவிடு குறியே. (௪௫)

பாம்புரியதனிற் படர்ந்துநீண்டடர்ந்த பற்பகு வாய்ச்சிசுமாரந்
தோம்புரிவாளை யாதியேயமையுஞ் சூழ்ந்தெதிர்த் திடு மிகல்செகுப்ப
வேம்புரியவைதா மிலக்கியஞ்செய்யாவிடின்மதிற்பொறிகளேயடர்க்குங்
காம்புரிவீர ராழிமுற்படைகள் கையணி யாழிமுற்பணியே. (சசு)

இஞ்சியின்மேய பொறிக்கரியொன்றே யெதிர்த்தநூறிரதங்கணூறுந்
துஞ்சலில்சிங்க வேற்றினிலொன்றே தோலினமாயிரந்தொலைக்கு
மஞ்சலில்புண்ட ரீகத்துளொன்றே யயுதவாம்பரித்திரளழிக்கு
நெஞ்சினுட்சினத்த வெய்யினத்தொன்றேநியுதவன்பதாதிமெய்கிழிக்கும்

இஞ்சிமேலூன்று பதாகையையருண னெழுபரிமத்திகையென்பான்
விஞ்சையர்கலவி யயர்ச்சியைப்பாற்ற மேவியசிவிறிகளென்பார்
மஞ்சிவரரிதன் னகர்விழவினுக்கு மன்னியவணிப்பொருளென்பான்
மிஞ்சுமிவ்வுலகோர் தலையணைப்புற்றும் விழிப்படாதுரைத்திலரேதும். ()

பரத்தையர்வீதி

வேறு.

அமரர்கோமக னாயிரங்கண்கள்பெற்
றமர்தலெற்றினுக் காவென்றுசாவிடி.
னமரர்வந்தனை யாற்றுமிம்மாநக
ரமர்பரத்தைய ராரெழினோக்கற்கே. (சகூ)

இருதனக்குவை யேய்ந்தபரத்தையர்
பெருவிலைக்கிடு பேரின்புகிட்டுமோ
தருமுதற்பல சார்சென்றிரந்துகொள்
ளொருதனக்குவை யுற்றவிண்வாணர்க்கே. (ருய)

வெள்ளைநுண்டுகின் மெய்வெளித்தோன்றப்பூண்
டுள்ளழைத்துவந் துள்ளுறுப்பாசைமேற்
கொள்ளமுன்னெதிர் காட்டிக்குலாவியே
கொள்ளைகொள்வர் குமரர்தங்கைப்பொருள்.. (ருக)

புறத்தகத்துப் புணர்ச்சிவிசேடங்கள்
புறத்தெவர்க்கும் புலப்படவிற்சுவர்ப்
புறத்தகத்துப் பொறித்தனர்சித்திரம்
புறத்திலன்பு பொதிவிலைமாதரே. (ருஉ)

ஆவணத்தி லடுக்கியபல்பொருண்
மேவுசிற்சில சிற்சிலர்மெச்சுவர்
நீவுறுவிலை மாதர்நியமத்தி
னோவியத்துளொவ் வொன்றும்வேண்டாரெவர். (௫௩)

அத்தநல்கி யழைஇக்கிளரத்தமு
முத்தநல்கிவெண் முத்தமுங்கொண்டவர்
வித்தமெத்தனை யத்தனைவிற்றின்ப
மொத்தபின்பணு வுந்தரார்வேசையர். (௫௪)

வாணிபத்தெலா மன்னுமிலாபமும்
பூணுநட்டமும் போதுமிவ்வேசையர்
வாணிபத்தா தியமன்றிமற்றதில்
காணிலன்னதுங் காலிடையுண்டரோ. (௫௫)

வரைவிலாரெனும் பேரேமரீஇயினார்
வரைவிலாத்தெரு வண்மைசொல்வாரெவர்
வரைவிலாப்புகழ் வாய்ந்தவேளாளர்தம்
வரைவிலாமறு கின்சீர்வகுக்குபால். (௫௬)

வேளாளர்வீதி.

உயர்ந்தகங்கையி னொண்மைக்குலத்துதித்
தயர்ந்திடாமலா சாரமனைத்தையு
நயந்துநல்லற நாடிப்பெறும்பயன்
வியந்துவாழுநர் வேளாண்மரபினர். (௫௭)

எந்தநள்ளிரு ளேவரதிதியர்
வந்துநண்ணினும் வாழ்வின்வேளாளர்தா
முந்துமன்பி னுணாக்களட்டூட்டுவார்
முந்தைமாறர்போன் முட்டுப்படாரரோ, (௫௮)

எத்தினம்விருந் தெய்தப்படாததோ
வத்தினந்தா னவப்படுகின்றதாங்
துர்த்தினம்மெனச் சூழுவரன்னவ
ரத்தினத்திலொன் றாயினுநேர்ந்திலர். (௫௯)

பூதியேபெரும் பூதிமெய்ச்சாதன
மாதியேயுயர் வாம்வழிச்சாதனம்
வாதில்சைவ மதமேமதமென
வோதியுற்றவற் றைக்கண்ணினோம்புவார். (௬௰)

மூன்குலத்தவர் மூவர்க்கும்வேண்டுவ
நன்குஞற்றி நடைபெறுஞ்சானவி
தன்குலத்தர்சீர் சாற்றினம்வைசியர்
மன்குலத்தெரு வாழ்க்கையுஞ்சாற்றுவாம். (௪௧)

வைசியர்வீதி - வேறு.

உமையெதிர்நடிக்குமெம்மா னூன்றுதாண்மலரிலெல்லா
மமைதரவொடுக்குமாபோ லார்ந்தவெங்கிலத்துந்தோன்றுஞ்
சுமைதருபொருளனைத்துந் தொகைப்படத்தம்முட்கொண்டு
தமைநிகரின்றிநாளுந் தழைப்பனவணிகர்மாடம். (௫௨)

தருணநேர்நோக்கித்தம்பாற் சார்ந்தொடுங்குயிர்கடம்மை
யொருவில்பல்லிடத்துஞ்செல்ல வுய்க்குமப்பரமனென்னப்
பெருகியவணிகர்மாடம் பிறங்கமுற்கொண்டபண்டந்
திருவுறுகாலந்தேர்ந்து செலுத்தியூதியம்பெற்றோங்கும். (௫௩)

விலைமலிநாளிற்பண்ட மிகுதியிற்பல்லகொண்டு
விலைகுறைநாளவற்றை விற்றுமிக்கிலாபங்கொள்வார்
விலைகுறைநாளிற்கொண்டு விலைமலிநாளில்விற்று
விலைநிலைமாறிநட்டம் விதியினுமடையாரன்னோர் (௫௪)

கானப்பேரூர்வாழ்செல்வக் கனதனவணிகமாத
ரீனப்பேர்வுரியகந்தை யெனநினைஇக்கனைந்தெறிந்த
தேனப்பேர்த்துளவோன்றூசிற் சிறந்தபொற்றுகில்கடம்மை
வானப்பேரூரார்வெளவி மருங்கசைஇப்பொன்மையுற்றார். (௫௫)

மானிதிவணிகமாக்கண் மனைகள்வாய்வாணிபஞ்செய்
தீனிறக்கம்பளத்தி னின்றுதிர்மரகதங்க
ளானமாசலகினீப்பா ரள்ளிச்சென்றியக்கர்கோன்பா
லீனமாவிற்கக்கொண்டே யிமைபமரகதனென்றானன். (௫௬)

நிறைவளவணிகச்செல்வர் நியமத்தினூடுபுக்குக்
குறைவில்செம்மணிப்பூணுடை கொளவுளத்தலாய்வேணடாருந்
தறையிடைச்சிலருண்டன்னார் தாய்வயிற்பிறந்தவண்ண
மறையுமேற்சுமையொழித்த வவதூதராயினோரே. (௫௭)

எவ்வெத்தேயத்துமுள்ள விரும்பொருளீட்டவல்லா
ரவ்வத்தேயத்துஞ்சைவ வறங்களையீட்டவல்லா
ரெவ்வெத்தேயத்துமன்ன மிடுங்கொடிநாட்டவல்லா
ரவ்வத்தேயத்துஞ்சீர்த்தி யணிக்கொடிநாட்டவல்லார். (௫௮)

எந்தநாட்டினைப்பூவேந்த ரெய்திநா தனமாக்கைக்கொண்
டுந்துதங்கொடிமுன்னட்டே யுயர்செங்கோ னுட்டுவாரே
லந்தநாட்டுடனன்றுரு மடைந்துவேலவன்கைச்சேவற்
சந்தமாங்கொடிநட்டேவத் தகச்செங்கோ னுட்டுவாரால். (௬௯)

தனதர்கள்பல்லோர்தொக்குச் சார்ந்தெனவயங்குநாய்க
ரினமலிமறுகின்வண்மை யெம்முரையளவிற்றோமோ
தினகரன்சவியுங்குன்றத் திகழ்மணிமுடிமுடித்த
கனதனமன்னர்வீதிக் கவினையும்புனைதல்செய்வாம். (எ௰)

அரசர்வீதி.

மையின்மாணிக்கங்கொண்டு வனைந்துசெங்கேழ்பொருந்தித்
துய்யதண்டிங்கட்டுண்டஞ் சுரநதிமுடியளாவி
வெய்யமுத்தலைச்சூல்வான்மீன் வெண்டலைமாலையேந்திச்
செய்யகோல்வேந்தர்மாடந் திகழுருத்திரனையொக்கும். (எக)

புறத்தெலாநீலக்கற்கள் பொதிந்துசெம்மணிகுயின்ற
நிறத்தசாளரங்கண்மேக்கு நிலாவப்பல்சிகரமேவி
யறத்துநீளரசர்மாட மாயிரங்கமலக்கண்வாய்
புறத்தவிர்மணிசெய்மோலி பொலிந்தகார்வண்ணற்போலும். (எ௨)

பொன்னொளிர்பதுமராகம் புறமெலாமுறப்பதித்து
மன்னநாற்றிசையுவ்வாயில் வகுத்துமேற்சிகரிநான்கு
துன்னவேய்ந்தவிரும்வேந்தர் சூழ்ந்துறைமாடநான்கு
நன்னிதிமோலிபூண்ட நான்முகத்தேவைமானும். (எ௩)

படரொளிமரகதங்கள் படிதரப்புறங்குயிற்றி
யடிமுதன்முடியின்காறு மமைத்தசாளரங்கள்பல்ல
வடர்தருமன்னர்மாட மாயிரங்கண்களுற்ற
வுடலவிர்தரவான்வேந்தா யுறைகரியவனைநேரும். (எச)

முரசதிர்தரும்பேரோதை மொய்த்தசதுரங்கவோதை
விரவுசிற்றரசர்வந்து விறை இத்திறைகொட்டுமோதை
பரவியபாவலோர்க்குப் பரிசிற்பொன்னளக்குமோதை
யரசர்கள்மேவிவாழு மரண்மனைமுன்றிலெங்கும். (எ௫)

வலியினல்வாகைதன்னல் வளமலியளவில்செல்வப்
பொலிவினற்கொடையால்யாரும் பொருவிலாமன்னர்வீதி
யலகிலாவளஞ்சொல்வாரா ரருமறையனைத்துந்தேர்ந்த
மலிபுகழந்தணாளர் மறுகின்சீர்வளமுஞ்சொல்வாம். (எ௬)

அந்தணர்.

அறுதொழிலாளராகி யைந்தெழுத் துண்மையாய்ந்து
மறுவிலுன்மறைகடேர்ந்து வளங்கெழுமூன்றுதீயு
மிறுதலிலாமலோம்பி யிருவினையொப்புக்கண்டு
குறுகலிலாவோர்ஞானங் கூடியந்தணர்கள்வாழ்வார். (௭௭)

கொலைவினைகூடாதென்னக் கூறியவேதங்கொண்டே
தொலைவில்பல்பசுக்கள்கொன்றுஞ் சூழ்பவந்தம்மைச்சாரா
துலைவில்பேறதுசுவர்க்க முண்மையன்றிப்பவர்க்க
மிலையிலையென்றேநிகை யேந்திறு ரந்தணாளர். (௭௮)

வழங்குமெத்தேவர்க்குந்தே மாதேவனென்றேவேதந்
தழங்குரலெடுத்தந்தத்திற் சாற்றிடுமளவைக்கேற்ப
முழங்குசெந்தீயினுப்பண் முதலவனியமமாகி
யெழுந்திடக்காட்டியானு மிருகணுற்பார்ப்பார்பார்ப்பார். (௭௯)

எழுதிலாவெழுத்தென்னும்பே ரியன்மறையாகமங்க
டழுவியபுராணமென்னச் சாற்றுமுந்நூலுந்தேர்ந்தோர்
வழுவிலாவிவரேயென்று வையமோர்ந்துணரவன்றே
பழுதிலாமுந்நூன்மார்பிற் பரித்தனர்முத்தீச்செல்வர். (௮௰)

பொதுமையுஞ்சிறப்புமென்னப் புராதனன்புகன்றவாய்மை
முதுமறையாகமங்கண் முழுதுமோர்ந்தென்றும்பூசை
பதியுமான்மார்த்தத்தோடு பரார்த்தத்தும்புரி இத்தலைக்கோர்
மதிபெறுமாதிசைவர் வாழ்க்கையுமோர்பாலோங்கும். (௮௧)

தடையொரீஇ்கியமம்பூண்ட சரியையர்மடமுமோர்பாற்
கெடலருமுண்மைவாய்ந்த கிரியையர்மடமுமோர்பா
லுடலினைப்பயற்சிநோக்கா யோகியர்மடமுமோர்பா
லடலையென்றுலகைக்கண்ட ஞானியர்மடமுமோர்பால். (௮௨)

பூரணபுராணப்புத்தேள் புரம்பொடிபடுக்கக்கண்ட
வாரணவுடையுடுத்த வையமாம்வையந்தன்னை
யோரணயாத்திடப்பட் டேர்த்தெழுபரிமாநான்குந்
தாரணநடைபயின்று தங்குசாலையுந்துலங்கும். (௮௩)

முதலைவாய்மதலைதந்த முதிர்சுவையமுதுங்கல்லை
மதலையாப்புரிந்தபாலு மயிலையில்வெள்ளையென்பைத்
திதலையார்குயமின்னுக்கு தேறலுமூங்கையின்வாய்க்
குதலைநல்விடைசெய்கண்டுங் கூட்டிழூட்டிடமுமோங்கும். (௮௪)

இயந்தருமெழுத்தேசொல்லே யிருவகைப்பொருளேயாப்பே
நயந்தருமணியேயென்ன நவின்றவைந்திலக்கணங்க
ளியன்றமாணவர்கட்கோதி யிலக்கியப்பனூல்போதித்
துயர்ந்திடுமிருமொழிக்கல் லூரியும்பலவாயோங்கும். (அரு)

தளவரும்பனையமூர நமனியமன்னகூபம்
வளமுறுகருனைவர்க்க மதுததிமுப்பழம்பால்
குளம்விராவியசிற்றுண்டி குறைவறவெவர்க்குமென்று
மளவிருநேயத்தோடு மருத்துசத்திரங்கண்மன்னும். (அசு)

சிற்பரம்பொருளாமெம்மான் றிகழ்தரக்கூடற்பாங்கர்ப்
பொற்பவன்னாளமைத்த புனற்சாலையொன்றானு
மற்புறுமெவர்க்குமாகா தாஞ்சிலர்க்கதுபோலாது
பற்பலதண்ணீர்ப்பந்தர் பலருக்கும்பயந்தோங்கும். (அஎ)

வேறு.

ஒருபடித்துறை செம்மணியொளிர்வயி டூய
மொருபடித்துறை யுயர்ந்தவெண்ணிலாவிரி வயிர
மொருபடித்துறை பைங்கதிருமிழ்மர கதங்க
ளொருபடித்துறை யுறப்புனை திருக்குளம் பலவாம். (அஅ)

வீடெலாமிளஞ் சேய்க்குழாமிளிர்பொலன் மறுகின்
மாடெலாம்பெரும் விழவுலாவியன்மணி மன்றத்
தூடெலாமதிர் முழவெழி லுறுவெளி முன்றிற்
பாடெலாமுர சொலிகெழுமங்கலம் பல்கும். (அகூ)

இல்லையில்லையென் றிரந்திடுமாதுலர் வேட்ட
தில்லையென்றசொன் மெய்த்துனிபுரியுநோ யிடையூ
றில்லைவன்கடு மொழிகளவிழிதொழில் பொய்மை
யில்லையென்னின்மற் றெடுத்துரைத்திடுவதென் னினியே. (கூ௰)

உவணகேதனனுதிய வும்பரார் துவன்றி
யிவணவண்டெரிவரியதாய் மிளிர்க்துபல் லிரவி
சிவணநாப்பணன் ணியதுகாளீசனுர் சேய்கள்
சுவணவல்லியுஞ் சூழவுற்றுறைந்தருள் கோயில். (கூக)

தூயதாகிய சோதிமாவனத்தகா னப்பேர்
மேயபொற்றளி மதாணியாஞ்சூழ்ந்துறை விண்ணோர்க்
காயவாலயம் புரங்குயிற்றரதன குலமா
காயகப்பெரு மாமணிநம்பனூர் மானம். (கூ௨)

துதிகொளிப்பதி வந்துகாளீசனுர் துளவோன்
விதியினாலறி யாவடிப்பூசையான் விண்பொற்
பதியுளாரடை பாக்கியநோக்கவுற் றங்கு
மதின்மிசைப்பல விடைக்கணமன்னிமேல் வயங்கும். (௬௩)

இமைத்தலில்லவா யெழிலுருவத்திளைப் பிலவாய்ச்
சமைத்தலூணயி லாதவாய்த்தமனியத் தாற்செய்
தமைத்ததேவர்த முருப்பலதாங்கலா னரன்கைச்
சுமைத்தனுப்பல போன்றனகோபுரத் தொகுதி. (௬௪)

பத்துநூறுகான் மண்டபமாளிகைப் பத்தி
மத்திநூறுகான் மண்டபஞ்சூளிகை மன்றஞ்
சுத்தவேள்விசெய் மண்டபஞ்சூழ்பரி வார
நத்துதேவரா லயங்களுநனிசிறந் தோங்கும். (௬௫)

கிரணவொண்மணி மேடைமேற்கிளர்பெருங் கண்டை
சரணரைத்தினங் காளையார்தளிப்பணி யாற்றக்
கரணமுற்றுணர் புலரிமுற்காலங்க டோறும்
பிரணவத்தொனி யேயெனப்பேரொலி யெழுப்பும். (௬௬)

பல்லியங்களின் முழக்கமும்பழமறை வாழ்த்தும்
வல்லமூவர்பா சுரங்களும்வாசகப் பாவு
நல்லவிண்ணர மகளிர்கணடந்தரு சதியும்
புல்லியாறுபோழ் தினுந்திருச்சந்நதி பொலியும். (௬௭)

அமரராதிய ரடைந்தியற்றருச்சனை யழகுந்
தமமிலாதமெய்த் தவமுனிவரர்துதி யழகு
நமவெனப்பணி நராதிபர்செய்பணி யழகு
மமைதரப்பொலி சந்நதியழகுமே லழகே. (௬௮)

தூலலிங்கமென் றுரைத்திடுசுடரொளி மானத்
தேலவார்மது நறியநீராட்டிவண் டிசையாஞ்
சீலமந்திரத் தொடுமலர்தூயருச் சித்துச்
சாலுமன்பரை யொத்துநின்றோங்கு *மந்தாரம். (௬௯)

இன்னதாயபன் னல்லெழிலியைந்தபூங் கோயி
றன்னுளார்ந்தெலாந் தழைப்புறநமதுகா ளீசன்
சொன்னவல்லிச மேதனுய்மைந்தர்கள் சூழ
மன்னிவீற்றிருந் தரசுசெய்தென்றுமே வாழும். (௭௰)

நகரப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் உகள.

* மந்தாரம் அத்தலவிருக்ஷம்.

# நைமிசப்படலம்.

பற்பலமுடிகடாங்கிப் பகருமூழிகடோறோங்கிக்
கற்பகத்தருக்களோடுங் கனிகனிதருஞ்சீர்மல்கி
யற்புறுகருடர்சித்த ரமரர்சாரணரியக்கர்
சொற்பதமறைகள்வாழ்த்தித் துதிப்பதுகைலைக்குன்றம். (௧)

அத்திருமலையின்மேலோ ராயிரங்கான்மாடத்தின்
மத்தியில்வலனங்கத்தா மணியொன்பான்குயிற்றப்பட்டெட்
டத்தியின்மருப்புநட்டாங் கணிபெறவமைந்தகால்கள்
பத்திநேடாறுதாங்கும் பளிக்குமண்டபமொன்றுண்டால். (௨)

அவ்வரங்கத்துண்மேய வரிப்பிடராதனத்திற்
றெவ்வரங்கஞ்சும்வேற்கைச் சிகண்டியூர்குமரவேளு
மெவ்வரங்களையுநல்கு மிபமுகத்தேவுஞ்சூழ
வெவ்வரங்கதுவும்வாட்கண் விமலையும்வாமமேவ. (௩)

மதியிளங்கொழுந்துவீச வரநதிதிவலைசிந்தப்
பொதிசடைமுடிமேற்றேவர் பொன்மலர்மாரிபெய்ய
விதிமுதலரிவலாரி விதிமுறைபணிந்துநிற்பக்
கதிரவன்மதிதீயாமுக் கண்ணன்வீற்றிருந்தகாலை. (௪)

காசிபன்கபிலன்சத்தி காத்தியாயனன்பரத்து
வாசன்முற்கலன்கதோளன் வாமதேவன்வசிட்டன்
கோசிகன்பிருகுவீதி கோத்திரன்காலவன்றார்
வாசன்சீவற்சன்சம்பு மவுற்கலனுபத்தம்பன். (௫)

சவுனகனெழுவாயான தவமுனிவரர்களீண்டித்
தவனனிற்சுடருமெய்யிற் றரித்தபுண்டரத்தான்மூன்று
புவனமுமுய்வுதேற்றிப் புகரிலாநியமம்பூண்டு
கவனமால்விடைகடாவுங் கண்ணுதறிருமுற்சார்ந்தார். (௬)

போந்தவர்புவனமியாவும் புரக்குநாயகனைச்சென்னி
யேந்தியகரத்தராகி யீரைந்துநூறுநாம
மாந்தனிவேதசாரத் தாலருச்சனைகளாற்றிப்
பூந்துளவேனங்காணுப் புண்டரீகங்கட்டாழ்ந்தார். (௭)

வலைத்தலைப்படுமானென்ன மயங்கியவுள்ளமைவுற்
றலைத்தலைத்துரும்புமான வலைந்துழல்கின்றவெம்மைக்
கலைத்தலைமதிபுனைந்த கடவுணீகாத்தியென்று
வுலைத்தலைமெழுகையென்ன வுருகிவேண்டுநரானாரால். (௮)

பைத்தலையரவணிந்த பரமநீயுறைதலத்து
ளெத்தலமிக்குயர்ந்தே யேற்றமாம்விளக்கமுற்ற
தத்தலமான்மியத்தை யருளினோதுகவெமக்குக்
கைத்தலத்தமர்ந்தநெல்லிக் கனியெனக்காணுமாறே. (௯)

என்றவரிசைத்துத்தன்று ளிணைமலரிறைஞ்சிநிற்பத்
துன்றியதிங்கண்மோலி துளக்கியெம்பெருமானன்பின்
மன்றலங்கமலநின்று மதுவங்கான்றென்னவாங்கே
யன்றவர்க்கிந்தவாய்மை யருளுவதாயினானே. (௰)

வேறு.

இத்தரைவரைப்பி லியாமுவந்துறையு மிடம்பலவற் றுளுஞ் சிற
ந்த, துத்தரகாளி புரமதிற்றாய்தா யுறைபவர்க்கெம்பதப் பேறுஞ், சித்
தியுமளிக்குந் தக்கணகாளி புரமெனத்திகழ்மதி கடுக்கை, யத்திவெண்
மனவு மணிசடைப்பெருமா னறைந்தனன்பின்னுமீ தருளும். (௰௧)

தக்கணகாளி புரத்தின்மான்மியமுந் தனிச்சுடரிலிங்கமான் மிய
முந், தொக்கணவகம்போந் தீர்த்தமான்மியமுஞ் சூதன்பாற்றெரிகெ
னப் பூதிப், பொக்கணந்தூங்கு புயத்தினிற்புயங்க பூடணந்தூங்கிய பு
னித,முக்கணனுரைப்பச் சவுனகன்முதலா முனிவரர்மூழ்கின ருவகை.()

அளப்பருங்களிப்பின் முனிவரரியாரு மத்தியிலாங்கடு வடைத்த,
களப்பெருங்கருணைக் கடல்கழல்பணிந்து கைலையின்றென்றுணைக் கய
னால், வளைப்புறுபுற்சென் றுறைந்தநைமிசமா வனத்தினைநோக்கிவல்
விரைவி, னிளைப்பறுதவத்துச் சூதமாமுனியை யெய்துவான்வழிக்
கொடு படர்ந்தார். (௰௩)

எம்பிரான்பவளச் செஞ்சடைக்காட்டி னிழிந்திமயாசல நுழைந்து
பம்பியவறுபா னாயிரரென்பிற் படிந்தவர்பவர்க்கநீத் தேற
விம்பரினடைதந் தொழூஉநீஇமற்றை யேவருந்தோய்ந்துமெய் கழுவ
வெம்பவங்கழுவுங் கங்கையின்கரையின் மேயதுநைமிசக் கானம்.(௰௪)

ஆலகில்வேணு கடம்புபுன்னாக மரசுவெண்ணாவலார் குருந்து
மாலூரநிம்பம் பாகல்பூங்கொன்றை வன்னிபாடலங்களா சூதந்
தாலமந்தார யாதிகளொவ்வோர் தலவிருக்கங்களென் றறைதற்
கேலுறுகாட்டாய்ப் பொலிவுறப்பெற்ற திருந்தவநைமிசக் கானம். ()

குலவுமான்கன்றும் புண்டரீகத்தின் குட்டியுங்கூடியோர் துறையிற், கலவிநீருண்ணச் சிங்கவன்குருளை கரிப்பிடிமுலைப்பய முணுமா, றிலகுமாதவஞ்செய் வார்மகப்புகைசென் றெழிலிவாகனமதாய் விண்ணோர்,குலபதியவியூண் கொளக்கொணர்தருஞ்சீர் கொண்டதுநைமிசக் கானம். (௰௬)

இத்தகுவளத்த வனத்தினையிந்த விருடியர்கிடைத்தன ரெய்திச்
சுத்தவெண்பூதி மெய்முழுதணிந்து தூயகண்மணியணி புனைந்து
நித்தியசைவ தியானமுற்றிருப்போ னின்மலவியாதமா முனிவ
னத்தியமான வகனெனுஞ்சூத நற்றவவரனைநேர் கண்டார். (௰௭)

மறையிடைத்தொகுத்த புராணங்களனைத்தும் வையகமுய்யவே யருளான், முறைமையினோதும் வாக்கினில்வல்ல முனிவரர்தங்குலத் தேற, கறைமிடற்றண்ண லாஞ்ஞையினின்னைக் கண்டனங்கதியினிக் கண்டாங், குறைவிலையென்றுத் துதித்தனரிறைஞ்சிக் கூறுவராயின ரொன்று. (௰௮)

உரைத்திடுகாளி புரமிரண்டவற்றொன் றுத்தரத்துளதுமற் றொன்று, கரைத்திடுதெற்கி லுளதுபின்னதுவே கணிப்பருமுயர்வுடைத் தெனவும், வரைக்கொணுமுத்தி வதியுயிர்க்கெல்லாம் வழங்கிடுமெனவுமப் பெருமை, விரைத்துணர்நின்பாற் றெரிகுகவென்ன வேவினன்வேத வாம் பரியோன். (௰௯)

ஆதலினின்னை யடுத்தனமிபாங்க ளத்தலமான்மிய முற்றுங்
காதலினெமக்கிங் கோதுகவெனலுங் காளிமாபுரத்தினை யானை
யேதமின்மடுவைச் சுவணவல்லியைக்கா ளீசனைச்சுந்தராம் பிகையைச்
சோதியாஞ்சோமே சனைக்கயற்கண்ணியைச் சுந்தரேசப்பெயர்த்தேவை.

எயில்வளைவாளின் மேனடந்தானை யெண்ணியோர்முகுர்த்தமெய்ப் புளகுற், றுயிரனவேத வியாதனுங்குரவ னொண்மலர்த்தாளிணை யுள்ளி, யியறிசைவணங்கிச் சவுனகாதியரை யிருசெவிப்பருகுமினீவிர், செயிர் தபவென்னச் சூதமாமுனிவன் செப்புவான்றொடங்கினன் மன்னோ. ()

அடுத்தவர் தமக்கு மாபலந்தருவ தாகிநித்தியசுயம் புவுமாய்க், கடு த்தலொன்றிலதா யிமையவரென்னுங் கனின்மலர்நிறைதரப் பொலிந் து, தொடுத்தவிர்சுவண வல்லியாங்கொடியாற் சுற்றுறப்பெற்றதாய் விளங்கித், தடுத்தலின்றுயர்கா ளீசகற்பகநறுந் தாபரீக்குகவென வா ழ்த்தி. (௨௨)

மெய்த்தவத்தீர்கா ளீசனுர்காதை விரும்பினிர்நீவிரே முத்தர்
மொய்த்துளத்தன்பிற் கேட்குநர்தமக்கு மூசியபவமெலாம் போக்கி
யெய்த்தலில்லாத வறம்பொருளின்ப மீந்துபின்முத்தியு மளிக்கு
மத்தருகாளி புரத்துமான்மியந்தா னுதியில்வரல்வழி கேண்மின். (௨௩)

முன்னொருகாலத்தெழின்மிகுமாகின் மதியெனுமுதுநகரத்து
மன்னவன்சைவபத்திமைபூசை மாகதாசிரவணத்தாசை
துன்னியமனத்தான்சதாநிகனென்பான் றாயதாந்தீர்த்தயாத்திரைசென்
றுன்னிமாதலங்களின்புகழ்தெரிக்கு முதங்கமாமுனிவனமடைந்தான்.

எக்கலைமுடிபுந்துணிந்திடுபரநம் மீசனுஞ்சிவபிரானென்றே
மெய்க்கதியுணர்ந்ததவமுனிவரன்றூண் மிளிர்முடித்தலைபுனைந்தரசன்
றக்கணகாளிபுரத்துமான்மியத்தைத் தகவிரித்துரைத்தருளென்று
னக்கணத்துதங்கமாதவன்றூனு மன்பினுல்வகுக்கலுற்றனனுல். (௨௫)

உத்தரகாளிபுரமெனவொன்றுங் குளதுமேகாதாவிரிதீரத்
தத்தலத்தினுமிக்குயர்ந்ததாய்நினைக்கி னருங்கதிச்சித்தியுஞ்சுத்த
புத்தியுமீயுந்தக்கணகாளி புரமதுகுணகடற்குடக்கி
னத்தியமூன்று யோசனைவையை நதிக்கொருயோசனையுதக்கில். (௨௬)

கூடலம்பதிக்குயோசனைநான்கு குலவுமீசானவாசையிற்றே
னேடவிழ்கமலசீதளிப்புத்தூர்க் கிரண்டரையோசனைதெற்கி
னுடுமொன்றரையோசனைகொள்வித்தார நண்ணியேபாண்டிநாட்டுளது
பீடுறுமந்தத்தலத்துநாமங்கள் பேசிடிலநந்தமாமவைதாம். (௨௭)

வளமலிகாளி புரங்கிளர்சோதி வனமொண்மந்தாரமாவனமே
வுளதெனுமோக்கப் பிரதநற்றாய வுத்தமசைவகேத்திரமுட்
களவொழிகாந்தா ரந்தவசித்தி கரந்தேவதாருமாவனஞ்சீ
ரளவிலாதுளபூ லோககைலாய மாதியவோதினும்பவம்போம். (௨௮)

இத்தலப்பெருமை நீயவாவியதற் கேதுநின் றவப்பயனன்றோ
வுத்தமகிருதார்த் தத்தனுகின்று யோதுதுங்கேளென வேந்த
னெத்தலத்தினுமிக் கித்தலமுயர்ந்த தெவ்வணமெனமுனஞ்சுமந்து
மெய்த்தவன்றேவ வருமனுக்குரைத்த விதம்பகர்வுற்றனனுதங்கன். ()

பண்டையிலொருநாட்கயிலையிற்பரனைப் பரசிவைநீயுரைதலங்கள்
கண்டிடிற்பவம்போந்தூயதீர்த்தங்கள்கடையிலுங்கெடாவிலிங்கங்கள்
மண்டியவவற்றுளுத்தமம்யாவை வகுத்தருளெனவினவுறநம்
மொண்டிருத்தானம் பற்பலவற்று முத்தமமாயிரத்தெட்டே. (௩௰)

உத்தமமவற்றுளைந்துநூறவற்று ளுத்தமமூன்றுநூறவற்று
ளுத்தமநூறுமவற்றறுபானுன் குத்தமமவற்றுண்முப்பானுன்
குத்தமமவற்றுளெண்ணிரண்டவற்று ளுத்தமமெட்டவற்றுளுநான்
குத்தமமவற்றுளிரண்டுமாதலங்க ளுத்தமமென்றனனவில்வான். (௩௧)

பொக்கமிலவைதாமுத்தரகாளி புரமெனப்பெயரியதொன்று
தக்கணகாளிபுரமெனவொன்று சாற்றவற்றுத்தமோத்தமமாய்த்
தக்கமாண்புளதுபின்னையதலமெச் சகத்திலுமதுலமாயுயர்ந்து
மிக்கசீராலவாயிலுஞ்சிறந்து மேதகுமான்மியமுளதால். (௩௨)

சொல்லுமத்தலத்துச் சோதிலிங்கத்திற் றுவாதசாந் தத்தயாங் கயற்கண், மெல்லியலாய நின்னுடனென்று மேவிவாழ்கின்றன மதனை, யொல்லுமிப்போழ்து நோக்கலாமுத்த மோத்தமமெனற்கறிகுறியாம், புல்லுறுபிரளயத்திலும்பொன்றல் பொருந்துறுதொளிர்தருமதுவே.()

மண்ணுலகத்தின்மூன்றரைக்கோடி மலிபிரமாண்டத்தின்மேலா
லண்ணியவறுபான்கோடிதீர்த்தங்க ளமர்ந்தனவவற்றினிற்றென்பா
னண்ணியகாளிபுரத்தினின்மன்னு நளிர்சிவகங்கைமூழ்கிடினப்
புண்ணியதீர்த்தமனைத்திலுமாடும் புண்ணியமனைத்தையும்பயக்கும். ()

உரைபெறுமூன்றுமான்மியங்களுஞ்சேர்ந் தொன்றியததுவலான் மற்றுத், தரையிடையின்றலப்பெயர்தானே சான்றுகாவென்றதாற்ப வம்போம், பொருவுளீயென்றதாற்சித்தசுத்தி புவ்வென்றதாற்பரஞா னம், வரைரமவென்றதாலபவர்க்கம் வந்திடுங்காரணத்தானே. (௩௫)

இன்னவாறிறைவனிமயமாமகளுக் கிசைத்திடுகாலவன்மடிமேற்
றுன்னியகுமரகுருபரனதனைச் சூழ்ந்துணர்ந்தகத்தியற்குரைப்ப
வன்னதையெனக்கம்முனிவரன்சொற்ற னதனைநிற்கோதினனென்ன
மன்னவனின்னும்விரித்தருளென்ன வழங்கலுற்றனன்றவத்துதங்கன்.

இன்னணங்காளிபுரக்கதைதவியாத னிசைத்திடுபுராணமூவாறுட்
டுன்னியவுலகைச்சூழ்ந்தொளிபரப்புஞ் சூரியனுர்க்குரித்தாகி.
யுன்னதமேயபிரமகைவர்த்தத் துளதனைப்பன்னுதுநீவிர்
கன்னமாம்*புடத்தாற்பருகுமினென்னக்கழறுவான்சூதமாமுனிவன். ()

நைமிசப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௨௫௪.

* புடம் - இலையினாற்றைத்தகிண்ணம்.

# அகத்தியர் ஞானோபதேசம்பெற்றபடலம்.

வம்புலாந்தரு மல்கியகைமிசைப்
பம்புசீரைப் பகர்ந்தனம்வந்துமுன்
கும்பமாமுனி கூர்ந்துதவஞ்செய
நம்பன்ஞான நவில்கதைகூறுதும். (௧)

வேறு.

முந்தொருஞான்றுகும்ப முனிசிவலிங்கபூசைத்
தந்திரமிரண்டுமீசன் றத்துவவுருவுந்தோன்றாச்
சிந்தையனதுதேர்வான்பலை றேத்துஞ்சஞ்சரித்துத்தேவர்
வந்தனைமலிந்தசோதி வனத்தினையடைந்தானூழால். (௨)

அவ்வனத்தடர்மந்தார மலர்மதுப்பொழியவண்டர்
துவ்விமிக்கினியகானச் சுவைமதுப்பொழியத்தேமா
செவ்வியகனிச்சாறூற்றச் செறிபிகந்தொனிச்சாறூற்றத்
திவ்வியவொகரமானுஞ் சீர்கண்டான்முந்நீருண்டான். (௩)

ஐவண்ணவன்னியெல்லா மைவண்ணமுச்சரித்து
மைவண்ணவியமற்காய்ந்தாய் மதனெரிபடவிழித்தாய்
பொய்வண்ணத்தக்கன்வேள்வி பொன்றுவித்தாயென்றோதி
மெய்வண்ணந்துதித்தல்கண்டு வியந்துநாற்புறமுநோக்கா. (௪)

இந்தமாவனம்வலாரி யெழில்வளநந்தனங்கொல்
சந்தமாமிருநிதிக்கோன் சயித்திரரதங்கொலென்னாச்
சிந்தையிலயிர்ப்புற்றப்பாற் செல்லுழித்தூய்ந்தாய்ச்சான்றோர்
புந்தியிற்றெளிந்தநீரார் பூந்தடமொன்றுகண்டான். (௫)

காண்டலுமதினீராடக் கருதினனாகக்காயத்
தாண்டசரீரிவாக்கோ வகத்தியகேளித்தீர்த்த
நீண்டபுண்ணியத்ததாடி னினைத்தனநினைத்தாங்கெய்தும்
பூண்டதுசிவகங்கைப்பேர் போந்திதில்விதியான்மூழ்கி. (௬)

கரையிடத்திருந்துநோற்கிற் கருதொணாச்சிவஞானந்தான்
விரைவினிலுதயமாகும் வேட்டவ்வாறாற்றுகென்ன
வுரையதுகேட்டுவாரி யுண்டவன்வியந்தப்போழ்தே
வரைவிற்சங்கற்பம்பேசி மறைவழிமூழ்கினால். (௭)

பூதிசாதனங்கண்மெய்யிற் பூண்டுகீழ்க்கரைக்கணோர்தேங்
கோதிலாதாய்ந்தாங்காக்கிக் கொண்டுறைந்தைந்தடக்கி
யோதியனுணவொழித்து யோகபீடத்திருந்து
மாதவத்தொடக்கங்கொண்டான் மால்வரையடக்கங்கண்டான். (௮)

இளவேனிற்காலந்தன்னி லிருகையுமுயர்த்திமண்ணி
லளவாதந்தரத்துநண்ணி யண்ணியமுதிர்வேனிற்கண்
பிளவாகுமெழுநாவைந்தைப் பெட்டுக்கார்ப்பருவநீர்சால்
குளமேவிமேற்கிடந்து கூதிரில்விசும்பினுற்று. (௯)

முன்பினும்பனிப்போதென்ன மொழியிருபருவந்தம்மில்
வன்பினுகாயமன்னி வரைபடாப்பொருளையுன்னி
யன்புசானிட்டைகூடி யாண்டுபத்தைக்கடந்தான்
பின்பவனெதிரிற்சோதிப் பிழம்பொன்றுதோன்றிற்றம்மா. (௰)

கட்புலன்கதுவலின்றிக் காயமண்ணெங்கும்போர்த்து
விட்புலத்துலவுங்கோடி மித்திரரெனவிளங்கிப்
புட்பகமானத்தேவர் புகழொலிபூண்டகண்ட
வொட்பமாஞ்சோதிகாணூஉ வுவந்தெழீஇவிரைஇப்பணிந்தான். (௰௧)

எண்ணிலாவண்டகோடி யெதனொளியால்விளங்கு
மெண்ணிலாவுலகையென்றா ழெதனொளியால்விளக்கு
மெண்ணிலாமடமைக்கங்கு லெதனொளியால்வீந்தோடு
மெண்ணிலாக்கதிர்சாலந்த வேகமாஞ்சோதிபோற்றி. (௰௨)

எதனொளிதன்னிற்கோடி யினிலொருகூறுகொண்டு
புதனெனும்புதல்வற்பெற்றோன் புவனமுற்றும்விளக்கி
யிதரசனீகரப்பே ரெய்தினனுலவுகின்றா
னெதுகரையிலாததந்த வேகமாஞ்சோதிபோற்றி. (௰௩)

எவ்வொளிதன்னோர்கூறேற் றெரியுலகெலாம்விளக்கு
மெவ்வொளியின்கூறொன்றா லெப்பொருளுந்தகிக்கு
மெவ்வொளியரதனங்க ளின்பிரபைக்குமூல
மெவ்வொளிநிறைந்ததந்த வேகமாஞ்சோதிபோற்றி. (௰௪)

அருமறைமுடியுந்தேறா வகண்டமாம்வடிவேபோற்றி
நிருவிகாரத்ததாகு நிட்களப்பொருளேபோற்றி
யொருவிலாதெவையுமாக்கி யொடுக்குதற்பரமேபோற்றி
யிருமைசால்வினைகள்சாரா வேகமாஞ்சோதிபோற்றி. (௰௫)

என்றெதிர் துதித்துப்பல்கா லிறைஞ்சிமுத் தமிழ்முனிக்கோன்
றூன்றிய வன்பினிற்பச் சோதிமண்டலத்து நாப்ப
ணின்றிருஞ் சடையிற்கங்கை நிலாமதி விளங்கமுக்கண்
மன்றிகழ் படிகமேனி வாய்ந்துமை யிடத்திலங்க. (௰௬)

கருதினர் கற்பமென்னுங் கருணைமா கடலாமெம்மான்
பிரமத கணங்கள்பல்ல பின்முற்சூழ் தரவெள்ளேற்றின்
மருவின னாகித்தோன்றி வந்துமா முனியைநோக்கித்
திருமுக மலர்ந்தோர்வாய்மை செய்யவாய் மலருமாதோ. (௰௭)

மலயமா முனிவநீரெய் மாதவ யோகுமுற்று
நிலையா மகிழ்ந்துகொண்டா நிற்குவேண் டுவவேண்டென்னக்
கலயனின் றெழுந்ததூயோன் காயமெய்ம் மயிர்ச்சிலிர்ப்புற்
றலகிலாக் கருணைவாரி யடிகளை சரணமென்று. (௰௮)

நின்றிரு வருளினாலே நின்சுவ ரூபந்தன்னை
நின்றிருப் பூசையாற்றை நீர்மையி னுணரவேட்டே
னன்றியை தெரியும்வண்ண நவின்றரு ளென்றான்யோகி
நன்றிது நன்றென்றேமுன் னகைகொளூஉ வருளும்பெம்மான். (௰௯)

இன்னவா றெனவெந்தன்மை யாவர்க்கு முணரவொண்ணா
தன்னதை நின்பால்வைத்த வருளினா லுரைத்துங்கேண்மோ
மன்னிய மண்ணீர்தீகால் வான்மதி யிரவியெச்ச
னென்னுமோ ரெட்டுமெம்மெய் யெனமையலா தொன்றுமின்றே. (௨௰)

அனைத்துமே யெம்மிடத்தி லடங்கியுள் ளனவெண்ணில்லா
வனைத்திலும் யாமேநண்ணி யநுப்பிர வேசமாகி
யனைத்திலுஞ் சிறியதாய வணுவினு மணுமகத்தா
மனைத்தினு மகத்தாயென்று மன்னியே திகழுகின்றேம். (௨௧)

சச்சிதா நந்தமாகித் தனித்தநிற் குணமதாகி
யிச்சையென் பனயாவற்று மின்றியே நின்றவெம்மை
நச்சினால் வேதமின்னு நாடியுற் றறிந்தவில்லை
யச்சன காதியர்க்கு மரியதே யுணருந்தன்மை. (௨௨)

இப்பொழு தெங்கும்வியாபித் தெழுந்துன்னா னோக்கப்பட்ட
திப்பியச் சோதியேயெந் திரிபிலா வடிவமாகு
மிப்பெரு மறையெவர்க்கு மெய்தரி தநுவாய்நீயெஞ்
செப்பமாங் கருணைதன்னாற் றிகழுக வென்றுபின்னும். (௨௩)

வேறு.

மன்னுமாமறை வாக்கின்பொருளெலா
நின்னகத்தி னினைத்தலுந்தோன்றுக
தென்னனாட்டவர் தேறவிலக்கணம்
பன்னுசூத்திரம் பண்ணுநனாகுக. (௨௪)

அங்கமாறுட னார்ந்தமிருதிக
ளெங்கவாகமத் தொல்பொருடோன்றுக
புங்கமாய புராணங்களுட்பொருள்
சங்கையின்றித் தகவின்விளங்குக. (௨௫)

நன்னர்பூசை நமக்குஞற்றும்விதி
துன்னுவேதத்துச் சொல்லியவாறொன்று
முன்னுமாகமத் தோதும்வழியொன்று
மன்னிரண்டு மனத்தினுதிக்குக. (௨௬)

இந்துவென்றா ழிரண்டுந்தடைப்பட
விந்தமென்றொரு வெற்புப்பின்னுளெழுந்
துந்துமாசெருக் குற்றிடுமன்னதை
யந்திலங்கையி னனியமிழ்த்துக. (௨௭)

பின்னைநாளிற் பெருகும்புனற்கட
றன்னைமாதவ சாரொருகாரணத்
துன்னியள்ளிநீ யுள்ளங்கையாலுழுந்
தன்னதாக்கியுள் ளாசமனஞ்செய்க. (௨௮)

இந்திரன்முத லாயவிமையவர்
தந்துயர்க்கலி தாவுறநின்னுழை
வந்துபாசனை செய்குகவானளாஞ்
சந்துசூழ்மல யாசலதாபத. (௨௯)

இத்தலத்தி லிருந்துபல்லாண்டுநீ
மெய்த்தவத்தினை மேதகவாற்றினை
யத்திறத்தி னகத்தியகேத்திர
மித்தரைக்க ணிதுவெனவாகுக. (௩௰)

இன்னவண்ண மெழில்விடைச்சோதிதான்
சின்னயத்தருள் செய்தலுந்தாழ்ந்தெழீஇ
யுன்னுமாதவ னுய்ந்தனனுய்ந்தன
னென்னவாழ்த்தி யிறும்பூதடைந்தனன். (௩௧)

பின்னரம்முனி பெம்மான்றிருத்தனி
துன்னிநன்னீர் துகளின்மலர்கொடு
முன்னதாகிய மூலலிங்கத்தினைச்
சென்னியாட்டிச் சிறந்தருச்சித்தனன். (௩௨)

அங்கமெட்டொடு மைந்தொடுமூன்றொடும்
பங்கமோவப் பணிந்துவலங்கொடு
மங்கைபாகன் வரத்துவிடைபெறீஇத்
தங்குதன் *னுட சத்தினுக்கேகினன். (௩௩)

அகத்தியர் ஞானோபதேசம்பெற்றபடல முற்றிற்று.

ஆ செய்யுள் ௨௬௭.

## காளிதிருவவதாரப்படலம்.

ஆசவிழ்த்த வகத்தியன ஞானோப
தேசமுற்ற சிறப்பினைச் சாற்றினு
மீசனுக்கம கேசைகான் காளியாய்
வாசமுற்ற வளக்கதை கூறுவாம். (௧)

வேறு.

பரமபதி குடமுனிக்கு வரமளித்த பின்னரந்தப் படிவமாற்றிக்
கரவிலாப் படிகவுருக் காட்டியுமை யொடுகணங்கள் கஞன்றுசூழ
விரவியவவ்வனத்துளுலாய் வருமமையத்தெம்மன்னை விமலற்போற்றி
யுரமிகுமா யாதீத நிற்கெற்றிற் கிவ்வுருவென் றுசாவினளால். (௨)

சிருட்டிதிதி சங்கார திரோபவத்தோ டருளெலனுஞ் செயல்கணைந்தின், பொருட்டதிது வெமகண்க டிறந்துள்ள போழ்துலகம் பொலிந்துதோன்றுந், தெருட்டுமவை மூடிகொ லவையழியும் பல்வகைத்தாய்த் திகழென்னுட, லருட்டிறமே யனைத்தும்வழங் கற்கேதுவெனத்திருவாக் கரும்பினனால். (௩)

இலகிமயம் பூத்தகொடி யதுசெவியுற் றிறும்பூதுள் ளேய்ந்தெண்ணில்லா, வுலகமெலா மாதலுக்கும் போதலுக்குங் காரணமே றாரும்பெம்மான், றுலமொருவு விழிதிறப்பு மூடலெனி னவைகாண்குஞ் சோதித்தென்று, மலர்தளவப் புன்முறல் சிறிதரும்பித் திருவுளத்து மதித்தாளன்றே. (௪)

* உடசம் - பன்னசாலை.

இரவிதனக் கலராமன் மதியினுக்குக் குவியாம லேழ்நாவிற்கு, மருவுருவக் குழையாம லறம்வளர்க்கு மிருகரத்தா மரைகளாலப், பரமர்சுடர்த் திருக்கண்கள் பின்பானின் றேபுதைத்தாள் *பண்ணையென்னப், பொருவின்மர கதவல்லி யுலகமொரு மூன்றுமிருள் புதைத்த தன்றே. (௫)

வையமுறை சீவரெலாம் பிரளயமே யெனமயங்கி மாழ்கிச்சாலப், பையுளுறீஇப் பதைபதைத்து வேறொன்றுந் தோற்றுதா பாணிதுற்றி, மையுமனத் தினராகி யாகாவென் றேகூவி நடுக்குற்றாரெம்,பொய்யில்பரம் பரன்றிருக்கை மையில்பரம் பரைதிருக்கை புதைத்தஞான்றே. (௬)

அந்தவனு ருயிர்க்குயிரா யுறைந்தபிரான் றிருவுளத்து ளாய்ந்துவெற்பில், வந்தவளைச் சினந்திட்டு மவள்வெருவிப் புதைத்திடுகைம் மலர்விடுத்தாண், முந்தைமறை யொழியெம்மா ணையிறெனுமு மந்தணர்கண் முதலானோர்தந், நந்தலிலாக் கருமமெலாங் காலவரை தெரிவின்றி நசித்தவன்றே. (௭)

எமைக்குறித்துச் செயும்பற்பன் மகத்தொழில்க ளொழிந்தனநா ளிருமுப்போழ்தி, லெனைக்குறித்துப் புரிந்திடுபூ சனைவினைக ளொழிந்தனமு விரண்டாதாரத், தெனைக்குறித்து நினைந்திடுயோ கியர்தவமு மொழிந்தனவின் னிசையளாவி, யெமைக்குறித்துப் புகழ்ந்திடுதோத் திரங்களொழிந் தனதக்க னீன்றபாவாய். (௮)

அவ்வவர்தாம் புரிந்தவற வினைக்கின்பு கவர்க்கம்புக் கருந்தித்தீர்வும், வெவ்வியதீ வினையிழைத்தார் பவர்க்கத்தாழ்ந் திடர்துய்த்து மீளுந்தீர்வுஞ், செவ்விதினோர் தருகால வவதிதெரி கிலதாகித் தெருமந்தோ, மூவுலகத் துள்ளாரு மிருசுடரி னொளியின்றி முருங்கினரால். (௯)

இன்னபெரும் பாதகமெம் முளக்குறிப்பி லாதுலகுக் கிழைத்ததானீ, யின்னொடியே தமோகுணத்தி னிருணிறமா யெவருமவெருண்டேங்குமாறு, கொன்னியல்வெந் கோரவுருக்கொடுகாளி யாகென்னுக் குருசாபந், தன்னைவிதித் தனனேக வொளியாகி யெங்குநிறை தருமமூர்த்தி. (௰)

* பண்ணை - மகளிர்விளையாட்டு.

விடைக்கொடியா னிடுசாப மொழிகேட்ட விடைக்கொடியாள் வெருக்கொண் டெல்லாம், படைத்தழிப்பா னடிக்கமலந் தலைக்கணிந்து பராபரநின் பாகநீத்தோர், கடைக்கணே மனுந்தரியே னையாமைப் பிழைபொறுத்தல் கடமைநிற்கென், னிடைக்கருணை யாலதற்குக் கழுவாய்தந் தருளென்று விரந்துநின்றாள். (௰௧)

அருட்கடலா னம்பனுமை முகநோக்கி யுரைதருவா னகிலத்தி யார்க்கு, மருட்கவலை புரியசுரர் தமையழிப்பா னிச்சோதி வனத்துட் சின்று, ளிருப்புறினச் சாபவிமோ சனமாமன் னதிலைய மின்றென் றோதி, யுருப்பலவா யொன்றாகித் தோன்றியசோ தியுண்மறைவுற் றொளிந்தான் மன்னோ. (௰௨)

அத்துடியே யரன்பாகம் பிரிந்தறியா ளுந்துற்றை யாயக்காளி, யுத்தரபூ ருவதிசையோ சனையொன்றி லுளமருதத் தருமத்தின் கீ, ணித்தியனுற் றருசாப மோசனமா னாளெண்ணி நியதிபூண்டு, தத்துவ மெய்ப் பொருளையுளத் துன்னிமுயன் றிருந்தனண்மா தவத்தின் மாதோ. (௰௩)

இன்னணமிக் கதைநிற்க மகபதிதான் சதகோடி யேதியால்வெற்
பன்னபுய வலனெழுவா யாமவுணர்ச் செகுத்தசெய லதுகேட்டன்று
ரன்னைதிதி யிடருழந்து காசிபனுங் கொழுநன்பா லடைந்துநாள்வீழ்ந்
தென்னையுமோர் வந்தியென விந்திரனுக் கினனென்ன வேங்கிநின்றே.

வென்னிடலின் மைந்தமைந்த மைந்தர்தமைத் தருகென்ன வேண்டினள்கேட், டன்னமுனி யதற்கிசைந்து தவள்வயின்மிக் கடல்கொ ளிரண் டவுணச்சேய்கண், முன்னருதிப் பித்துப்பின் னுறுமகார்த் தோற்றுவித்து முனையும்போரிற், றுன்னிவயம் படைபடைபல் லனவு முட னுக்குவித்தான் றொடக்கவித்தான். (௰௫)

சாற்றுவய தினுமன்றி வன்மையினு முன்னவனுஞ் சண்டனோடு
கூற்றுறழ்தா ரகன்கும்ப னுத்தண்டன் வீமாக்கன் கொடியாரீட்டம்
போற்றுவயி ரவசுவனன் மகோதரன்வீ ரனுமெனுமப் புத்திரப்பே
றேற்றதிதி முன்னுளி னிந்நாளே நன்றுளென் றிருமைபூண்டாள். ()

சேட்டகத னயின்முக நோக்கியரன் பானேன்பு சிறப்பினூற்றி
வேட்டவர வரங்களெலாங் கொண்டுலக மொருமூன்றும் வேறுதிங்கு
மீட்டுவே ரன்யாரென்று வவனுளத்திற் களிதூங்க விளம்பிச்சென்றாங்
கேட்டுமலர்க் கடம்புடைசூழ் கோகன்னமா தலத்தை யெய்தினனால். ()

ஆங்குறைந்தோ ராயிரமாண் டரியகொடுந் தவமிழைத்தா னுகப்பூவி
லோங்கியபுண் ணியதலமாங் கோகரண வெற்பமர்ந்த வும்பர்நாதன்
றுங்குவிடை மீதினுமை சேயுடன்றோன் றினனந்தச் சண்டனோக்கி
நீங்கலிலா மெய்யன்பிற் றாழ்ந்தெழுந்து துதிக்கலுற்றா னீர்கண்சோர.

விண்டுமல ருந்தியுறை விதியொருநால் வாக்கானும் விண்டுமுற் றுங், கண்டுகொளா நின்புகழைச் சிறியேன்யா னெவ்வண்ணங் கழறு கிற்பேன், றண்டுளிதூ வுறுகங்கை தவழ்சடையா யிடப்பாலோர் தையல்வைத்தா, யண்டியநற் கருணைநிறை கடைக்கண்மல ராலேதி லளியேற்காவாய். (௧௯)

அடியவர்தங் கற்பகமா மமரகண முடிமணிக ளழுந்துந்தாளாய், கொடியமதன் படவிழித்தாய் நிதிச்சிலையைச் சிலையாக்கிக் கூவளந்த, நெடியகழல் விண்டுவினை வண்டாக்கிப் பூணார நீணாணாக்கிப், பொடி படமுப் புரம்படுத்தாய் கருணைநிறை கடைக்கண்ணாற் புல்லேற் காவாய். (௨௰)

உன்னுனை மறைவிதியைத் திறம்பினர்தம் மிருண்மனத்தி னுணர் வுக்கெட்டா, வுன்னும குணங்களையே செவிப்புடங்க ளாற்பருக வுன்னுநின்றே, னுன்னுசி லடிமலரின் மலர்சூட்டுங் கல்வியிலே னுல கத்தெல்லா முன்னுளாம்பசுபதியே கருணைநிறை கடைக்கண்ணா னுலந் தேற்காவாய். (௨௧)

வேறு.

இன்னவாறுதனை யேத்துவிண்ணவர்க ளிரிபுவாகியசண் டாசுரன்
றன்னைநோக்கியருள் வள்ளலாகிய தயாபரன்கருணை கூர்ந்துநின்
னுன்னம்பாததனை யோதுகென்னலு முவந்துதானவனு மிரவிகண்
மன்னுகோடியென வயங்குகோகரண வரதனைப்பரவி வேண்டுவான். ()

இந்திரன்றக ரியக்குகின்றகன லியமன்வன்னிருதி வருணனேனர்
வந்தியக்கனீ சானனாதியவவ் வானவக்குழுவு பிரமன்மா
றந்திறத்துநின் னிடத்தினுங் *கவலை சார்வுமேவுறு வண்ணமு
முந்துமேவலரென்னொடேற்கிலென துருவுதோற்றுறு வண்ணமும்.()

அன்னர்மெய்யையான் காணுவண்ணமு மதான்றெனுதுவே லாலவர்
சென்னிதூளதாய் வீயும்வண்ணமுந் தேவர்மானிடர் விலங்கினுன்
மன்னியானிற வாதவண்ணமும் வழங்குவாயென வேண்டினு
னன்னவாறுநீ வேண்டுமவ்வெலா மாகுகென்றரன் மறைந்தனன். ௨௪

---

* கவலை - அச்சம்.

இன்னவாம்வரம் பெற்றதானவ னெழுந்துளத்திறு மாப்புறீஇ
நன்னர்சால்வலி மிக்கடைந்தன னமக்குநேரிலை யென்னரு
மென்னு மாணவத் தோடுமெங்குநின் றேகியாசுர சிற்பியான்
மன்னுசெல்வ மாயாபுரம்மென வழங்கவோர்நகர் கண்டனன். (உரு)

அங்குசோதரர்க ளெழுவர்சூழ்தர வமர்ந்துதானைபுடை சுற்றுறப்
பொங்குவாழ்வினொடு மினிதிருந்தனனப் போழ்துசில்பகல் கழிந்தபின்
றங்குமேதவருல காதிமூவுலகு தாவியேற்றமர் புரிந்துடன் [னே.
றெங்குமேவிசய நாட்டிமீள்வலென வெண்ணினனடல்கொள் சண்ட

வடபொலன்றிகிரி திகிரிபல்லகொடு வந்தெனத்திரிபல் வையமு
மிடைவிடாதுபெய லூற்றுமாமுகில்க ளெனமதம்பொழிபல் வேழமு
மடருகாந்தபிர சண்டமாருத மடுத்துலாவுபல பரிகளு
மிடல்கெழும்பல பதாதியும்புடையில் விரிகடற்கு நிகர்சூழவே. (உஎ)

தூரியத்தெழு பெருங்கலிப்புமிகு துரகதங்களை கலிப்புநீண், மாரியொத்தகட குஞ்சரம்பிளிறு மாகலிப்பும்விறல் வீரர்வாய், வாரியொத்தெழு கலிப்பும்விம்மிநெடு வான்கிழித்திட வெழுந்துபோய்ப், பாரினைத்திரள மாநினைத்தமரர் பதியையெய்தினன் வளைந்தனன் (உஅ)

சண்டனின்னமை தன்னொடும்பெருஞ் சமர்குறித்துவந் துறுசெய
லண்டர்நாயகன் றேர்ந்துமாசின மடைந்துதானைகள் போர்த்திடப்
பண்டுபொற்கடற் றோன்றுமாவின்மேற் பரியவச்சிர மேந்திவெண்
விண்டுபீதுமின் விண்டிவர்ந்தென மேவிமொய்ப்புறங் குறுகினன். உகூ

இருதிறத்துமுள தானையொன்றொடொன் றிரண்டுவார்கட லெதிர்ந்தெனப், பொருதுகின்றபொழு தமரர்சூல்பரசு புகரினுஞ்சில்வாள் கப்பணங், குருநிறத்திகிரி தண்டுநீள்சுரிகை கொண்டெறிந்தசுரர் தங்களையுருவினின்று குருதிப்பெருக்கெழ வுடன்றுநின்றெதிரடர்த்தனர்.

அண்டர்வேலின்மொத் துண்டதாலுளத் தடக்கருஞ்சின மீக்கொளா
மண்டுமாயையில் வல்லதானவர் வலிந்துவில்வளைத் தநேகவன்
வண்டுவெற்பின்மேன் மழைபொழிந்தென வானவப்படை மீச்சொரிந்
தெண்டிசாமுகஞ் செவிடுபட்டிட வெய்யெனக்குழீஇ யார்த்தனர். ஙக

தேவவீரர்மே லவுணர் தாம்பினுந் தீயவேதியின் மோதலுந்
தாவிலாவலி குன்றிவீழ்ந்தனர் சாம்பிநோதலும் விண்ணவர்
காவலன்சினங் கொண்டொராயிரங் கண்களுஞ்சிவந் துடன்றுகை
மேவுவச்சிரத் தசுரர்சென்னியை வெற்பெனப்புடைத் திட்டனன்.(ஙஉ)

குலைந்திரிந்திடுந் தானையைத்தருவர் கோன்விரைந்துகண் ணோக்கியுள்
ளுலைந்துவெஞ்சினத் தால்விழிப்பொறிக ளுதிரவல்லெயி றதுக்கியே
கலைந்திடாவலித் தம்பிமாரையெதிர் கண்டுநீவிர்போய்ப் போகியை
மலைந்தவன் றலையுருட்டியிம்மெனுமுன் வம்மினென் றுசொற்றேவினான்.

அன்னதானவர்க ளெழுவருங்குழீஇயு காந்தகாலமழை முகிலெனத்
துன்னிவெஞ்சிலை குனித்துவானவர்க டோன்றன்மெய்யிலகுகண்களில்
மன்னவெண்ணரிய கணைகடூற்றியவன் வாரணப்புழைய கையறுத்
தின்னலாரும்வகை தலைபிளந்தன ரிரிந்திடைந்தது கலங்கியே. (௩௪)

நாறுமாமத னுடன்கனன்றுவிண் ணோன்மைமிக்குறந் தாவியே
றாறுவெங்கணுக் கொண்டவாளினு னெடியினிற்கரஞ் சுற்றிவெவ்
வேறுவீரர்கள் பிரிந்திரிந்திட வெகுண்டடித்தன னுய்ந்திடு
மாறுதேருற மதிமயங்கின ராகிவீழ்ந்துமெய் மாழ்கினார். (௩௫)

கண்டுமிக்கடல் கொண்டசண்டனுங் காய்ந்துதீயெனக் கொதித்தெழீஇ
விண்டுவொத்ததே ரிவர்ந்துபோகியை விருத்திரன்னெனத் துரத்தியே
பண்டரன்புடைப் பெறுவரத்தினாற் பறந்தலைத்தலை யேவருங்
கண்டிடாவணம் மறைந்திருந்துபல் கணைசொரிந்துவிண் புதைத்தனன்.

அன்னகாலையா கண்டலன்றெரிந் தரியதெய்வதப் பரிகள்பூண்
டுன்னதப்பொலன் மதலைநாட்டியொள் ளொளிசெயத்திகழ் சயந்தனந்
தன்னைமாதலி கடவவேறினன் சமர்க்களம்புகா வில்வளைத்
துன்னிவையகம் வெதிரடைந்திட வுரத்துநாணொலி புரிந்தனன். (௩௭)

மாயைவெல்லவல பாகசாதனன் வடிகொள்வாளிபல தூவியத்
தீயசண்டன்விடு மாயவேக்களாற் செறிதருந்திமிர மோட்டிமொய்
மேயவன்னவனை நேடினானவன் விழிப்புலப்படுத லின்றியே
சாயகந்தனது மெய்துளைப்பதைத் தான்றெரிந்ததனை யோருவான். ()

எங்கொளித்துநின் றேவிடுக்குன னென்கணோர்படா னென்னெனா
வங்குளத்தரு ருழந்துமாயைவல் லான்விருத்திரா சுரன்வலன்
பொங்குசம்பனா தியரையென்கைவாள் பொன்றுமாபுரிந் திலதுகொ
லிங்கிவன்றிறல் பெரியதாயுள தென்செய்வாமெனச் சூழுவான். (௩௯)

என்கணாயிரத் திற்குநேர்படா னெதிரினின்றமர் புரிந்திடி [றியே
னென்கண்வென்றியன் றன்கண்வென்றியென் றெண்ணலாகுமஃ தன்
புன்கணெய்துமா றொளித்துவஞ்சகப் போர்செய்கின்றன னென்றுசூழ்
தன்கணோர்படை தன்னைநோக்குறீஇச் சாற்றுவானிதுவ லாரியே. (௪௰)

நீவிர்பாகவன் கூற்றரக்கனென் னீரவன்வளி யியக்கர்கோ
னுவிலேறுமீ சானனுதியோ ரத்திரங்களை யொருங்குசூழ்ந்
தேவுபின்வலிச் சண்டனைக்குறித் தியானுமென்படை தூரப்பல்யா [ன்.
மோவலின்றியெல்லோருமொன்றுசேர்ந் துடன்றுவெல்குதுமென்றனர்

அன்னவாறவ ரத்திரங்களை யடர்க்கும்வில்வளைத் தெய்தனர்
துன்னுமற்றவற் றைக்கொடுந்திறற் றுட்டதானவர்க் கதிபனுந்
தன்னதத்திரத் தாற்றகித்துவெண் சாம்பராக்கிமோ கனக்கணை
தன்னையேவினன் மதிமயங்கினர் சமரில்வெங்கொடுந் தோடினர். (௪௨)

பின்னர்வானவர் போகிதன்னுடன் பிரமனூர்வழிப் போயினு
ரன்னசண்டன்விண் ணுலகுதன்வயத் தாக்கியைந்தரு நீழல்வாய்த்
துன்னுமாதனத் தினிதுநல்லெழிற் சுரமடந்தையர் நடஞ்செய
மன்னிவீற்றிருந் தரசளித்தனன் மாயைசால்விறற் சண்டனே. (௪௩)

காளிதிருவவதாரப்படல முற்றிற்று.

செய்யுள் ௯௯௰.

---

# காளிபட்டாபிடேகப்படலம்.

ஆளியேறி யடன்மிக வூர்தருங்
காளிதோற்றங் கழறின மன்னவெண்
டோளிபத்திர பீடத்திற் றுன்னிநன்
னாளின்மோலி புனைகதை நாட்டுதும். (௧)

வேறு.

தானவர் சமர்க் குடைந்து சதுமுக னிருக்கை புக்க
வானவர் கோமான் வாணி மணமகன் மலர்த்தாட் கண்வீழ்ந்
தீனமுற் றேனைக் காக்க வென்றுகூ வலுமமன் னுனிற்
கூனம துற்ற தென்னை யுணர்த்தென வுரைக்க லுற்றான். (௨)

ஐயமுப் புவனத் தியாவு மளித்தரு டந்தை யாய
செய்யனீ யுணரா துண்டோ திதிமகன் சண்ட னென்பான்
வெய்யதாம் வரத்தா லெம்மை வென்றுவிண் கைக்கொண் டோட்டி
பொய்யென வெங்கும் வியாபித் தாறுதய ருறுத்தா னின்றான். (௩)

ஆக்கலிற் பிதா மகப்பே றடைந்தனை யேவர் மாட்டு
நீக்கமி லன்பு வைத்த னீதியா யினுநினக்குப்
போக்கறு சுரோத்த மப்பேர் பொருந்தலா லெம்மையே யின்று
காக்கனின் கடமைத் தென்னாக் கரைந்தனன் கரைந்தா னுள்ளம். (௪)

சதமக னிகழ்ந்த வண்ணஞ் சாற்றலும் பூவின் மேலான்
கதமுறீஇச் சண்ட னென்னுங் கைதவ னியாவ னன்னோ
னிதமுறை யுறையு மெங்கு நீள்வர மளித்தார் யாவர்
புதுமையீ தென்றோ ரான்போற் புகலெனக் கடாவி னானால். (௫)

உன்னுரை புதுமைத் தாகி யுள்ளதே யன்றி வேறின்
றென்னெனை யைப்பரி கசித்த லென்றுரை யாடும் வேலை
துன்னிய பேரியோதை துணுக்கெனக் கேள்விப் பட்ட
தென்னெனப் புறம்போய்ச் சண்ட னிரும்படை சூழக் கண்டார். (௬)

நோக்கிய வெண்க ளோனோன் மைசான் மராள மேறித்
தூக்குசீர்த் தேவ சேனை சூழ்தரப் போர்க் கெழுந்தான்
றாக்குமா வலிகொள் சண்டன் றானையோ டெதிர்ந்து விற்கொண்
டாக்கிநே யாத்திரம்பெய் தனைத்தையு மெரிக்க லுற்றான். (௭)

அக்கண முனிவர் யாரு மசுரனைச் சவித்தா ரன்ன
தக்கொடி யவற்கூ றொன்று மாற்றில தன்றோ ரே*நா
மிக்குற ராயினாரால் வேதனும் வெகுண்டு சீறித்
தக்கதன் னத்திரத்தைச் சண்டன்மேல் விடுத்தா னன்றே. (௮)

அத்திர மவனை நோக்கி யமரிடை விரைந்து நேடி
மத்தநீர் சுமந்தான் றந்த வரத்தினான் மறைந்து நின்ற
குத்திரன் றனைக்காணாது குறிசெய்து தன்னை யேவு
மத்திசை முகனையேமீண் டச்சுறத் துரத்திற் றன்றே. (௯)

அம்புயா தனன்வெருக்கொண் டமர்துறந் தோட்டங் கொள்ள
வும்பர்கோ னாதி வானோ ருடன்படர்ந் தும்பல் கூவக்
கம்பம தொழித்த வாழிக் கையன துலகம் புக்குத்
தம்பநின் றுதித்துப் பொன்னற் சாய்த்தவ சரண மென்னா. (௰)

எம்பகை யவுணர்க் காய்வா னீரைந்து தோற்ற முன்னா
னிம்பரி னெடுத்தளித்தா யிந்நாணீ சண்டற் கொன்று
கம்பமுற் றடைந்த வெம்மைக் காத்தரு ளெனத் துதித்தா
ரைம்படை யத்தத் தண்ண லருளினா லியம்பு மன்னோ. (௰௧)

* நாம் - அச்சம்.

அஞ்சனம்பி னீரொன் றற்கு மத்தையித் தியன்கோ டீரப்
பிஞ்சுவெண் மதியோன் றன்பாற் பெருவரம் பெற்று ளானந்
நஞ்சமன் னவனிங் கண்ணு நாடுவ னென்ற றுலுந்
துஞ்சிடான் யாமெல் லோருந் தொக்கமர் புரிவ மென்றான். (௰௨)

நன்னரவ் வாய்மை கேட்ட நான்முகன் முதல வானோர்
பொன்னுறை மார்பன் பாதாம் புயந்தொழு துவப்பி னிற்க
வந்தொடி யோரொற் றன்புக் கச்சுறீஇப் பணித்து நின்று
துன்னின னிங்குஞ் சண்டா சுரனெனக் குழறி னுறல். (௰௩)

விண்டுவு மதுகேட் டொல்லை விநதைநல் கூர்தி யூர்ந்து
தண்டொடு தகஞ்சங் காழி தனுவைந்துங் கரத்திற் றாங்கி
மண்டமர்க் கெழுந்தா னாக வானிடை யுகாந்த காலக்
கொண்டல்போன் முழங்கிச் சூழ்ந்த கொடுந்தொழி லசுர சேனை. ( )

சண்டமா ருதங் கடுத்த சண்டன்வெஞ் சிலைகுனித்துத்
தண்டுழாய் மருமத் தண்ண றனைக்குறித் தாருமே றன்ன
வண்டுபல் லனத்தொட் டார்த்தான் மாயனுந் தனுநா ணேற்றி
மண்டிய வாளி யேவி மற்றவை துகள் படுத்தான். (௰௫)

தானவ னுணர்ந்து பின்னர்த் தபனன்வெம் படை விடுத்தான்
வானவ ருவக்க மாலோன் வருணவா ளியினவித்தா
னனபின் கொடியோன் றாம தாத்திரந் தொடுத்து விட்டான்
றேனவாந் துளவோ னென்றாழ்த் தேவனே வெய்தொழித்தான். ( )

இன்னண மாறிமாறி யிருவருஞ் சமர்புரிந்தார்
பின்னரச் சண்டன் சீறிப் பிறங்குநா ராச வாளி
பன்னகா சனன் முகத்திற் பக்கங்க ளிரண்டிற் கண்ணிற்
சென்னியில் வாலிற் பல்ல திறன்பட வுரப்பி விட்டான். (௰௭)

நனுழனீள் சிறைகுலுக்கக் கணையெலா முதிர்ந்த மீட்டும்
வலனுறு புயத்தைந் நான்கு வாளிக ளெய்தான் றீயோ
னலனுற வவற்றை யம்பா றாணன் றொலைக்க வன்னான்
றுலமிலான் கைச் சாரங்கந் துணித்தன னிரண்டு வண்டால். (௰௮)

பின்னரு மாயோன் மார்பிற் பெருந்திறற் கணைக ளைந்து
நன்னுதற் கண்மூன் றம்பு நாட்டினன் மறைந்தான் சண்டன்
மன்னதிற் சோரித் தாரை வார்ந்திடச் சினவி யண்ண
லென்னிக ராழி யேவ வெரிந்தது நருளைத் தாமரை. (௰௯)

ஆழிதார் மட்டுஞ் சாய்த்த தன்றிமெய் கரந்து நின்ற
காழியில் புயத்துச் சண்டற் கண்டடர்த் திலதாகப்பின்
னூழினிற் றண்டை வாளை யோச்சவு மன்ன வாகி
யாழுறத் தன்றூராய ணுத்திரந் தொடுத்தான் மாயோன். (உ௰)

அப்படை யெழலு மும்மை யகிலமு மோகத் தாழ்ந்த
துப்புடை யதுவெஞ் சண்டற் றுருவியெங் கணுங்காணுது
வெப்பொடு மீளும் வேலை வெய்யவன் மறையைப் பல்காற்
செப்பிவிட் டிடுமோ கேசாத் திரத்திறைற் றுணிபட் டன்றே. (உ௧)

மாதவன் படைக்குந் தீங்கு வந்தமை யுணர்ந்து தேவர்
நோதகச் சிவன்வரத்தா னுண்மையிக் குற்ற சண்டன்
மாதிடன் முரசார்த் துத்தன் வயத்தவா மாலூர் விண்ணூர்
போதனூர் கொண்டு மாயா புரமடைந் திருந்தா னிப்பால். (உ௨.)

தோற்றவத் தேவர் யாருந் தொக்கொரு சூழல் வைகிப்
போற்றுறு பொன்ன னோடு புன்றொழிற் சண்டன் றன்னை
யேற்றமர் வெல்லுஞ் சூழ்ச்சி யாதெனத் தேருங் காலைத்
தேற்றிய வாய்ந்தோர் வாய்மை சிதரன் செப்ப லுற்றான். (உ௩)

கொடியினை யிரவில் வெல்லுங் கூகைதா னதனை யந்தக்
கொடியது பகலில் வெல்லுங் கொள்கையிற் காலந் தேர்ந்தக்
கொடியனை வேறு மென்னக் குகைகளிற் றுன்னி யன்னக்
கொடியனை முதல வானோர் குழீஇக்கரந் துறைந்தா ரன்றே. (உ௪)

இன்னணம் பன்னாட் செல்ல விருந்துபின் னயன்முன் விண்ணோர்
பொன்னவ னுடன்சென்றால போனக னுலக மீன்ற
வன்னையுட் களிப்ப நாளு மமர்ந்துறை கயிலைக் குன்றந்
தன்னையுற் றரன்றன் வீழ்ந்தார் தாழ்ந்திவை நெடியோன் கூறும். ()

உயிரினுக் குயிரே யெங்க ளுணர்வினுக் குணர்வே யென்று
மயர்வற வுலக மெல்லாம் வகுத்தளித் தழிக்குந் தூய
செயலுறு கருணை பூத்த செழுமலர்க் கடைக்க ணோக்கி
யயர்வற வெம்மை நாளு மாண்டருள் சிவமே போற்றி. (உ௬)

போற்றியென் றடியில் வீழ்ந்து புன்கணீர் வாரநின்று
நாற்றிசை முழுதும் வென்று நலிதர வாற்றுந் தீய
வேற்றிறற் சண்ட னெங்கள் வியனுல கனைத்தும் வௌவி
வீற்றிருப் பிடமொன் றின்றி விடுத்தன னொருட்டி யன்றே. (உ௭)

ஆதலி னெம்மை நீயே யளித்திட வேண்டு மல்லாற்
போதரு கதிவே றில்லை யெனப்புகல் பூமி கேள்வன்
பேதுறு வதன நோக்கிப் பேரருள் புரிந்து மென்பூந்
தாதுகு கொன்றை வேணித் தாதைபுன் னகையிற் சாற்றும். (௨அ)

செம்மலர்க் கமலம் பூத்த திருவளர் மார்ப கேட்டி
யம்மற வினையோர் சண்ட னன்றுசெய் தவத்தி னாலே
நம்மிரு வர்க்கு மஞ்சா நல்வரம் வேட்டா னென்னு
லம்மவஃ தளிக்கப் பெற்றே யகமகிழ் வுற்றுச் சென்றான். (௨௯)

அக்கொடி யவனைச் செற்றங் கனைத்தையு நமதாக் கொள்ளத்
தக்கதோர் சூட்சி கேண்மோ சாற்றுநா வலந்தீ வத்தின்
மிக்கதாம் பரதகண்ட வியப்புறு தமிழ்த்தே யத்துட்
டொக்கசீர்ப் பாண்டி நாட்டிற் சோதிமா வனமொன் றுண்டால். (௩௰)

அத்தரு வனத்துள் யாமு மருட்குறி வடிவா யன்பர்
கைத்தலக் கனிபோற் காணக் கனிந்துவீற் றிருப்ப நப்பாற்
சத்திமுன் னொருகா னம்மாற் சபித்திடப் பட்டுவல்ல
பத்திர காளியாகிப் பரிவொடு வதித லுற்றாள். (௩௧)

சற்றவ ணினைக்கிற் சண்டன் சண்டனூர் புகுத றிண்ணந்
தெற்றென நீவிர் கொண்ட சிந்தனை யனைத்து மந்தக்
கொற்றவை தன்பாற் சென்று கூறுமி னென்னத் தேவ
ருற்றன ருவகை மேன்மே லொழிந்தனர் தருவ ரென்றே. (௩௨)

தூன்றிய களிய ராகித் தொழுதுவெண் கயிலை நீங்கித்
தென்றிசை நோக்கிச் சென்று தெவ்வராற் கவர்ந்த தங்கள்
பொன்றிணி நகரி னேங்கிப் பொலிதரு பணைநீள் சோதி
நன்றுயிர் வனத்தைக் கண்டார் நவிகடற் கரையைக் காண்பார். (௩௩)

புகுந்தனர் சோதிக் கானம் புலர்ந்தனர் தருவ ரின்னே
தகுந்திறல் பெற்றீ ரென்று தண்மலர் பொழிவ போன்று
நகுந்துண ருதிர்க்குங் கோட்டு நகந்தொறுந் துருவி யங்கோர்
மிகுந்திரு மருத நீழல் விமலைவீற் றிருக்கக் கண்டார். (௩௪)

கண்டனர் சிரங்கை கூப்பிக் கண்பனி துளிப்ப வுள்ளங்
கொண்டன ருவகை யாங்குக் கூடின ராடிப் பல்ல
வண்டமுஞ் சராசரங்க ளனைத்துமீன் றளிக்குந் தாயை
விண்டபே ரன்பி னோடு வேண்டினர் துதிக்க லுற்றார். (௩௫)

மூன்றுரு வாகிச் சீர்சான் மூன்றுமண் டலத்தா தார
மூன்றிரண் டிடத்து மேலான் முளைத்தரு டழைத்த சோதி
மூன்றுகண் படைத்தோய்! தோன்று மூன்றுபத் துடனிரண்டு
மூன்றுதத் துவங்க டந்தோய் முறைகெழு மறைக டந்தோய். (௩௬)

கேடகந் தண்டஞ் சூலங் கிளர்வலி கெழுநா ராசம்
வாடயங் குறும லர்க்கை வாய்ந்துமுன் மகிடற் செற்றாய்
தேடிநின் சரணம் புக்க சிறியோங்க டமையுங் காக்க
நாடியிங் குறையு மன்னாய் நன்கருளென்னப் போற்றி. (௩௭)

முறையிடு மிமையோர் தங்கள் முன்பிர சன்ன மாகிக்
குறையெவ னோர்ந்த துப்பாற் கூறுமி னென்னத் தீய
கறையுடற் சண்டன் செய்த கடுந்துயர்க் கொடுமை யுந்தந்
நிறையுல கனைத்தும் வவ்வு நீர்மையும் புகன்று மற்றும். (௩௮)

உறைவிடமின்றி யெம்மை யோட்டினன் யாங்க ளோடிப்
பொறைமுழை களிற்பன் னாளும் புகுந்தொளித் திருந்தோம் பின்னர்
நறைகமழ் கொன்றை வேணி நாதனற் பாதம் போற்றி
யறைதர வன்னா னெங்க ளயர்வினை யருட்க ணோக்கி. (௩௯)

நின்னுழை விடுக்க வந்தோ நீயலாற் கதிவே றில்லை
யன்னுழை சண்ட னாதி யவுணரை யடக்கிக் கொன்று
பொன்னுழை யிருக்கை யாங்கள் புகவருள் புரிதி யென்ன
மின்னுழை கமலப் பொற்றாள் வீழ்ந்துளங் கரைந்து நின்றார். (௪0)

வேறு.

தஞ்ச மென்று தொழுமவர் தம்மைநீ
ரஞ்ச லஞ்ச லெனப்புகன் றுற்றியே
யஞ்ச லம்புரி சண்டனைக் கொன்றுநும்
விஞ்சு வெப்பகை வீட்டுவ னென்றரோ. (௪௧)

நீனி றத்தவு ணற்பொர நீவிருஞ்
சேனை யாகிமுன் சேர்மி னெனப்பெருங்
கான வாழ்வுடைக் காளி புகன்றிட
வான வாணரு நன்றென வாழ்த்தியே. (௪௨)

கண்ணு தற்பெரு மான்கடுஞ் சீற்றத்தி
னெண்ண வந்திடு சாமுண்டி யென்னுஞ்சூர்ப்
பெண்ணுந் தன்னுருக் கொண்டு பெயர்ந்திவ
ணண்ணு மாகேச் சுரியெனு மன்னையும். (௪௩)

ஆய மாத ரிருவரு மாங்கவ
னேய சொற்படி வெய்துவர் தெய்துவார்
நேய நின்னெதி ரெங்களு ணேமியா
னாயி ரங்கண னாரணன் சேய்முனோன். (௪௪)

நேரில் வைணவி நீடுமா கேந்திரி
பேரி யற்றும் பிராமிகௌ மாரிவான்
னாரி யெற்றும் வராகியென் றைவராய்ச்
சீரி னெய்துவ ரென்றவர் செப்பினார். (௪௫)

கூறி யாங்குருக் கொண்டு குழீஇனார்
வேறு ளாரும் வியன்பெரும் பூதமுஞ்
சாறு வேட்கு மிடாகினி சாகினி
யாறு பட்ட பிசாசமு மாயினார். (௪௬)

செங்க ணாரழற் செம்மயிற் பங்கியர்
தொங்கு பூருவர் சூழ்பெருந் திங்களைப்
பங்கு செய்து பதித்த வெயிற்றின
ரொங்க ணும்புழை பட்டிட வெய்தினார். (௪௭)

இன்ன தானையெ லாந்தனைச் சூழ்தரச்
சென்னி மேனிமிர் செங்குழற் காட்டொடும்
வன்னி யென்ன வயங்குறு கண்ணொடு
மின்னும் விண்ணின் விளங்கினள் காளியே. (௪௮)

னான வெண்பிறை வைத்த வெயிற்றொடும்
பீன முற்ற பெருந்தனக் குன்றொடு
மான மந்தர மானு மகட்டொடுங்
கான கத்திற் கிளர்ந்தனள் காளியே. (௪௯)

சங்கு சக்கரந் தண்டொடு தூணிவிற்
றங்கு நீக்கலங் கேடகந் தாங்குவா
ளங்கை யேந்தி யபய வரதமும்
பொங்க நின்றனள் போர்வல காளியே. (௫௰)

இன்ன தன்மைய ளாகி யிலங்கிய
துன்ன லர்க்கிடி யேறன துர்க்கையைப்
பண்ணி வாழ்த்திப் பணிந்து மயன்றனான்
மன்னு சாலமொன் றாக்கினார் வானவர். (௫௧)

நாடு மவ்வர ணப்பவிஞர் பத்திர
பீட மிட்டுப் பெருந்திறற் காளியை
மாடு பற்பல வாச்சிய மார்த்திட
நீடு வாழ்த்தி நிலவ விருத்தினர். (௫௨)

பொங்கு புண்ணியப் பூம்புன லாட்டினர்
தொங்க றாக சுடர்மணி சூட்டினர்
துங்க தீபமுந் தூபமுங் கோட்டினர்
அங்க ருச்சித் தருந்துதி நாட்டினர். (௫௩)

அன்ன துர்க்கை யருளிற்சா முண்டியைத்
தன்னைச் சூழ்தரு தானைக் கிறைவியாய்
மன்னு மென்ன வளப்புன லாட்டினர்
துன்ன லற்பொரல் சூழ்ந்தங் கிருந்தனர். (௫௪)

தேவி யைக்கண்ட தேங்கண்ட தேவியத்
தேவி வீற்றுறத் தேவர்செய் சாலந்தான்
தேவி கோட்டையப் பீடத்துச் சேர்ந்துறை
தேவி யேபத் திரகாளி யென்பவே. (௫௫)

காளிபட்டாபிடேகப்படல முற்றிற்று.

செய்யுள் ௬௫.

---

# சண்டாசுரன் வதைப்படலம்.

அன்னை துர்க்கை யபிடேகங் கொண்டருண்
மன்னி வீற்றுறை மாக்கதை கூறினு
மின்ன லாற்றி யெழுந்தசண் டாசுரன்
றன்னை வென்ற தனிக்கதை சாற்றுதும். (௧)

கொற்றவையின் னணங்கேதவி சாலபுரத் துறைவேலை குளிர்வெண் டிங்கள், துற்றசடைப் பெருமானைக் கைகலவரை யடைந்தன்பிற் றொழுது தூய, நற்றவநா ரதமுனிதென் கைலையெனுஞ் சோதிவன நண்ணி யாங்குப், புற்றருமென் கலையுடைநங் காளீசப் பெருமானைப் போற்றத் தெண்ணி. (௨)

வருநெறியிற் றிண்டிறற்சண் டாசுரன்கண் டருமுனிவ மாயோனாதி
சுரர்களையான் றுரத்தவர்வெருண்டோடிக் கயிலைவரைச்சூழல்புக்கார்
வெருவுமவ ரெங்குளரென் றிடக்கேட்டு நாரதனவ் விண்டு முன்னோர்
தருவளர்வான் சோதிவனத் துளதேவி சாலபுரந் தன்னை மேவி. (௩)

ஆங்குளபத் திரகாளி தனைச்சரண மெனவடுத்தா ரவளு நின்னோ, டோங்குசமர் புரிந்துனைக்கோ றற்குநினைந் திருக்கின்றா ளுணர்தி யென்னத், தாங்குமலர்ப் பிரமாதி களைநொடியிற் றுரத்திவிட்ட தகுவன் யானிவ், வாங்குமிடை யாடனக்கு மஞ்சுவனஞ் சிடிற்கலுழன் மசகத் திற்கே. (௪)

மற்றவளென் கால்விரற்றாட் காற்றுவளோ வவளொடும்போர் வளைப்ப தாயி, னுற்றிடுவ திழிவன்றோ வதுநிற்க வொளித்திருந்திவ் வுறுதி தேடு, மொற்றலர்க ளெனுந்தேவ கணங்களையே ரறுத்தவர் கட் குதவி செய்யுங், கொற்றவைதன் னையுங்கணத்திற் கொல்வலென முனிவரனைக் குறிப்பிற் போக்கி. (௫)

எண்ணரிய கடுஞ்சினத்துச் சண்டனும்போ ரான்வினையோ டிருந் தானிப்பாற், புண்ணியநா ரதன்றேவி சாலபுரந் தனையடைந்து புடை சூழாய, நண்ணிவள ரெழிற்காளி முன்னணுகி விறற்றகுவ னவின்ற வாறுந், திண்ணமொடு சமர்குறித்த செயலுமுரைத் திடவவடன் செவி யிற் கேட்டாள். (௬)

கேட்டலுமூ ழிக்கனலிற் சினந்துவிழித் தீசிதறக் கிளர்சா முண்டி
நாட்டுறுமா கேச்சுரிபி ராமிகவு மாரிவயி ணவிமுன் னுய
வீட்டுதிறற் றுணையொடு மெழிற்றேவி சாலபுரி யிகந்து வான்போய்க்
கூட்டுமிடி முழக்கமென வார்த்துக்கோ தாவரிவண் கூல முற்றான்.(௭)

அந்நதியின் புனலாடி யத்தீரத் துளதலத்து ளமர்ந்த வெம்மா
னன்னர்மலி யருட்குறிகண் டன்பின்விதி முறைபூசை நயப்ப வாற்றிச்
சந்நிதிநின் றேத்தலுநஞ் சிவபெருமான் மகிழ்ந்துபிர சன்ன மாகி [ள்.
நின்னினைவென் வேண்டுகவென் றலுங்காளி நேயமொடு நிகழ்த்தலுற்றா

மாயனயன் முதற்றேவர் தமைத்துரத்திக் கொடுமைபுரி வலியசண்டன்
வீயவுமித் தலமின்று தொடுத்தென்று மென்பெயரால் விளங்க வுந்தந்
தேயவருள் புரிதியென வவ்வண்ண மளித்திறைவ னினிது பின்னுந்
தூயதிறற் சூலமிரண் டருளியொன்றிற் சண்டனைநீ சூழ்ந்துகொல்வாய்

மற்றொருகு லங்கொடுசா முண்டியடற் றாரகனை வதைக்க வென்று, தெற்றெனத்தன் னருட்குறியுட் சிவபெருமான் புகுந்தொளிக்கத் தெரிந்து காளி, வெற்றிதரு தன்கரத்தி லொன்றேந்தி வேறொன்றை விறற்சா முண்டி, பெற்றிடநல் கினளன்று தொடங்கிச்சூ லினியென்னும் பெயர்பெற் றுளால். (ய)

அன்றியுமுத் தரகாளி புரமாயிற் றத்தலமு மவள்பூசித்த, கொன்றைமுடிப் பெருமானும் புகழ்தருகா ளீச்சுரப்பேர் கொண்டா னாக, நன்றுவரம் பெறுமகிழ்ச்சி யாற்காளி குதுகலித்து நலங்கொள் சேனை துன்றவெழுந் துதீசியெனுந் திசைநோக்கி யார்ப்பரித்துச் சூழ்ந்து சென்றாள். (யக)

வலனுறுசூர்க் கணங்களொடு காளியுமா யாபுரத்தை வளைந்தா ளொற்றர், சிலர்விரைவி னோடிவிறற் சண்டனொடு மஸிந்துரைப்பச் செவியுட் கொள்ளா, மலமறுமா முனிபுகன்ற மொழியுமுளத் துணர்ந்தனன் மேல் வருவ தோரான், கலகலென நகைத்துமதித் திலனிருந்தான் காலனையுங் கறுக்குங் கோளான். (யஉ)

அன்னவனு ருயிர்பருகற் காவலுறுங் கொடுங்காளி யரிய சேனை, துன்னுதிறற் சாகினிடா கினிமுதலாம் பூதகணஞ் சூழ்ந்து சாலப், பன்னுமிடிமுழக்கமென வார்த்தவுண ருறைநகருட் பாய்ந்துசின்ன, பின்னமுறக்கரங்கொடுசிற் சிலதகுவர் தமைப்பிடித்துப் பிசைந்திட்டாரால். ()

வேறு.

அந்தவேலைவிற லவுணவீரர்பல ரரியதேர்கசது ரங்கமோ
டுந்துசேனைக ளுடன்றொடங்குசம ருடுபூதகண மீதவண்
முந்திவார்சிலை குனித்துநாண்விசை முடிக்கிநின்றுசர மாரிபோற்
சிந்தவீறுகொள் கணங்களும்பொருது சீறியங்கிலை யெதிர்த்தனர். ()

விட்டவெம்பகழி தொட்டெறிந்தவுணர் வெய்யகையினி லெடுத்தவேல்
பட்டுழும்பறி படக்கவர்ந்தவர் பதைத்திடக்கொடி றுடைத்துடல்
வெட்டியங்கெழு மிரத்தமுண்டுவகை மேவினுரவுணர் வெள்கியே
முட்டிவெம்பிய சினத்தொடுங்கண மெலாம்வெருண்டிட முடுக்கினர்.()

இருதிறத்தவரு ளமர்விளைந்தசெய லினையுணர்ந்துவெகுள் சண்டனும், வருதிறத்திளைய கும்பனுதியரை வரவழைத்திகல்செய் காளியைப், பொருதுவென்றுயிர் தொலைத்துவம்மினிது பொழுதெனச்சொலி விடுத்தனன், விருதுபெற்றபல படைபடைத்தடல் விரும்பிவெங் களத் தெய்தினர். (யசு)

நின்றுவெஞ்சம ரிலஞ்சுதானவரை நின்மினென்றவ ருடன்சூழீஇத்
துன்றுதோமர நெடுங்கைவேலினொடு சூலமுங்கொடு தொடர்ந்தெதிர்ந்
தின்றுநுங்களை யமன்றிசைக்கிடுவ மென்றுபூதகண மஞ்சியே
பின்றுமாறுட றடிந்திடக்குருதி பெருகவோடின கணங்களே. (௰௭)

அன்னகாலைய தறிந்தகாளியவ ளாணைகொண்டவெழு மாதருட்
டுன்னுமூவிருவர் தண்டமோடுதிகழ் சூலமுங்கொடு தொடர்ந்தவர்
முன்னிலாதுள நடுங்குமாறுமுனை மோதிநைந்துவரு வேலையிற்
பின்னுலாவிய பிராமியார்ப்பொடு பெயர்ந்துகும்பனை நெருக்கினள். ()

தண்டுகொண்டுதலை சிதறிடப்பெரிது தாக்கினாளுதிரம் வெள்ளமாய்
மண்டிடத்தரை யுருண்டுசாய்ந்தனன் மகேச்சுரிப்பெய ரணங்குகைக்
கொண்டசூலமதை யுந்திமுந்தியடர் கோபமீறியுத் தண்டனை
விண்டுநேர்தரு முரம்பிளந்தனள் விழுந்தனன்குருதி கக்கியே. (௰௯)

மலிதிறத்தகவு மாரிவேலின்வீ மாக்கனைப்பொருது சாய்த்தனள்
வலிபடைத்தவயி ணவியும்வைரவசு வனனையாழிகொடு வாட்டினள்
பலியிடப்பெறு வராகியங்குசப் படையினிற்றிறன் மகோதர
னலிபடப்புடைத் துலவுகூளிக ணகைத்திடும்படிக் கிடத்தினள். (௨௰)

ஆரமேவியம கேந்திரிப்பெய ரணங்குசீறியொளிர் வச்சிரப்
பேருலாவுபடை யேவிவீரனைப் பிணமெனத்தரை யுருட்டினா
ளோரில்பூதகண மார்த்துவன்றகுவர் நெடியதானையை முறித்தனர்
சோரிவாரியினின் மூழ்கியாடின துளைந்துலாவுபல கூளியே. (௨௧)

வேறு.

இன்னணஞ் சமரிற்காளி சேனையா லிளையகும்பன்
முன்னவர் மாழாந் துட்கி முறிந்தன ரென்ற செய்தி
துன்னின ருரைப்பக் கேட்டுத் துடுக்கெனச் சீற்றம் பொங்கி
யென்னவ மான மீதென் றெழுந்தனன் றிணிதோட் சண்டன். (௨௨)

தருமனு மஞ்சுங் கால தண்டமொன் றங்கை யேந்தி
வெருவரு மீரைஞ் ஞூறு வேசரி பூண்ட தேரில்
வருபெருந் தம்பி யோடு வாலிவாள் சூல மாதிப்
பொருபடைத் தொகுதி மன்னப் பொலிந்தன னுருமி னார்த்தான். (௨௩)

ஆயிரங் கோடி தேர்க ளாயிரங் கோடி யானை
யாயிரங் கோடி பாய்மா வாயிரங் கோடி காலா
ளாயிரங் கோடி யாய வரியகூர்ம் படைகைக் கொண்ட
வாயிரங் கோடி சேனைத் தலைவரு மடர்ந்து சூழ்ந்தார். (௨௪)

தாளையி னுப்ப னூர்பொற் சயந்தன மீது கார்நேர்
நீனிற வுருவத் தோடு நிலவவே நியமிச் சண்டன்
பேனமார் தரங்க மாலைப் பெருங்கட லெனவிற் றோன்று
பானுவின் மார்பத் தேறிப் பயிலுமச் சண்ட னெத்தான். (உரு)

இன்னணஞ் சேனை சூழ வெழுந்துதா ரகனுந் தம்பி
தன்னொடுங் கொற்ற வேற்கைச் சண்டன்மா யாபுரப்பேர்
நன்னகர் நீங்கி விண்ணு நடுங்கப்போர்க் களத்துட் புக்கான்
றுன்னிய சங்க பேரித் துழனிதெண் டிரையி னார்ப்ப. (உசா)

அவ்வொலி முழக்கங் கேட்டங் கமர்பொர விரும்புங் காளி
கொவ்வையங் கனிவாய்ச் சத்த மாதர்தங் குழுவி னோடும்
வெவ்விய கணங்க ளோடும் விறன்மிகு தண்ட முன்னாக்
கவ்விய படைக ளோடுங் களம்புகுந் தார்ப்பரித்தாள். (உஎ)

அவ்வவ ரூர்தி மேற்கொண் டடல்கெழு சிலைகுனித்தங்
கெவ்வமில் பகழி பல்ல வேவின ரவுணர் மீது
தவ்விமே லெழுந்து பாய்ந்து தகுவருந் தொடுத்தார் வாளி
யிவ்விரு திறத்தோ ரும்பின் னிடாதமர் புரியுங் காலை. (உஅ)

கரைகெழு சூலம் வன்னிக் கபாலந்தண் டிவைகைக் கொண்டு
முறைகெழு திறற்சா முண்டி முழங்குதிண் சிங்க மேறிப்
பறைகெழு முழக்கி னோடும் பாய்ந்துவிண் ணிடைச்சுழன்று
பிறைகெழு மெயிற்றன் னூர்மேற் பெய்தன ளப்பு மாரி. (உகூ)

பின்னரும் கொடிய சூலம் பிறங்கிட வங்கை வாங்கி
மன்னிய தார கன்றன் மார்பினைக் குறித்து விட்டா
ளன்னவ னதனைத் தாங்கி யருஞ்சிலை குனித்து வாங்கிக்
கன்னிமே லோரைஞ் ஞூறு கணைபொழிந் தார்த்து நின்றான். (௩0)

அக்கணத் தவற்றை யெல்லா மரியகே டகத்தாற் றட்ப
மிக்கவெஞ் சினங்கொண் டன்னான் மீட்டுந்திக் கணைதொட் டேவப்
புக்கது விண்ணு மண்ணும் பொறியெழக் குறுகு முன்னர்க்
கைக்கது வுறுதிக் காலுங் கபாலத்திற் றடுத்துப் பின்னும். (௩க)

தறுகட்சா முண்டி யங்கைத் தண்டினாற் றூர கன்கட்
குறுகிச்சென் னியிற் புடைக்கக் குருதிவெள் ளத்தி னூடு
மறுகிப்புண் பட்டுச் சாய்ந்தான் மயங்கினன் றெளிந்து வெற்றி
பெறுசத்தி யொன்றெடுத்துப் பெருஞ்சத்தி மீது விட்டான். (௩உ)

மற்றதைக் கதைகொண் டோச்சி வருத்தொரு மூன்று துண்டா
வெற்றினன் மீட்டு மஞ்சா னெரிதெறும் பகழி மாரி
கொற்றவை யூர்தி மீதிற் கொட்டின னவற்றை யேற்றுத்
தெற்றென வண்ட மெல்லாந் திடுக்கிட வார்த்த தன்றே. (௩௩)

கண்டுசா முண்டி யாங்குக் கண்கடைப் பொறிகள் காலத்
தண்டுகொண் டெற்றி யந்தத் தாரக னூர்தி வீட்டித்
திண்டிறற் சூல மேந்தித் தேர்வல வனையு மாய்த்தங்
கண்டுதா ரகனை மார்பி லழுந்திடக் குத்தி யார்த்தாள். (௩௪)

சாய்ந்தனன் மதிமயங்கித் தாரகன் பின்னர்க் காளி
பாய்ந்துவன் றருவர் மீது பற்பல பகழி மாரி
யோய்ந்திடா துகுத்திட் டேழித் தீயென வுடன்று மேலுங்
காய்ந்துவன் மோகனப்பேர்க் கணையினுன் மயக்கி நின்றாள். (௩௫)

மோகனக் கணைக ளாலே மூடனுந் தருவர் சேனை
யேகுதற் கிடமொன் றின்றி யெங்கணுங் காளி யாக
வேகமுற் றற வெகுண்டு வெய்யகா ளியைநோக் கிந்தன்
வாகுகள் கொட்டிச் சண்டன் வாய்திறந் திசைக்க லுற்றான். (௩௬)

செல்லற்க நிற்க நின்னைச் செருப்பலித் தண்டி னென்று
சொல்லிப்போ ருளுற்றக் காளி சூலங்கைக் கொண்டு வீசி
வெல்லப்பேர்ந் தரிய வேக வேதாள வூர்தி யேறிச்
செல்லொக்கத் திரிந்தாள் சேனைற் சிறிவன் றருவ னார்த்தான். (௩௭)

ஆர்த்துவன் சிலைகு னித்தா னுசுரக் கணைதொ டுத்துப்
போர்த்தன னெங்குஞ் சண்ட னுருவெனப் பொருவில் காளி
தீர்த்தனன் றுதவப் பெற்ற சூலத்திற் சிதைத்தா ளாகப்
பார்த்ததா ரகனுஞ் சண்டன் பக்கலிற் சார்ந்து நின்றான். (௩௮)

அன்னது நோக்கிக் காளி யருகிற்சா முண்டி வந்தாள்
துன்னிய சண்ட னோடு துணைவனு முடங்கு கூடி
யன்னிலை தாம தத்தோ டயிந்திர மாக்கி யேய
மென்னுமுப் பகழி மாரி யெடுத்தனர் விடுத்தா ரன்றே. (௩௯)

இத்தகைக் கணைகள் யாவுஞ் சாமுண்டி காளி யென்னுஞ்
சத்திக ளிருவர் தங்க டக்கையிற் சூலங் கொண்டு
மொத்திநுண் கொழிது ளாக்கி முழக்கினர் கணங்க ளோடும்
வித்தக மிதுநன் றென்று வெருவின ரவுண வேந்தர். (௪0)

தனித்துறு சண்டன் றக்க தம்பியை நோக்கிக் கூறும்
பனித்துள நடுங்கச் செய்யிப் பாவையர் கொடுமை யென்னே
நனித்தெதன நினைந்தோ ரம்பாற் பெருமையை நாமே நக்கக்
கனைத்துள சேனை யெல்லாங் கண்டனங் கழிய வின்றே. (௪௧)

ஆதலின் மடவா ரென்று மாடவ ரென்று நோக்கா
தேதமிக் குறுற்றி யேனு மினியது பெறுக வென்னு
மேதகு பெரியர் வாய்மை விரும்பில மாவ தாக
காதமர் புரிவ தோநங் கடனெனத் துணிவுற் றானல். (௪௨)

துணிந்துதா ரகனுஞ் சண்டா சுரனுமென் றிருவ ருந்தங்
குணந்திகழ் துரோணங் கோட்டிக் கொடுஞ்சர மாரி பெய்து
கணங்களைக் கண்ட மாக்கிக் கண்டனன் மறைந்து நின்றான்
யணங்கினுக் கரசி யாளு ளதனையங் காய்ந்து கண்டாள். (௪௩)

தொகுசர மாரி நம்மேற் றூற்றுவ சீறிப் போந்து
புகுவன கண்டோந் தானை புரள்வன கண்டோ மந்தத்
தகுவனைக் கண்ணிற் காணேஞ் சாமுண்டி யிதென்கொ லென்று
செகுதிறற் சண்ட னின்ற திசைகுறித் தம்பு பெய்தாள். (௪௪)

கொற்றவை விடுத்த வாளி கொடியவன் படையை வாரி
யெற்றலுங் காளி வன்மை யெண்ணியங் கவளைச் சாய்த்து
வெற்றிபெற் றிடவொல் லாது வெருவிய சண்டன் பாந்தள்
புற்றொளித் தென்ன மாயா புரத்தினுட் புகுந்தா னன்றே. (௪௫)

இவ்வண்ணந் தருவ ரோடி யொளித்தமை யெய்த்துக் காளி
செவ்வண்ண நுதற்கட் பெம்மான் செப்பிய வாறு சூலத்
தவ்வண்ணச் சண்டன் கோறற் கப்படா மையினு மற்றிங்
கெவ்வண்ணம் வெல்லு மாறென் றிருந்தது சூழ்ந்தாண் மன்னோ. (௪௬)

கொடியமா யையினு லந்தக் கொடியவன் றனைமறைக்குங்
கடியவன் கவசந் தன்னைக் கட்டறுத் தனையான் சென்னி
படியிடை விளவின் வீழ்ந்த பழமென மத்த மாபோ
லுடைபடப் புடைப்ப லென்றோர் சூழ்ச்சியை யுளத்து ளுன்னு. (௪௭)

சுடரொளி நுதற்கட் பெம்மான் சோதிமா வனத்தின் கீழ்பா
னெடியவிண் ணிடைத் தடித்து நீனிறக் கொண்மூ நிற்கும்
படியென மன்னித் தன்னுட் பரமனை யுன்னி யங்கை
முடிமிசை நீட்டி நின்று முயன்றன டவத்தை மன்னோ. (௪௮)

திங்களி ராயிவ் வாறு தேவிமா தவத்தி னிற்க
வெங்களத் திவட்காற் றுது வெள்கிமுன் றூனே யோடு
தங்குமா யாபு ரத்தைச் சார்ந்தொளித் திருந்த வந்தப்
பங்கயன் மான்முன் னோரைப் பயந்தொளித் திடச்செய் சண்டன்.(சகூ)

எங்கணும் யாவ ரேனு மெனக்கிணை யில்லை யென்னும்
பொங்கிய பெருமை யுற்றேன் பொருகளத் தொருத்தி காளி
யங்கனு சேனை யோடு மடர்த்தெனை யவம திந்தா
ளிங்கிதன் மாய மென்னென் றின்னலங் கடலு ளாழ்ந்தான். (ருய)

புலம்புறு முள்ளம் யார்க்கும் புலப்படா தடக்கி யின்று
வலம்பெறு காளி யாவி வாங்குவ லென்று கூறிக்
குலம்பெறு மொற்றர் தம்மைக் கூயவ ரனுக நோக்கி
நலம்பெற நகுவேற் சண்டா சுரனிவை நவில லுற்றான். (ருக)

தூதர்காள் காளி யென்னுஞ் சூரணங் கொருத்தி முன்னாண்
மாதராஞ் சேனை சூழ வந்துநம் மவரிற் சில்ல
பேதமைச் சிறுவ ரோடு பெருமுழைப் பினரைப் போரி
லேதமிக் குறச்சாய்த் தச்ச மெய்தின ளோடுற் றாளால். (ருஉ)

அன்னவஞ் சகியைத் தேடி யறிந்தவ ணிலைமை யாவும்
பன்னுமி னம்பா லென்னப் பரிந்தவர் விரைவி னேடி
முன்னருந் தவமேற் கொண்ட முதல்வியைக் கண்டு மீண்டு
மன்னனைக் கிடைத்துத் தாழ்ந்து வணங்கியீ துரைப்ப தானார். (ருந)

ஐயகேள் குணக்க தாய வார்கலிக் கருகி லுள்ள
மையறு நறிய நீத்த மாசுண நதிக்கூ லத்திற்
பொய்யின்மான் மிய விருத்த புரிக்குவா றுணதிக் கின்க
ணய்யரைக் காவ தத்தி னவிர்தருஞ் சோதிக் கானம். (ருச)

அத்தகு வனத்தின் கீழ்பா லணங்கினுக் கரசி யான
சத்திமெய்த் தவஞ்செய் கின்ற தன்மைகண் டங்கு ளார்பா
லித்திறத் தினள்யா ரென்ன விவள்பெயர் காளி யென்னுஞ்
சத்திவன் சண்டற் கொல்வான் றனித்துநோற் கின்றா ளென்றார்.(ருரு)

என்றன ரன்று தூத ரியம்பிய கேட்டுச் சண்டன்
றுன்றிய கோப மூண்டு சுடர்ப்பொறி கண்கள் காலத்
தன்றிறற் சேனை யோடுந் தலைவரைப் படைக டாங்கி
யின்றெழு மின்க ளந்தக் காளியை வேறற் கென்றான். (ருசு)

தன்பல படைக ளேந்தித் தனிவரை யனைய மார்பின்
மின்பணி கவசம் வேய்ந்து விரைஇப்புறம் போதுங் காலை
யன்புறு துணையு ருப வதியென்பா ளன்ன மென்ன
முன்புவந் தடிப ணிந்து சிற்சில மொழிய லுற்றாள். (௫௭)

எவ்வழி யெய்து தற்கின் றெழுந்தனை சிற்ற மென்னை
யவ்வகை யடியேன் சற்றங் கறிதரப் புகலொ ணாதோ
செவ்விசா லன்ப வென்னத் திறல்கெழு சண்டன் கூறு
நவ்வியொண் விழியாய் யாரு நகைத்திடத் திரிவ ளோர்பெண். (௫௮)

காளியென் றிடுநா மத்தாள் காலனைக் குறுகுங் கால
மாளியென் றெனையெண் ணும லவள்வலி யென்பாற் காட்டக்
கூளிகள் சூழ வந்தென் குழுவினர் சிலரைச் செற்றாள்
வாளியி னவளை யின்று வதைத்துள மகிழ்தற் கெண்ணு. (௫௯)

எழுந்தனன் விரைவி லென்று னின்பொடு கேட்டன் றான்று
டொழுங்கொடி புகலுங் கேள்வ சூழ்ந்தவை செயினு மென்று
மழிம்புறு முன்னாட் சாவா வளப்பரும் வரங்கள் பெற்றாய்
கெழும்பரா சத்தி தன்னைக் கேட்டொன்றும் பெற்று யின்றால். (௬௦)

ஆனதா லவளே காளி யாகிநிற் பகைத்தா ளென்று
யானினைத் தனன்மே னாளு மிலக்கறு வரங்க ளேற்ற
தானவர் மகிடன் முன்னோர் தமையுமி லளிதை யாகி
யூனினை வாட்டி னாள்வ் வுறுதிகொண் டுரைக்க லானேன். (௬௧)

நங்குலத் தலைவ னுக் நலமுறு பாத லத்துத்
தங்குமா வலியோ டியாமுஞ் சலிப்பற வாழ்த னன்றென்
றிங்கிவை யில்லாள் கூற வியைவனோ சண்டன் கேட்டு
மங்கையர் மதியா லீது மானமற் றுரைத்தா யின்னே. (௬௨)

சென்றவட் செற்று லன்றித் திரும்புவ தில்லை நீசென்
றொன்றிய பாத லத்துற் றுயிர்பிழைத் திடுக வென்று
கன்றிய வெகுளி மூண்டு கடும்பரித் தேரி லேறித்
துன்றிய சேனை சூழச் சோதிமா வனமுற் றுனால். (௬௩)

வேறு.

சாற்றுமத வூட்டேவி சாலபுரம் புக்கங்
கேற்றுவரு தம்பியரொ டிம்மென வெழுந்து
கூற்றெனை வெதிர்த்தவெழு கோற்றொடிக ளோடுந்
தூற்றுசர மாரியிற் றொடுத்தமர் விளைத்தான். (௬௪)

அத்தகைய போரிலெதிர்த் தாற்றலர்க ளாகிச்
சத்தமட மாதர்வி தனத்தொடு கலங்கி
யெத்திசையு மோடின ரிடுக்கணுற வெய்தாத்
தத்துகடற் றானையொடு சண்டனு நடந்தான். (சு௫)

சோதிவனத் தோர்புடை தொடர்ந்ததவத் துற்ற
மேதினியமி தித்தகழல் விந்தைதனைக் கண்டா
னோதியில ளித்தருண மேதருண மென்று
வோதிமுனி வாங்கிமுனி வோடுகணை தூர்த்தான். (சுசு)

தக்கண மெழுந்துவிற் சண்டனிளை யோருந்
தொக்கபெருந் தானையொடு தொட்டனர் துரோண
மிக்ககனல் வாளிமுதல் வெய்யபல வாளி
யொக்கவசி தண்டமு மூரப்பிவிடுத் தார்த்தார். (சுஎ)

அந்நிலை யுணர்த்தமரி யங்குறு சமாதி
நன்னிலை தணந்தவுணர் நாற்றிசையுஞ் சூழ்ந்து
செந்நிலைய வாளிமழை சிந்தியது மன்னுந்
தன்னுடலை யத்தழ றகித்தமையுங் கண்டாள். (சுஅ)

ஆயிடையித் தன்மைமுழு தாய்ந்திவுரு வாய்ந்தித்
தீயிடையிற் செய்தவமுற் றுதெனவுட் டேர்ந்து
பாயவனத் தென்பாலிற் பாய்ந்தரிய யோக
மாயையினி னவ்வுருவ மாய்த்தருவ மானாள். (சுகூ)

சீர்பரவு மேனியொடு தேவியவ் வனத்திற்
சேர்புதவ மாற்றலிற் றெளிந்தபெரி யோராற்
பேர்பெரிய நாயகியெ னப்பெருமெய் வாட்டுஞ்
சார்பினுரு வாட்டியெனச் சாற்றுபவத் தலத்தை. (எ0)

சத்தியுரு வந்தனைத் தணந்தருவ மாகிப்
பத்தியொடு மெய்த்தவம் பரிந்துபுரி காலை
கத்துகடற் றனவர்கள் காளியைக்கா ணாரா
யெத்திசையுந் தேடின ரிருந்துகவ லுற்றார். (எக)

மாயமிகச் செய்யவல வன்கணுறு சண்ட
னுயவொரு பக்கலி லரூபமொடு காளி
மேயதனைக் கண்டனனிவ் வெய்யவள்வஞ் சத்தால்
வீயவிது வேறியற்று வேமென வெகுண்டான். (எஉ)

தண்டமொடு சூலமிவ டன்னுருவி லேறு
மண்டுபடை சூழுமர் வளைப்பதினி வீணென்
றண்டமிசைச் சூறையுரு வாகியழ லார
மொண்டுகொடு காளியை முழக்கமொடு சூழ்ந்தான். (௭௩)

சுற்றியுடன் முற்றுகனற் சூறைபொரு ளாகிப்
பற்றுமுள மன்பொடு பராவுமவர்க் கென்று
முற்றருள் பரம்பொருளை யுன்னியுமை மாணிவ்
வற்றமருள் கென்றலு மனைத்துலகுங் காப்போன். (௭௪)

விண்ணிலச ரீரிமொழி மேவிநிறை நீரா
னண்ணிய தடாகமிது நாடென வுரைத்தங்
கெண்ணரிய சூறையி னெடுத்தமரி தன்னை
யண்ணிய வழுத்தினன வோடையினு ளன்றே. (௭௫)

ஓடையினுண் மூழ்கலு முருப்பம தொழிந்து
பீடுபெறு காளியருள் பேசரிய பெம்மான்
தாடொழுது நிச்சலுமச் சண்டன்வருத் தாத
நீடிய சடந்தருக நின்மலவென் றேற்றாள். (௭௬)

காதமர் வளைக்குழையன் காளிதனை நோக்கி
பூதவடி வந்தனை யெடுத்தியெனப் போனா
னாதனருள் வண்ணமுரு நண்ணியெம தம்மை
சோதிவன மேற்றிசையிற் சூழ்ந்துதவஞ் செய்தாள். (௭௭)

சொல்லரும ரூபமொடு தோன்றுதவத் தாளை
நல்லரிய நாயகியெ னப்புகல்வ ரத்தென்
னெல்லையினைத் தாளவன மென்பரவள் மூழ்கு
பல்லவள முற்றகுளம் பாற்குளமென் பாரால். (௭௮)

பூதவுருப் பெற்றவிடம் பூதபுர மென்பார்
காதுதிறற் சண்டனுங் கனிட்டரொடு சூழ்ந்து
மோதுபல தீக்கணையின் மூடுபு முடுக்க
மேதகுநங் காளியுடன் மேவரிதின் மீண்ட. (௭௯)

அக்கணைகண் மீண்டமையி னாங்குவிறற் காளி
யுக்குமடிந் தாளென வுணர்ந்தவுணர் யாரும்
புக்கனர்த மெல்லையினிற் போர்த்தொழில் விடுத்தார்
தக்கதிறற் காளியுநற் றவம்புரித லுற்றாள். (௮௰)

தாக்கமரி னோக்கரிய சார்பிலரு ருக்காண்
பாக்குநினைந் தேத்தினள் பரஞ்சுடரை யன்னோன்
காக்குமருட் கண்கொடெதிர் கண்டனது மாற்றார்
போக்குமுட னின்கணிற் புலப்படுக வென்றான். (௮௧)

பூணுமெழிற் காளியெதிர் பொருந்தலர்மெய் கண்ணிற்
காணவர முற்றமையிற் கண்ணுடைய ளென்னு
மேணல மமர்ந்தபெய ரெய்தியவ ணின்று
சேணுயர் வனத்தின்வட திக்கினி லிருந்தாள். (௮௨)

இருந்துமனத் தெண்ணுமென தீசனரு ளாலே
பொருந்தலர் வெலற்கரிய பூதவுரு வுங்கா
ணரும்பகைவர் தம்முரு வறிந்திடவு முற்றேன்
றிருந்தவினிச் சண்டனையுஞ் செகுத்திடுத றிண்ணம். (௮௩)

என்றிவை நினைந்தன ளிலங்குமெழிற் காளி
சென்றுதிசை முட்டவொரு சிங்கவொலி செய்தா
ளன்றுதரு வர்க்குடைபி ராமிமுத லானோர்
துன்றொலி செவிப்படலுஞ் சூழ்ந்தனர் பணிந்தார். (௮௪)

தன்படையை நோக்கியுறு தவம்புரியுங் காலை
வன்படையொ டுந்தருவர் வந்தவணிற் செய்த
துன்பமு மரன்கழ றொடர்ந்துவரம் பெற்ற
வின்பமு முரைத்தவ ணிருந்தனளொ ளம்மை. (௮௫)

வேறு.

அன்ன காலையி லம்மைவாய்த் தரக்கொலி கேட்டோர்
தன்ன மானுயிர் சோர்தரத் தாங்கியின் னருளி
னின்ன றீர்த்ததை வளர்த்தன ளின்புற வதனான்
மன்னு சாரங்க நாயகி யெனும்பெயர் வாய்ந்தாள். (௮௬)

அம்மை யிங்ஙன முறைதர வவுணர்கோ னமரில்
விம்மு கொற்றவை தன்னையும் வென்றனன் விறல்சேர்
மும்மை யாகிய வுலகருந் தேவரு முறிந்தா
ரெம்மை நேர்பவர் யாரெனத் தருக்குறீஇ யிருந்தான். (௮௭)

நார தப்பெயர் முனிவனன் னெறிப்பட நாடி
வீர வென்றனை வெல்வது விழைந்தவவ் விந்தை
வேரொ டுங்கெட வீட்டின னென்றன னகைத்து
நேர வுள்ளவர் தம்மைவீந் தனரென னெறியோ. (௮௮)

முற்ற வோர்ந்திலை மொழிந்தனை யென்றனன் முனிவன்
நற்ற வன்மொழி யென்னிது தாரக நாம்போய்
வெற்றி பெற்றதும் பொய்மையோ வென்னுமவ் வேலை
யொற்ற ரோடிவந் தவ்வழித் தாழ்ந்தன ருரைப்பார். (௮௯)

மன்ன காளிதன் சேனைசூழ் வரமறி கடல்போன்
மின்னி வீற்றிருந் தனளென வெகுண்டெளம் புழுங்கித்
துன்னு தன்னிடக் கண்கடோ டிடிப்பதுந் துணைவி
சொன்ன மாற்றமுஞ் சூழ்ந்தனன் சண்டனவ் வேலை. (௯௰)

தீயு கக்கணிற் பற்களைத் தெறிபடக் கடித்து
வாயு லர்ந்திதழ் துடித்திட மனங்கொதிப் பேற
மீயு யர்ந்ததே ரேறினன் விறற்படை யேந்தி
மேய தாரக னுதிய ரெழுவரும் விரைந்து. (௯௧)

தத்த மக்குறு வையமுற் றடற்கலந் தாங்கி
மத்த மாபரி மாமுதற் படையொடுஞ் சூழச்
சத்த மேகமு மார்த்தெனப் பேரிகை தழங்க
வெத்த லங்களு நடுங்கிட வெழுந்தன ரிப்பால். (௯௨)

தான வக்குழாந் தருக்கொடு சமர்க்கெழு முழக்கங்
கான கத்துறை காளிதன் செவிப்படக் கனன்று
வான கத்தவர் வாழ்வுறச் சூலமும் வேன்முன்
னான பற்பல படைகளு மங்கையிற் றாங்கி. (௯௩)

வேக முற்றவே தாளத்தி லேறினள் விரைந்து
மோக முற்றசா முண்டிபி ரேதவா கனமே
லாகி யுற்றரு கமர்ந்தனள் பிராமியு மன்ன
வாக னத்தினி லேறினள் தண்டுகை வாங்கி. (௯௪)

அடன்மழுப்படை சூலமு மங்கையிற் றாங்கி
விடையிலேறிமா கேச்சுரி விளங்கினள் விரைந்து
சுடரும்வச்சிரஞ் சத்தியுந் தொடிக்கையி லேற்றுக்
கடுநடைக்கல பத்திவர்ந் தனள்கவு மாரி. (௯௫)

சங்கு சக்கரந் தடக்கையிற் றாங்கிவை ணவிதான்
பொங்கு வன்றிறற் கலுழன்மேற் பொலிந்தனள் வராகி
சிங்க மேறின ளங்குச மாதிகைச் சேர்த்தி
யங்கை வச்சிரத் தொடுமகேந் திரிகரி யமர்ந்தாள். (௯௬)

இன்ன தன்மைய வெழுவரோ டேனைய கணமுந்
துன்ன வந்தரி யெழுந்தன ளண்டமுந் துளங்க
வுன்னு வாரிதி யொன்றுட னென்றெதிர்த் திட்ட
தென்ன வெங்கள மிடைந்தன விருதிறப் படையும். (௬௭)

ஆன காலைசண் டாசுரன் கேதன மீது
சேனம் வீழ்ந்ததும் பரிகணீர் பெய்ததுஞ் செந்நீர்
வான மாமழை பொழிந்தது மதித்திலன் றேவி
தானை யூடுபுக் குழக்கினன் சயிலங்க ணடுங்க. (௬௮)

தண்டு வாண்முச லங்களாற் றகர்த்துநெட் டாவ
மொண்டு வெங்கணை தூற்றியு முடுக்குவர் தகுவர்
மண்டு சீற்றமோ டெங்கிழித் தெழுபுணீர் மாந்திக்
கண்டு ளேத்துறு நகங்களாற் சாகினி கணங்கள். (௬௯)

இன்ன வாறிரு படைகளும் படைகளா லேறுண்
டன்ன செங்கள மழன்களாற் புதைந்திட வதுகண்
டுன்னி யக்கணங் கும்பன்வெங் கணைகளை யுகுத்து
மன்னு மாதர்தங் கணங்களை யஞ்சுற வலைத்தான். (௭0)

கண்ட மாதுபி ராமிவெங் கனலெழக் கனன்று
தண்ட மொன்றுகொண் டருங்கணை மாரியைத் தடுத்தங்
கண்ட மீதுறச் சுழன்றெழுந் தவன்சிரத் தடித்தாள்
துண்ட மாயிர மாயின வாருயிர் துறந்தான். (௭௧)

ஓங்கு கும்பன்மாண் டதனையுத் தண்டனங் குணர்ந்து
வாங்கி விட்டபல் கணைதடுத் துடன்மகேச் சுவரி
தாங்கு செங்கையிற் சூலத்தி னலவன் றருக்கற்
றுங்கு மாண்டிட மார்பிடைக் குத்தின ளழிந்தான். (௭௨)

மேய வன்கணம் வெருண்டிடப் பொருதவீ மாக்கன்
வீய விட்டினள் சத்தியால் வியன்கவு மாரி
மாய வெங்கணை தொடுத்தடர் வைரவ சுவனன்
சாய வாருயிர் செகுத்தனள் வைணவி தருக்கி. (௭௩)

வந்து சாகினி கணங்களைப் பொருமகோ தரனை
முந்தி நின்றுவ ராகியங் குசத்தினன் முடித்தா
ளுந்தி வீரன்வந் தெதிர்த்திட வுயர்மகேந் திரிமொய்
சிந்தி வீந்துற வச்சிரப் படையினிற் சிதைத்தாள். (௭௪)

அறுவ ருந்துறக் கத்தரம்பையர்நலனுர
முறுகு வெஞ்சினத் தாரகன் மூந்துறு மாதர்
தறுகண் வெம்படை சிதறிடத் தாக்கின கணையான்
மறுகி வீழ்ந்தனர் மற்றவர் சாமுண்டி நேர்ந்தாள். (௱ரு)

கத்தி கேடக முலக்கைவன் சூலமுங் கைக்கொண்
டெத்தி சைக்கிரி களுஞ்சுழன் றிடவெழு கடலுந்
தத்து றச்சுழன் றவுணர்தம் படையறச் சாடிக்
கத்து சிங்கநா தஞ்செய்து பாய்ந்தனள் கடிது. (௱சு)

கண்டு தாரக னுயிர மாயிரங் கணைகள்
கொண்டு வீசின னவையெலாங் கொடியகு லத்தாற்
றுண்டு பட்டிடப் புரிந்தவன் கைச்சிலை துணித்துத்
திண்டி றற்பெருந் தேர்வல வன்றலை யுடைத்தாள். (௱எ)

பின்ன ருஞ்சயந் தனப்பரி தனைப்பெரு முலக்கை
தன்னின் வீட்டின டாரகன் வையநின் றெழுந்தங்
குன்னி வானிடை யாயிரம் பாரமன் னுலக்கை
மின்ன வீசினன் சாமுண்டி யூர்திமை வெகுண்டான். (௱அ)

வெகுண்ட தாரகன் வீசிய வுலக்கையைத் தன்கைத்
தகுந்த சூலத்திற் றாக்கினண் முறிந்தது பின்னு
நகுந் திறற்றடி கொண்டுநஞ் சாமுண்டி நலியப்
புகுந் தடித்தனன் சத்தியிற் பொடித்தன ளதையும். (௱௯)

செங்கை யேந்திய படையெலாஞ் சிதறிடத் திகைத்துப்
பொங்கு மாயையின் வான்புவி போற்பதோர் பெரிய
வங்க மாய்ச்சிறு குழவியா யிரண்டுரு வாகித்
தங்கு வன்றடி கொண்டுசா முண்டிமுற் சார்ந்தான். (௱௰)

தானுந் தன்னுருப் பெரியதாய்ச் சிறியதாய்த் தரித்து
மானி டப்பெரு மானருள் சூலத்தின் மற்றொன்
றான சூலமு மாக்கியவ் விரண்டினு லந்தத்
தான வன்புரங் களையொரே சமயத்திற் பிளந்தாள். (௱௰க)

திகைக விழ்த்தன செய்யபுண் ணீர்குடித் தார்த்தாள்
கரையி லாக்களிப் பொடுகணங் களுங்குது கலித்த
விரவு தானவர் திசைதிசை யோடினர் வெருண்டு
பரவு விண்ணவர் மலர்மழை பொழிந்தனர் பரிந்து. (௱௰உ)

துணைவ னுருயிர் துறந்தமை நினைந்துளஞ் சோர்ந்தங்
கிணையி ழந்தபுள் ளெனக்கலங் குறீஇயுடன் றெளிந்து
கணைவி லேந்திவன் றண்டொடு சூலமுங் கைக்கொண்
டிணையுந் தன்னணி தேற்றின னுடன்வரச் சண்டன். (௱௰௩)

சண்ட மாருத மெனச்சுழன் றும்பரிற் றாவி
யண்ட கூடமு மிடிதர வசலங்கள் யாவும்
விண்டு திர்ந்திட வேலைக டதும்புற வெருண்டு
திண்டி றற்புயங் கொட்டின னேற்றொலி செய்தான். (௱௰௪)

தேவி யும்பெரு வடிவமாய்ச் சேணெலாந் தானுய்த்
தாவி மும்மைசூ ழுலகுயிர் களுஞ்சலித் தயர்வுற்
றாவி யுட்குற வந்தரத் தார்த்தனள் வடவைத்
தீயு மஞ்சிடக் கண்கடைப் பொழிதரச் செறுத்தாள். (௱௰௫)

குன்ற மேநிகர் சிலையிடைக் குணத்தொனி செய்து
றூன்று புற்றெனுந் தூணிநின் றெடுத்தவண் டொடுத்துக்
கன்று சண்டனன் றேவிய கணைகளாம் பாந்தண்
மன்று வன்கணத் துயிருண வருதல்போல் வளைந்த. (௱௰௬)

சினந்து தேவிகைச் சூலத்தி னுலவை சிதைக்க
மனந்த ளர்ந்துறு சண்டனோர் மத்தமால் யானை
யெனுந்திண் மேனியி னெதிர்ந்தன னெதிர்த்துநங் காளி
வனந்த யங்குறு சிங்கவேற் றுருக்கொடு வகிர்ந்தாள். (௱௰௭)

சிங்க மேனிகொண் டெதிர்த்தனன் சண்டனுந் தேவி
யங்கு வன்றிறற் சரபமா யடித்தன ளதனைத்
துங்க வன்சிறைச் சரபமா யவனுமுற் றோன்றப்
பொங்கு கண்டபே ரண்டமா யங்கதைப் புடைத்தாள். (௱௰௮)

இன்ன வாறுசண் டனுநொடிக் கோருரு வென்னப்
பன்ன காசனன் பன்னகஞ் சம்புகம் பூசை
துன்னு வர்னர முதற்பல மிருகமாய்த் தோன்ற
வன்ன தன்பகை யுருக்கொடு தேவியு மழித்தாள். (௱௰௯)

ஆயி டைப்பெரு மூச்செறிந் தியான்செயு மரிய
மாயை யாவையு மழித்தனள் மற்றினி யிவளை
வீய வெல்வதெங் ஙனமெதிர்த் தமர்செயா விடினுந்
தீய காளியிங் கெனைவிடாள் கொல்வது திண்ணம். (௱௨௰)

துன்று காளியே நினைக்கொலுங் கூற்றெனத் தொடுத்தங்
கன்று கூறிய மனைமொழி யதனையுந் தடுத்தே
னின்று சூழ்வதி லென்பய னவதா குகவென்
றொன்று தன்மனத் துறுதிகொண் டெழுந்தனன் சண்டன். (௱௨௧)

தேவி தன்முக நோக்கிமுன் றேவர்கோன் முதலோர்
யாவ ரும்வெலற் கரியவென் முன்னமர் முனைந்தாய்
*தாவ மேற்றுமுன் றானையின் முடிதரத் தகுமோ
பாவை நீயுனைக் கொல்வதிற் பழிப்பலாற் புகழோ. (௱௨௨)

என்ன வின்னணம் புகறலும் யாமளை கேட்டுத்
தன்னை யேபுகழ் மூடரிற் றலைவநின் கழுத்திற்
றுன்னு காலபா சத்தினை நோக்கிலை தோற்று
மென்னி னின்றுநீ தப்புவ தெங்கென விசைத்தாள். (௱௨௩)

இன்ன வன்மொழி கேட்டசண் டாசுர னெடுத்துப்
பன்ன ருஞ்சிலை கோட்டினன் மோகனப் படைக
டுன்ன வாயிர மாயபல் கோடிக டூற்ற
வன்ன சண்டரோ ராயிர கோடிக ளானார். (௱௨௪)

ஆர ணங்குமோ ராயிர வாயிர வுருவாய்
நேரு மொவ்வொரு சண்டற்கோர் காளியாய் நின்று
போரின் முத்தலைச் சூலத்தி னுயிர் போக்க
வீர சண்டனும் விச்சுவ வுருக்கொளீஇ வெகுண்டான். (௱௨௫)

எங்க டேவியு மடியத லத்துற முடிவான்
பங்க யாதன னுலகின்மேற் பாய்தரப் பெரிய
வங்க மோடுநின் றவுணனைச் சூலத்தாற் சிதைத்துச்
செங்க ளத்தினின் றெறிந்தன டிசைதிசைச் செறிய. (௱௨௬)

பின்னு மொன்றுபட் டெதிர்ந்தடர் பெற்றியை நோக்கி
யென்னி தாமென வையுற வெய்திநம் பெருமான்
சொன்ன வாறுதின் சூலமுங் கொன்றில தென்னிற்
றுன்னு சண்டனை வெல்லுமா றெவனெனச் சூழ்ந்தாள். (௱௨௭)

அன்ன காலையிற் சதாகதி யருவமாய்த் தேவி
முன்னர் நின்றுநான் முன்னவ னேவலின் வந்தே
னன்ன லந்திகழ் கிரவுஞ்ச தீவத்தி னுப்பட்
பன்னு மோர்வரை பஞ்சசி ருங்கமென் றுளதால். (௱௨௮)

---

* தாவம் - தீ.

அந்த வெற்பினி லைம்பெருங் குகையுள வவற்று
ளைந்து பாந்தளுண் டுயிர்நிலை சண்டனுக் கவையா
மந்தில் பாந்தள்க ளவனுடற் சேர்த்தொரே யமையத்
துந்தி வெட்டுக மாள்வனென் றாதைசென் றனளால். (௱௨௯)

சண்ட னாருயிர் நிலையுணர்ந் தகமகிழ் ததும்பித்
தண்டொ டுந்திகழ் சாமுண்டி யைச்சமர் நிறுவித்
திண்டி றற்பெருஞ் சூலத்தைச் செருக்கள நாட்டி
மண்டு தானவ ரோடமர் புரிகென வைத்து. (௱௩௰)

தான்ற னூர்திவே தாளத்தி லேறின ளிரண்டு
மூன்று மாதரு மூர்தியின் முந்துறச் சென்று
ளூன்று தானவர் தாமறி யாமலங் கொருவி
யான்ற பஞ்சசி ருங்கமுற் றதன்குகை யடைந்தாள். (௱௩௧)

கண்ணொ டுங்குதங் காதுபன் மூக்கென முறையே
நண்ணி டங்களில் விடங்கொளைந் நாகமுங் கண்டா
ளெண்ணு மாதரி யேவலால் வைணவி யிவருந்
திண்ண வைநதே யனுமவை களைக்கொடு சேர்ந்தான். (௱௩௨)

விண்ணி டைப்பெருந் தேவியுஞ் சேனையும் விசையி
ணண்ணி யாகவ பூமியை நாடனு நெடுந்தேர்க்
கண்ணி ருந்துவீழ் சண்டனைச் சாமுண்டி காலா
லெண்ணி யாங்கவன் மெய்ம்மிதித் தேறிநின் றனளால். (௱௩௩)

வெருண்டு பத்திர காளியும் விரைந்துவாங் கியபன்
னகங்க ளைந்தையு நடுங்குறச் சண்டன்மெய்ச் சேர்த்தி
மிருந்தி றற்பெருஞ் சூலத்தி னொருங்குற வீட்டி
யகந்தொ லைத்தன ளாங்கவ னாருயிர் துறந்தான். (௱௩௪)

பெருகி வார்தரு குருதிவெள் ளத்திடைப் பேய்கள்
பரிசை யைக்கவிழ்த் தவற்றிடை யொய்யெனப் பாய்ந்து
செருவில் வீழ்ந்துள தண்டுகொண் டேற்றிமேற் செலுத்திப்
பரிசி லுய்க்குமீ கான்களை நேர்தரப் பயின்ற. (௱௩௫)

சோரி வாரியி னிடைக்கரி *யழன்களைத் துருவி
வாரி யிட்டுவில் லெனக்கரை வளைந்திடக் கோலி
யேரி கட்டியத் துணிபடு புழைக்கைத்தூம் பியைத்து
வாரு மப்புனல் வாய்மடுத் துறிஞ்சின மபல்கள். (௱௩௬)

---

* அழன் - பிணம்.

வலத்த தானவர் தசைகளை வாரணச் செவியாங்
கலத்தி லிட்டுணத் தனித்தனி யிருந்துபேய்க் கணங்க
ளுலுத்தர் கைப்பொருள் பழித்துணு மாதுல ரொப்பப்
பலத்த வற்றினைப் பறவைகள் கவ்விமேற் பறந்த. (௱௩எ)

கன்று சண்டனை வீட்டிய பத்திர காளி
நின்று பண்டனை வென்றடு லலிதையை நிகர்த்தா
ளென்று சாமுண்டி யாதிய ரடிபணிந் திருந்தார்
துன்று மாலய னிந்திரா தியரிவை துதிப்பார். (௱௩அ)

உலகம் யாவையு மீன்றரு ளுத்தமி போற்றி
அலகி லைந்தொழிற் கிறைமையு மளித்தனை போற்றி
விலகி லெம்மனோர் வேண்டியாங் கருளினை போற்றி
நிலவு வேணியன் மகிழ்ந்தரு ணிரஞ்சனி போற்றி. (௱௩௯)

மலைய மன்னவன் மகளென வந்தனை போற்றி
கலைகள் யாவையு மருள்கடைக் கண்ணினை போற்றி
சிலைவ ளைத்தவன் சிந்தையை வளைத்தனை போற்றி
யலகின் மாமறை யாகம மாயினை போற்றி. (௱௪௰)

அன்று பண்டன தாருயிர் வீட்டினை போற்றி
துன்று மெங்கள்வன் றுயரறுத் தருளினை போற்றி
யின்று சண்டனை யிருத்தருள் சூலினி போற்றி
யென்று மெங்கள்பா லின்னருள் வைத்தனை போற்றி. (௱௪௧)

என்ன வன்பொடு துதித்தமா தவனய னிமையோர்
மன்ன னேமுதல் வானவர் தங்களை நோக்கி
யின்னும் வேண்டிய வேண்டியாங் கீகுது நீவிர்
துன்னு றம்பதங் களைமரீஇத் துய்க்கவென் றனளால். (௱௪௨)

தன்று ணைப்பெருஞ் சத்தகன் னியர்முக நோக்கித்
துன்று தானவர் தானையைச் சூழ்ந்துயிர் வெறுத்து
நின்று டன்றுசெந் நீர்நிண முண்டுவென் றசைக
டின்றி ருந்தனி ரறுசுவை யுண்ணுமின் சேர. (௱௪௩)

என்று காமதே நுவைநிகர்த் திருந்தொரு நீட்டை
யொன்றி யக்கணத் தொன்றிபண் ணியங்களு மொருங்கே
மன்ற வாக்கின ளவருணக் கணங்களும் வாரி
மென்று தின்றன விழுங்கின வுண்டன வியந்தே. (௱௪௪)

எத்த லத்தினில் யாமனை வெற்றிகொண் டனனோ
வத்த லத்தினை வெற்றியூ ரெனவுல கறைய
மெத்த லத்தினிற் றனவன் றேர்க்கொடி யிற்ற
தத்த லத்தினைக் கொடிக்குள மென்றினு மறைவார். (௩௪௫)

சண்டன் வாளிகள் வீழிடஞ் சண்டனை மாளத்
தண்டு மவ்விடஞ் சராளிமா ளக்கண்டா னென்ப
பண்டு காளிதன் சிரத்தினிற் பனிமலர் மாரி
யண்டர் தூற்றிய தலந்திகழ் பூங்குடி யாமால். (௩௪௬)

கன்னி மாரொடு கணங்களுக் கனமிடுங் காளிக்
கன்ன பூரணி யெனும்பெய ரறைந்திடு முலக
மன்ன காளியின் னிடைப்பெரு வடிவுகொண் டதனன்
மன்ன வெங்குமா காளியென் றிடுபெயர் வழங்கும். (௩௪௭)

சண்டாசுரன்வதைப்படல முற்றிற்று.

செய்யுள் ௩௪௭.

---

# காளிபூசனைப்படலம்.

அண்ட வாணரை யாக்கநம் மந்தரி
சண்ட னுருயிர் சாய்த்தமை சாற்றினுங்
கண்ட வன்னவள் காளலிங் கத்தினை
மண்டு பூசைசெய் மாகதை யோதுதும். (௧)

வேறு.

பின்னரயன் மாலிமையோர் பெருமான்முன் னனவருங்
கன்னியரோ ரெழுவர்களுங் களிசிறந்து புடைசூழப்
பன்னுமியம் பலமுழங்கப் பத்திரகா ளிப்பெரிய
டன்னனைய சோதிவனந் தனைநோக்கிச் சென்றனளால். (௨)

கோங்குகமு கோங்குகழை குங்குமம்பா டலம்பனசம்
வேங்கையசோ கங்குரவு வெள்ளிலோத் தம்படிரம்
பூங்கதலி தேங்குமுதற் பொருவில்பல வளங்குலவு
தேங்குமலர்ப் பொழிலாருஞ் செழுஞ்சோதி வனஞ்சார்ந்தாள். (௩)

கார்தணறுந் தாழைமிலங் கடுக்கையொடு நரந்தமெழிற்
கூந்தல்புர சங்கடம்பு கூதாள முதற்பலவுந்
தேந்ததும்பு மலர்பொதுளச் செழும்பருவ மோராறும்
போந்துறையுஞ் சோதிவனப் பொலிவினைத்து நோக்கனுற்றாள். (ச)

பங்கயங்க ளொக்கவெழிற் பைங்காந்தள் கைங்கூப்ப
வங்கிலகு செயலைமல ராரத்தி விளக்கேந்தக்
கொங்குயிர்க்கு மலர்தூவிக் குரவுவணங் குறக்குயில்கள்
பொங்குபுகழ் பாடமயில் பொருவினடஞ் செயுமொருபால். (ரு)

கள்ளவிழ்தா மரைமலராங் கவினொங்கு தவிசிலனப்
புள்ளரசு வீற்றிருந்து பொலியுமல ரோடைகளும்
வள்ளமலர் மிசைத்தவள வளைகொழித்த மணியெறியுந்
தெள்ளுதிரைத் தடங்கள்பல செறிந்திலகு மாங்கொருபால். (சு)

சாதிகுலங் கடந்துசெறி தத்துவமெல் லாங்கடந்து
பேதமபே தங்கடந்த பெற்றியராய்த் தம்முளத்தி
னுதமுத லுங்கடந்து நாடும் பரம்பொருளாஞ்
சோதிவனங் கண்டிருக்குந் தூயவரு மாங்கொருபால். (எ)

சிங்கமுந்தந் தாவளமுஞ் சித்திரகா யமுமானு
மங்குறவு கொண்டுவிளை யாடுவன வாங்கொருபாற்
பங்கவினை யோவப் பரஞானந் தந்தருளும்
பொங்குபுன லோங்குதிரைப் புண்ணியதீர்த் தமுமொருபால். (அ)

இத்தகைய சோதிவனத் தேய்ந்தவள மெல்லாங்கண்
டுத்தமியெம் மம்மையினி தோகைநனி பூரித்த
சுத்தமனத் தோடேர் துளும்புதிரு மேனியளாய்த்
தத்துசிவ கங்கைத் தடமூழ்கி னளன்றே. (கூ)

அக்காலை யகநோக்கி லகண்டபரஞ் சுடரொளிகண்
டெக்காலு மெவராலு மெய்தரிய வின்பமுறீஇ
முக்காலுந் தொழுதேத்து முனிவருணர் வருநிலையா
னிக்காலை யருச்சனைசெய் திறைஞ்சவிரும் புற்றனளால். (ய)

ஐயவகண் டாகார மகன்றுதனிப் பிரிந்ததிரு
மெய்யுடையை யாகிலியான் விரும்பியவா றுனைப்பூசை
செய்யவெளி தாமென்ன வேண்டச் செழுங்கருணை
பெய்யுமுகி லன்னான் பிராட்டியுளப் பண்புணர்ந்தான். (யக)

பெருஞ்சோதி வடிவாய பெம்மானுந் திருவருளாற்
றருஞ்சகள நிட்களபே தத்தினா லிரண்டுருவா
யிருந்தனனஞ் சுந்தரிகண் டின்பவா ரிதிமூழ்கித்
திருந்தியபே ரன்பினொடு செவ்வதினோக் குற்றனளால். (௰௨)

தென்பாலும் வடபாலுந் திகழ்தூல சூக்குமமா
யன்பாலுற் றமர்ந்தசிவ லிங்கவடி வவைநோக்கி
யென்பார்க்குஞ் சிவபெருமா னின்னருளின் செயல்வியப்புற்
றின்பாற்சூக் குமலிங்கத் திடையருச்சித் திடமுயன்றாள். (௰௩)

இலங்குசிவக் குறிகளிரண் டினுக்குநூல் விதிப்படியே
நலங்குலவு மெழிற்சத்தி பீடமுத னாட்டுவித்து
வலங்குலவு சூக்குமலிங் கத்தின்வட பாற்றிகழத்
தலங்குலவு மெழில்வீர சத்தியுந்தா பித்தனளால். (௰௪)

கருதியமே தார்தூல லிங்கத்தி னுக்கீ சானியத்தின்
மருவுமனோன் மணிசத்தி வதிதரத்தா பித்ததன்பின்
பொருவில்சிவ கங்கையதன் றென்மேற்கிற் புனல்பெருகு
மொருபுனித தீர்த்தமுநன் குண்டாக்கி யதின்மூழ்கி. (௰௫)

பட்டுடையும் பல்பூணும் பரித்தெழிற்கண் மணிபுனைந்தங்
கிட்டதிரு நீறிலங்க விருந்துபல திரவியமு
மட்டொழுகு மந்தார முண்டாக்கி யதன்மலருங்
கட்டவிழ்பற் பலமலரும் வில்லமொடு கைக்கொண்டு. (௰௬)

பணிதிகழ்சூக் குமக்குறியிற் பன்மறையுங் காண்பரிய
மணிமிடற்றெம் பெருமானை வருகெனவா வாகனித்தங்
கணிதிகழா தனமுதல வளித்தாவி னைந்தினொடுந்
தணிநறும்பூம் புனலாட்டித் தனியாடை கொடுபுலர்த்தி. (௰௭)

பொன்னாடை யுடுத்திமணிப் பூண்புனைந்து நுதற்கணழ
லென்னுமற் றதைமறைக்கு மியல்பினிற்சந் தனஞ்சாத்தி
நன்னுண்மென் மலர்மாலை நன்கணிந்தா யிரநாம
முன்னாச்சொ லருச்சனைகள் பலசெய்து முடித்தனளால். (௰௮)

உற்றவ்வை கமழ்தூப தீபமுத லுபசாரஞ்
சொற்றமுறை பதினாறுஞ் சூழ்ந்துவிதிப் படிமுடித்துப்
பொற்றிகழ்நல் லெழில்வீர சத்தியையும் பூசித்து
நற்றரும விடையானை நாடியிவை துதிக்கலுற்றாள். (௰௯)

காரணனே முதற்றேவர் நாடரிய பரம்பொருளே
காரணகா ரியங்கடந்த கண்ணுதலே யன்பருளப்
பூரணனே புண்ணியனே பொன்றுத பெருஞ்சுடரே
ஆரணங்க டுதிக்குமுன தம்புயப்பூங் கழல்போற்றி. (உ0)

எனத்துதித்து நின்றனளவ் வெல்லையவள் கருமேனி
வனப்பொருவிப் பொற்கொடியின் வடிவுற்று டேவரதை
யுணிச்சுவண வல்லியென வுங்காளி பூசனைசெய்
துணிப்பறுமக் குறிகாளீச் சுரனெனவும் புகன்றனரால். (உக)

கரியவடி வோடிருந்த காளியுமங் களகரமாய்ப்
பரிவொடிருந் தனளதற் பத்திரகா ளிப்பெயரை
மருவியுறைந் தமரரெலாம் வழுத்தியவா லயத்தினுக்குப்
பொருவில்புறத் தற்றெவரும் போற்றிடவீற் றுறைகுவளால். (உஉ)

பின்னருமச் சுவணவல்லி *பேரிலிங்க மருச்சிப்பா
னன்னருமை கவுரியென நாடும்இரு வடிவாகு
வன்னவரு ளுமையென்பா ளருட்டூல லிங்கமதைத்
துன்னுபூ சித்தனண்மேற் சொற்றவுப சாரமுடன். (உங)

ஆகமநூற் படியருச்சித் தன்பொடுநின் றளக்கரிய
வேகபரஞ் சுடரேயென் னிதயமணி விளக்கேநற்
பாகமுறு மடியருளப் பண்பேமுக் கட்கரும்பே
போகமெலா மளித்தருளும் புண்ணியனே யெனப்போற்றி. (உச)

நின்றவுமை மனமகிழ நின்மலனோர் பேரழகு
துன்றியவா லியவடிவாய்த் தோன்றியிள நகையினொடு
மென்றனிநா யகியேநின் னிச்சையென்கொ லிசைத்தியென
வின்றுனையான் பிரிந்திருந்த றரியேனென் றிசைத்தன்றே. (உரு)

நாயகநின் பாலெனைநீ நாடியயிக் கியம்புரிக
நேயமிது வேயெனலு நின்மலனு மவ்வணமே
யேயவரு ளித்தூல லிங்கமதிற் புகுந்தனனந்
றூயபிர ணவவுருவா முமையவளு மதிற்புகுந்தாள். (உசு)

கருணைவளர் தூலலிங்கங் கருதுமுமை யயிக்கியத்தால்
பொருவிலருட் சோமேச னெனுநாமம் புகறாநன்
மருவுயிர்க்கு மந்தார நீழலிடை வதிந்தனன்பின்
பிருவரிற்பின் வருங்கவுரி யென்பவளும் பூசிப்பாள். (உஎ)

* பேரிலிங்கம் - தூலலிங்கம்.

அன்னவளுந் தன்பேராற் சோமேச னாலயத்தின்
முன்னமொரு தீர்த்தமதை யுண்டாக்கி யதின்மூழ்கி
தன்னிகர்கண் டிகைபூதி தரித்தமர்கா ளீசனையும்
பொன்னனையமென் கொடிவீர சத்தியையும் பூசித்து. (உஅ)

பின்னுமமே னான் மணியினொடும் பேசரிய சோமேசன்
றன்னையுமா கமப்படிபூ சனைபுரிந்து சந்நதியி
லுன்னியுளத் தைந்தெழுத்து முச்சரித்தங் கமர்காலை
மன்னியக வுரியன்பின் மகிழ்ந்தனனன் பார்க்கெளியான். (உகூ)

மாரனுமங் குருவிலியாய் மறைந்திருந்து நோக்குமெழி
லாரவிளங் காளையுரு வாகியவ ணமர்கவுரி
நேரிலெழுந் தருளியுன தெண்ணமென்கொ ணிகழ்த்துகெனப்
பேரருளோய் நின்னுணை பெரிதுதலை மேற்கொண்டே. (௩0)

காருருவப் பெருங்காளி யாயிருந்து கடற்றானைப்
பேரவுணர் குலச்சண்டன் றனைவீட்டிப் பெரிதுவந்தங்
காரணன்மான் முதற்றேவ ரனைவரையுங் காத்தேனென்
கோரவுரு வுந்தீர்ந்தே னின்னருளாற் குறைவில்லேன். (௩க)

இன்னுமுனைப் பிரிந்திருப்ப தேலாதிக் கணமிறைவ
வென்னைமணம் புரிந்தருள்க வெனக்கவுரி யிசைத்திடலும்
பொன்னனையா யவ்வணமே புரிகுதுமென் றருள்செய்தா
னன்னவளு மானந்தக் கடன்மூழ்கி யாங்கிருந்தாள். (௩உ)

காளிபூசனைப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௬௩௪.

---

# சுவர்னவல்லி திருமணப்படலம்.

மருமணஞ்செய் மலர்கொடு வாளிமுன்
னுருமணந் தங் குனுற்றிலிங் கார்ச்சனைப்
பெருமணந்தனைப் பேசின மன்னவ
டிருமணம்புரி சீர்க்கதை செப்புவாம். (க)

வேறு.

முடியிசைக் கங்கைவேய்ந்த முக்கணெம் பெருமான்முன்னைப்
படியுணர்ந் துலகமீன்ற பரம்பரை சுவணவல்லி
கடிமணங் குறித்துளன்பு கனிந்துமூ வுலகுளோருந்
துடியிடை மடவாரோடு துவன்றிவந் தடைவாரானார். (௨)

பொலந்திகழ் கலுழன்மேலோன் புனைமலர்க் கமலமேலோன்
கலந்திகழ் வயிரவாதி யுருத்திர கணங்களானோர்
குலந்திக ழட்டவித்தி யேச்சுரர் கோதில்சீர்த்தி
வலந்திகழ் சத்தகோடி மந்திரர் சசிமணாளன். (௩)

வானவர் திசைகாப்பாளர் வசுக்கள்கின் னரரியக்கர்
கானமர் சித்தராதி கருடகாந் தருவர்பானு
வானபன் னிருவரல்லோ னரியபல் லுடுக்கணங்க
ளீனமில் வசிட்டராதி யிருடிக ளெழுவரானோர். (௪)

உந்திய சனகராதி நால்வர்க ளொளிமன்றுடன்
முந்திய பதஞ்சலிப்பேர் முனிவர்சார்த் தூலபாதர்
நந்தியெம் பெருமானாதி நாட்டிய சிவகணங்கள்
பிந்தலி னாகநாட்டார் பெருநிலத் தவரேனோர்கள். (௫)

பங்கய விருக்கைமேய பாரதி திருவினோடு
திங்கள்வா ணுதற்சுகேசி திலோத்தமை மேனைதேவ
மங்கையர் முனிவரானோர் மனைவியர் நாகநாட்டி
னங்கனை மார்களேனை யரிவைய ரளப்பிலாதார். (௬)

அனைவரு நெருங்கிச்சூழ்ந்து ளன்பொடு நிறைந்தாராக
வனையணி பொதுளுஞ்சோதி வனந்திக ழிமயமாதை
நனையவிழ் கடுக்கைசூடி நன்மணம் புணர்த்தஞான்று
கனமுற விளங்கிநின்ற கயிலையொத் திருந்ததம்மா. (௭)

சுடரெழிற் காளீசற்குஞ் சுவணவல் லிக்குநல்ல
கடிமண நிகழ்தலாலே கருதுமண் டபங்களோங்குங்
கொடிதிகழ் மாடமாதி கோபுரம் பலவுங்காண
நொடியினிற் புரிகவென்று நுவன்றனன் பிரமனன்றே. (௮)

மயனுமவ் வாறுநீல மணியினிற் குறடுவேய்ந்து
நயனுறு செம்மணித்தூ ணாயிர நாட்டிமீது
வியனுறு மாடகத்தின் விளங்குபோ திகைபொருத்தி
வெயிலுறு வச்சிரத்தா லுத்திரம் விரவவிட்டு. (௯)

மரகதப் பலகையெங்கும் வயங்கிடப் பரப்பிச்செம்மை
பரவிய துகிரினாய விமானங்கள் பலவுமேற்றி
விரிகதி ருதயமென்ன விளங்கொளி மணித்தசும்பு
நிரலுற வமைத்துப் பொன்னி னிலவுசா ளரங்கள்வைத்து. (௰)

இன்னபல் வளங்களோடு மண்டப முனாற்றிப்பின்னு
மன்னுபொன் னரியின்மாலை மாணிக்க மாலைவேய்ந்து
பொன்னியற் கமுகுவாழை பூரண கும்பமாதி
துன்னிய வலங்கரித்தான் சூழ்ந்தன ரமரர்யாரும். (௰௧)

அவரவ ரிருக்கைபுக்கங் கமர்ந்தன ரயனுமாலுஞ்
சிவபரஞ் சுடர்முற்சென்று சென்னியின் வணங்கிப்போற்றித்
தவறின்மஞ் சனச்சாலைக்குட் டலைவபோந் தருள்கவென்ன
நவமலர் முகமலர்ந்து நன்கெழுந் தருளினானால். (௰௨)

ஐயனை மணிப்பீடத்தி லழகுற விருத்திவேதன்
செய்யபொற் றசும்பிற்கௌரி தீர்த்தத்தா லாட்டமாயன்
மெய்யினை யீரம்போக்கி விரிமணிப் பொன்பட்டாடை
கையுற வணிந்துநல்ல கண்மணி நீறுசாத்தி. (௰௩)

அணிமணிக் கலன்கள்பூட்டி யருவரை நறுஞ்செஞ்சாந்தந்
தணிதரச் சாத்திமென்பூந் தார்புனைந் தலங்கரித்துத்
துணிதர வன்றுகாணாத் துணைமலர்க் கழல்கடீண்டிப்
பணிவுறீஇப் பனிநீர்கொண்டு விளக்கினன் பரிவினின்றே. (௰௪)

மாலய னிருபானிற்க வானவர் கோமான்முன்னோர்
சீலமா முனிவரானோர் திகழ்வெப் புடையுஞ்சூழ
மேலவர் மறைவாயோத வியந்துமங் கலங்களெங்கு
மேலவார் குழலார்பாட வெம்பிரா னிருந்தானிப்பால். (௰௫)

அன்னையா யுலகமெல்லா மளித்தருள் சுவணவல்லி
தன்னைமென் கமலமின்னார் தாள்பணிந் தன்பினோடு
மன்னுமங் கலநீராட்டி மணிவிளிம் புறுபொன்னாடை
துன்னிய புனைந்துபல்ல தூய்மணிக் கலன்பெய்வாரால். (௰௬)

புலம்புநான் மறையும்போற்றும் பொன்னடிக் கமலங்கட்குச்
சிலம்புறு பாதசாலங் கிண்கிணி தண்டைசேர்த்துப்
பொலம்புரி பூம்பட்டாடை புனைந்தநுண் ணிடையிலங்க
வலம்புறு மேழுகோவை யணிக்கல னமையப்பூட்டி. (௰௭)

கதிர்விரி யிரவிசூழ்ந்த காட்சிதோற் றுறமுன்கையிற்
றுதிபெறு கடகமிட்டுத் துலங்குசெம் மணிகுயிற்றி
மதிகடந் திலகுமாழி வயங்குமெல் விரற்கணிந்து
முதிர்மணி வலயமென்றோண் மொய்ம்புற வெடுத்தணிந்து. (யஅ)

பேருவை வளைத்தார்தம்மை மெல்லென வளைக்குங்கொங்கைப்
பாரமீ திலங்குசெய்ய பன்மணி மதாணியோடு
சேரவெண் முத்தமாலை பல்லவுஞ் செறியச்சேர்த்தி
யாரமென் களபச்சாந்து மமைதர வெழிலிற்சாத்தி. (யக)

முகமதி யீன்றதென்ன முதிரெழின் முத்தனூன்ற
நகுவின்மூக் கணியுமிட்டு நவிரிரு சுடரேயென்னத்
தகுமிரு செவியினூடு சவிதிகழ் குழைகள்பூட்டித்
திகழ்பிறை நுதலின்மேலோர் திலகங்கண் கவரத்திட்டி. (உய)

விலையினன் மணியிற்செய்த விலம்பக மிளிரச்சூட்டித்
தலையணி தெய்வவுத்தி பிறைமுதற் சாத்திவாசப்
பலமலர் கற்பகப்பூம் படலையோ டியையவேய்ந்து
கலைமக டிருமுன்னூனோர் கைகுவித் திறைஞ்சி நின்றார். (உக)

பல்லிய முழக்கமார்ப்பப் பன்மலர் பொதுளியொல்கும்
வல்லிமென் மடநல்லார்வாய் மங்கலப் பாடல்சூழ
மெல்லென வடிபெயர்த்து விளங்குறு சுவணவல்லி
யெல்லையின் மறைகள்வாழ்த்த வெம்பிரான் பாலிருந்தாள். (உஉ)

மங்கல பேரியார்ப்ப மாமறை யோர்கள்வாழ்த்த
நங்கைய ரரம்பைமாதர் நடனசீ தங்கள்பொங்கத்
திங்கள்சேர் மேடமோங்குந் திதிபதின் மூன்றிறோடு
துங்கவுத் திரநாள்சோம வாரமாஞ் சுபநன்னாளில். (உங)

அணிவளர் சுவணவல்லி யம்மையை யன்பினோடு
மணிவளர் மாதவன்றன் மடியிசை யிருத்திஎம்மான்
பணிவளர் மறைநின்றேத்தும் பாதபூ சனைபுரிந்து
திணிவளர் சிரமேலந்தத் தீர்த்தமுந் தெளித்துக்கொண்டு. (உச)

அண்ணறன் கரத்திலங்க ளம்மைதன் கரத்தைவைத்துத்
தண்ணனீர்த் தாரைவார்த்துத் தந்தனன் மந்திரத்தோ
டெண்ணுறற் கரியபெம்மா னேற்றனன் மகிழ்ச்சிபூப்ப
விண்ணவர் கற்பகப்பூ மழையுளம் விழைவிற்பெய்தார். (உரு)

அன்னிலை தருப்பைசோப நாக்கதை பலாசமுன்மா
வின்னிலை யிவற்றினோடு மெழின்மலர்க் கமலப்புத்தே
ணன்னிலை வழாதுநெய்வார்த் தாகுதி நல்கவாங்கு
மன்னிலை செந்தீயுண்டு வலஞ்சுழித் தோங்கிற்றன்றே. (உ௬)

இறையவன் பொரிகையேற்றங் கெழில்பெறு செந்தீப்பெய்து
முறையெம தம்மையோடு மும்முறை வலம்வந்தம்மி
யுறைதரப் பாதந்தொட்டு வைத்தன னுவமையில்லான்
மறையவர் முனிவராசி வழங்கியக் கதைதாட்பெய்தார். (உ௭)

பெருந்தகை யெம்பிரான்றன் பிரிவறு தோழனையங்
கிருந்திடும் பெருமைசான்ற விருநிதிக் கிழவனென்பா
னருந்தவர் முனிவர்யார்க்கு மாடையா பரணமாதி
பொருந்துசந் தனதாம்பூலம் புகழ்பெற முறையினீந்தான். (உ௮)

இந்திரன் முதல்வானோரு மேனைய பதத்துளாரும்
வந்தனை புனைற்றிப்போற்ற மகிழ்வொடு காட்சிநல்கிச்
சுந்தர காந்திமேய சுவணவல் லியினோடெங்கள்
சந்திர மௌலியாய சாமியீற் றிருந்தான்மன்னோ. (உ௯)

வேறு.

அன்னகாலை யருள்வடிவாகிய
சொன்னவல்லி துணைவன்றிருவுளத்
துன்னமுன்னி யுருவிரண்டற்றெழீஇ
முன்னவன்றிரு முன்னர்நின்றாளரோ. (௩௰)

நின்றவோர்பெண் கொடியொடுநின்மலன்
றன்றுருக்கும லிங்கத்துட்புக்கன
னன்றுதேவ ரனைவருமாயிடை
மன்றவுள்ளம் மகிழ்ந்தனர்நோக்கியே. (௩௧)

வாமபாகம் வலப்புறமின்னுறு
மேமவன்ன மெழிற்கருவன்னமுங்
காமர்சூக்கும லிங்கத்திற்கண்டன
ராமிதென்னென் றதிசயமுற்றனர். (௩௨)

ஆயகாரணத் தவ்விலிங்கத்தினுக்
கேயசொர்னகா ளீச்சுரனென்றுரை
மேயநாமம் விளம்பினர்விண்ணுளோர்
தூயவன்பிற் றுதிக்கலுற்றாரரோ. (௩௩)

போற்றிசங்கர சம்புபுராதன
போற்றியைந்தொழிற் காரணபுண்ணிய
போற்றிமெய்த்தவ ருள்ளம்புகுந்தவ
போற்றிசொர்னகா ளீச்சுரபோற்றியே. (௩௪)

போற்றிசொர்ன மலைச்சிலைப்புங்கவ
போற்றிசொர்ன புரத்தைப்புரந்தவ
போற்றிசொர்ன வலிக்கருள்போதக
போற்றிசொர்னகா ளீச்சுரபோற்றியே. (௩௫)

போற்றியெங்கு நிறைந்தருள்பூரண
போற்றிமால்விழி பூண்டபதாம்புய
போற்றிவேதப் புரவியுகைத்தவ
போற்றிசொர்னகா ளீச்சுரபோற்றியே. (௩௬)

என்றிறைஞ்சிக்கா ளீச்சுரன்சந்நிதித்
துன்றியின்புற் றிருந்தனர்சூழ்வர
வன்றிடுக்கண்மிக் காக்கியதீயனை
வென்றுமெய்த்திரு மேவினன்றோடேர். (௩௭)

சொன்னவல்லியின் றாயமற்றோருருக்
கன்னிதானுமக் காளலிங்கத்தினுக்
குன்னுதக்கி லுளவீரசத்தியுண்
மன்னியொன்றினள் வானவர்காணவே. (௩௮)

கண்டுவானவர் கண்களித்தானந்தங்
கொண்டுகூடிக் குதூகலித்தன்புறீஇத்
தொண்டர்நாயகி யாஞ்சொர்னவல்லிதாட்
புண்டரீகம் புகழ்ந்திவைபோற்றுவார். (௩௯)

அன்னையாயகி லாண்டமுமீன்றவண்
மன்னுமாதிர மன்மகளானவ
ளுன்னுமாமறை யோதும்பெருமையள்
சொன்னவல்லி துணைப்பதம்போற்றுவாம். (௪௰)

சென்னிமீதொளிர் செம்மணிமோலியள்
புன்னகைக்கவின் பூரணமாமதி
யன்னவானனத் தம்மையருள்வளர்
சொன்னவல்லி துணைப்பதம்போற்றுவாம். (௪௧)

பொன்னும்வாணியும் போற்றும்பதத்தின
டன்னெதிர்ப்பகைச் சண்டனைச்சாய்த்தவள்
பன்னுசொன்னகா ளீச்சுரன்பானுறை
சொன்னவல்லி துணைப்பதம்போற்றுவாம். (௪௨)

இன்னவாறிங் கிமையவர்போற்றனு
முன்னுமன்பிற் றுதித்தற்குவந்தன
முன்னுசண்டன்வெம் போரினின்முந்தியே
மன்னுதாரெழு மாதருமாயினீர். (௪௩)

அவ்வியற்படி வங்களோடன்பர்தஞ்
செவ்வியோர்க்கருள் செய்கமற்றும்பரீ
ரெவ்வமின்றிய நுங்ககரெய்திநீர்
கவ்வைநீங்கிக் களித்திருந்துய்மினே. (௪௪)

என்றெழுந்த சரீரியிசைத்திட
நன்றுகேட்டனர் வானகன்னாட்டின
ரன்றுதொட்டவர் யாவருமன்புறீஇக்
கன்றலின்றிக் களித்திருந்தாரரோ. (௪௫)

திருமணப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௬௱௪௯.

---

# தேவர்கள் பூசித்தபடலம்.

அன்னையாயகி லத்துயிர்காத்தருள்
சொன்னவல்லி திருமணஞ்சொற்றன
மன்னவானவ ரன்பினிற்பூசனை
மன்னவாற்றிய மாகதைகூறுதும். (௧)

வையகந்துதிக் குஞ்சொர்னவல்லிதன்
செய்யவின்னருள் பெற்றுளசேனவர்
அய்யன்றன்னையு மன்னையையுந்தொழு
மெய்யன்போடு விரைந்துமுயன்றனர். (௨)

மாலயன்புரு கூதன்முன்வானவர்
சாலவன்பிற் றரங்கந்திரண்மணி
காலுநற்சிவ கங்கைத்தடம்படிந்
தாலமுண்டவ னைந்தெழுத்தெண்ணியே. (௩)

பூதிகண்டிகை பூண்டனரெம்பிரா
னோதுபூசனைக் குற்றபல்பண்டமுங்
கோதறக்கொண் டெழுந்தனர்கோலநன்
மாதுபாகன் வளர்திருமுன்னரே. (௪)

புண்ணியத்தடப் பூம்புனல்பெய்கட
மண்ணியாயிரம் வைத்தனர்மற்றதி
னண்ணுபூசை நடாத்தினரைந்தமு
தெண்ணுமானந் திருந்தயிலந்தயிர். (௫)

பாலுநெய்யும் பழங்களுங்குங்குமஞ்
சாலுமேலநற் சந்தனமாதிய
மேலுங்கொண்டு விளங்குகாளீசனைக்
காலுங்கொண்டலி னாட்டினர்காதலால். (௬)

துலங்குபேரெழிற் சோமேசன்றன்னைமா
தலங்களேழுந் தருவீரசத்தியை
வலங்கொள்சந்த மனோன்மணிதன்னைநீ
ரலங்கனற்புன லாட்டினரவ்வணம். (௭)

மின்னுநீறொடு கண்மணிவேய்ந்தனர்
பொன்னினுடை புனைமணிபூட்டினர்
நன்னுதற்க ணலங்கொள்செஞ்சந்தனந்
துன்னவிட்டுமென் மாலைகள்சூட்டினர். (௮)

அறையுமாயிர நாமங்கொளர்ச்சனை
முறையிற்செய்தனர் மொய்ம்மலர்கொண்டுபின்
செறியுநல்விரைத் தூபமுந்தீபமு
நெறியிற்காட்டினர் நின்மலன்முன்னரே. (௯)

சாலியன்னஞ் சருக்கரையன்னமும்
பாலினன்னமும் பண்ணியம்பற்பல
நீலகண்டன் றனக்குநிமலைக்கு
மேலவைத்து நிவேதனஞ்செய்தனர். (௰)

பல்லியங்கள் பலவுமுழங்குற
நல்லகீத நடனங்களார்ப்புற
சொல்லுநூலுப சாரங்கள்சோடச
மொல்லுமாறங் கியற்றியுவந்தனர். (௰௧)

நலங்கொள்செங்கை நகுஞ்சிரமேற்றியே
யலங்கொளோங்கெழுத் தாரநினைந்தவண்
வலங்கொண்மும்முறை வந்துநம்வள்ளலை
நிலங்கொள்சந்நதி நின்றிவைபோற்றுவார். (௰௨)

நித்தனேயுமை நேசயுவேசனே
முத்தனேயருட் காளீசமுன்னுவார்
சித்தனேசச்சி தானந்தவெம்மனோர்
கத்தனேயெமைக் காத்தருள்செய்கவே. (௰௩)

என்றுமாலய னிந்திரனாதிய
ரொன்றுமாமுனி வோருந்தனித்தனிச்
சென்றருட்குறி யைப்பிரதிட்டைசெய்
தென்றுமூவலி லின்னருள்பெற்றனர். (௰௪)

எனச்சுமந்து முனிவனிசைத்தலும்
வனப்புறுந்தேவ வன்மனத்தேவர்க
ளனத்தினாலறி யாலையுவேசனே
யெனத்துதித்தமை யென்னென்றுசாவினன். (௰௫)

வேறு.

சகளவடிவாகியநஞ் சிவபெருமான்முகமைந்துட் சார்ந்தகீழ்பால்
முகமதுதற்புருடம்யெள வனஞ்சுவணவன்னந்தென் முகமகோரந்
தருமுதுமைகருமைபச்சி மஞ்சத்தியோசாதந் தனியாண்டன்மை
திகழ்தருசுத்தம்வடக்கு வாமதேவம்பெண்மை செந்நீர்வன்னம். (௰௬)

நடுமுகமீசானமிளம் பருவமொடுபடிகநிற நாட்டமிந்தப்
படிபுகலுமாகமநூன் மற்றவற்றுட்கவுரியுளப் பண்பையோர்ந்தண்ட
கடவுள்குணக்கதனின்யெளவனமொடுதென்றிசையிலுறுகறுப்புங்கொ
வடிவமொடுபோந்ததனால் யுவேசன்காளீசனென வழங்குமென்றான். (௰௭)

இவ்வண்ணமுனிபுகலக் கேட்டரசன்மகிழ்ந்தயன்மா லிந்திராதி, செவ்வண்ணமுனிவர்களுஞ் சிவபெருமானருட்குறியைச் செறிந்தவன்பி, னெவ்வண்ணமெவரெவரெத் தலத்தினிற்றாபித்தனரவ் வியல்பை யெல்லா, மவ்வண்ணம்விரித்துரைக்க வெனப்பணியவருந்தவத்தோ னறைதலுற்றான். (யஅ)

தண்டுளவத்தாரவன்முன் கண்டதேவியெனுநகர் தனிற்றன்பேராற்
கண்டுதொழச்சிவக்குறியொன்றினைத்தாபித்தருச்சித்தான்கனிவிற்கண்
மண்டுபுவிக்கரசருமாய் வாழ்ந்திடுவர்சிவஞானம் வாய்க்குமங்க [டோர்
ணண்டுபுகழ்ச்சிவக்குறிக்கு விண்டுவீச்சுரனெனும்பேரறைவர்மாதோ.

இருஞ்சோதிவனத்தினுக்கீ சானியத்தில்வெற்றியூ ரெனும்பேரூரிற்
பெருஞ்சோதியருட்குறியைத் தாபித்தானகத்தியன்றன் பேரான்மற்று
மரும்பாசமவித்தவசிட் டனுந்தேவியருந்ததியு மன்பர்க்கெல்லாந்
தருந்தாதையருட்குறியைத்தனித்தனித்தாபித்தரியதலைமைபூண்டார்.

அன்னதொருவசிட்டலிங்கந் தனைப்போந்துதரிசிக்கு மன்புளார்கட்
குன்னியவாறுயுளொடு குலஞ்செல்வமேன்மேலு மூவப்பநல்கும்
பின்னரருந்ததிபூசை புரியிலிங்கந்தரிசிக்கும் பெண்பாலார்க்கு
மின்னுதிருமங்கலிய நீடித்துவாழ்ந்திருக்க வியந்துநல்கும். (உக)

கோதிலருட்சோதிவனக் குணபாலிற்றாரகனைக் கொன்றதேத்துப்
போதமருள்சிவக்குறியைப் புருகூதன்றாபித்துப் பூசித்தானற்
றீதகலவ்விடத்துமத னாற்கடிகைத்தூரமதிற் றென்கிழக்கில்
மாதவனுமகத்தியனு மிரண்டுசிவக்குறிபதித்து வணங்கிட்டானல். ()

புகலரியசோதிவனத் திருந்துநாற்கடிகையினிற் பூவின்மேலோ
னிகலிலருட்குறிதாபித் தெழிற்பூசையியற்றினனவ் விருங்காளத்தின்
றகவொருமுக்கடிகையினி லக்கினிதிக்கினிற்கமலை சார்ந்தவன்பிற்
பகவனருட்குறியதனைத் தாபித்துப்பூசித்தான் பண்புமிக்காள். (உ௩)

சோதிவனத்திருகடிகை யக்கினிதிக்கினுந்தெற்கிற் றுலங்குமேன்மைப்
பூதபுரந்தன்னினுந்தீக் கடவுளிரண்டிலிங்கங்கள் பொருந்தத்தாபித்
தேதமறப்பூசித்தானவ்வனத்திற்றென்றிசையி லியக்கன்றிக்கின் [றோ.
மேதகுமேற் றிசையினுமவ் வத்திசைக்கா வலரிலிங்கம் விதித்தார்மன்
தருவோங்குமவ்வனத்தின் மேற்குநாற்கடிகைபதிற் சயபுரத்தின்
மருவோங்குமலர்வாணி யொருலிங்கந்தாபித்து வழுத்தினளா
லொருமூன்றுகடிகையினிற் சூரியனுநாற்கடிகை யுறுதலத்தில்
வருமதியும்வாயுவினவ் வாயுவுமவ்வாறியற்றி மகிழ்வுற்றூரால். (உ௪)

பூக்குடியென்றிடுதலத்தி லளகையர்கோன்றனுமதன் பூர்வதிக்கி
லோங்குதவமார்க்கண்ட முனிவனுநற்சிவக்குறியை யொருவாவன்பி
னுங்குவித்தருச்சித்தா ரமரரொடுமுனிவரினு மநேகரானோர்
நீங்கரியபத்திமையி னிருமித்தசிவக்குறிக ணிகழ்த்தற்பாற்றே.(உ௬)

இத்தகையசுரர்முனிவ ரின்புறப்பூசித்ததல மிவைகண்மிக்க, வுத்தமதானங்களெவ ராயினுமுள்ளன்பொடுகண் டுவந்துபோற்றிற், றத்தமக்குவேண்டியவா றறம்பொருளின்பமும்வீடுந் தருவபின்னர்ச், சித்தமகிழ்ந்தவரெல்லாந் தந்தமுறையிடங்களிற்போய்ச் சேர்ந்தாரன்றே.

இவ்வனமொவ்வொருகார ணங்கொடுபல்பெயர்களைப்பெற் றிருக்கினுஞ்சொற், செவ்வையுறுகாளிவனங் காந்தாரவனம்பெருஞ்சோ திவனமென்ற, வெவ்வமில்சீர்முப்பெயரே கேட்பாருச்சரிப்பார்கட் கெனைத்துமீயுங், நவ்வையுறுவினையகற்றுங் காளீசன்றிருவருளிற் கலப்புநல்கும். (உ௭)

தேவர்கள் பூசித்தபடல முற்றிற்று.

ஆ செய்யுள் ௬௱௭.

---

# தேவதாசப்படலம்.

தேவர்சோதி வனத்திற்றிகழ்தரு
தேவதேவனைப் பூசித்தல்செப்பினாம்
தேவிசால புரத்துறைசெல்வனாந்
தேவதாசன் சரிதந்தெரிக்குதும். (௧)

வேறு.

காவெலா நறியசந்தங் கழியெலாம் பானற்கந்தம்
பூவெலாந் தேன்காலாறு புனமெலா மான்பாலாறு
கோவெலாந் தேனுபூந்தண் குளமெலாங் கமலமாந்தர்
நாவெலா மாரப்பாட்டு நனிதிகழ் பாண்டிநாட்டுள். (௨)

தருவள மைந்தொடுஞ்சிந் தாமணி வளமுந்தெய்வப்
பொருவிலான் வளமுமாங்குப் புகுநதவ ரெவர்க்குமிக்க
வருளொடு நல்குஞ்செல்வ ரணிகிளர் மாடமோங்குந்
தெருவளர் தேவிசால புரமென் றுஞ் சிறந்ததாமால். (௩)

அத்திரு நகரில்வைய மனைத்தையும் புரக்குஞ்சீரான்
சத்தியம் பொறைமையொழுக்கந் தயைபுகழ் நிகரில்சைவ
பத்திமை தருமந்தானம் பகரிவற் றுறையுளானே
னித்திய மானபூதி சாதன நெறியினிற்போன். (௪)

திக்கெல்லாஞ் சென்றுமீளுந் தேர்மாமான் பதாதியுள்ளோன்
மிக்கதி ரளகைக்கோனும் விருப்புறு செல்வஞ்சான்றோன்
தொக்கபாற் கடற்பிறந்த தூமதிக் குலத்துதித்தோன்
தக்கவர் புகழுந்தேவ தாசனென் றுளனோர்மாறன். (௫)

அத்தகு வேந்தன்சோதி வனத்துறை யமலனைய
சுத்தனம் பெருமான்காளீச் சுரனொடு சுவர்ணவல்லி
சத்தனுஞ் சோமேசன்சீர்ச் சவுந்தர வல்லிதம்பாற்
பத்தியி னென்றும்பாடி யாடுறும் பண்பான்மிக்கான். (௬)

ஆழ்ந்தவுள் ளன்பினோடு மங்கொரு பகற்காளீசற்
சூழ்ந்துசந் நிதிமுன்னெய்தித் தொழுதுசாட் டாங்கமாக
வீழ்ந்தடி பணிந்துவெய்ய வினையிருண் மதமாமாளப்
போழ்ந்தரு ளஞ்செழுத்தும் புந்தியுற் றிலங்குங்காலை. (௭)

மன்னிய வுலகமெல்லாம் வழுத்துறு காசிசென்று
முன்னையூழ் வினையின்வெய்ய முரணற முருக்குங்கங்கைத்
துன்னுதீம் புனல்கொணர்ந்து தூயநற் காளீசன்றன்
சென்னியி லாட்டுகிற்பான் சிந்தைகொண் டெழுந்திட்டானால். (௮)

சென்றனன் தேவிசால புரத்தினிற் சிறுவன்றன்னை
யொன்றிய தேயமெல்லா முவந்தர சாளவைத்திட்
டன்றுநான் மறையோர்தம்பா லநுமதி யாசிபெற்றுத்
துன்றுதன் பரிவாரங்கள் சூழ்தரப் புறம்போந்தன்றே. (௯)

காசியை நோக்கிப்பல்ல காவத நடந்துகாணு
மாசறு தேயம்பல்ல வளநகர் பல்லநன்னீர்
வீசிய நதிகள்பல்ல விரிதலைக் கானம்பல்ல
காசறு மலைகள்பல்ல கடந்தனன் றுன்பநோக்கான். (௰)

காவத மநேகஞ்சென்றுங் காசிகண் டிலமென்னென்று
தாவமுற் றிளைத்துமேனி தளர்ந்துகண் டுயிலுங்காலைப்
பாவனை செய்வாரன்பிற் படிமருட் காளிசன்றுய்
மூவறு மறையோனாகிச் சார்ந்தனன் கனவிலம்மா. (௰௧)

கங்கைநீ ராட்டநீயுட் கருதிய கடவுளன்பிற்
றங்கெழிற் றளியின்பாங்கர்த் தழற்றிசை யதனிலுள்ள
தங்கவன் றன்னாலாக்கப் பட்டதோ ரரியதீர்த்தம்
பொங்குபா தாளகங்கைப் புனல்கொடு புனைந்ததாமால். (௰௨)

அப்பெரும் புனிதநீர்கொண் டகத்திய முனிமுன்னோர்
செப்பருங் கடவுட்காட்டிச் சித்திபற் பலபெற்றுள்ளார்
துப்புறு நீயுமந்தத் தூய்ப்புன லாடியாட்டி
யெய்ப்பிலா துள்ளந்தேறு கென்றன னரசன்கேளா. (௰௩)

பல்லநா வதங்கடந்தும் பாவங்க ளனைத்தும்போக்க
வல்லநா சியினைக்கண்டு மகிழ்ந்தன னில்லைநாந்தேன்
சொல்லிய வணமெவ்வாறு தொடர்ந்தாங்குச் செல்வனென்றங்
கல்லலுற் றரசன்கூற வங்கொரு வாவிகாட்டி. (௰௪)

இந்தடந் தன்னின்மூழ்கி னெளிதிற்சென் றிடலாமென்று
வித்தகன் மறைந்தானாக விழித்தனன் வியந்துமாறன்
முத்தனங் காளீசன்றாண் முன்னினன் வைகறைப்போ
தத்தரு தடத்தைநோக்கி யடைந்தன னடையுங்காலை. (௰௫)

கங்குலிற் போந்தவன்றோன் கண்கூடாப் போந்துமன்ன
விங்கிதின் மூழ்கவென்றாங் கெழிற்கரம் பற்றியிர்த்துப்
பொங்குநீர்த் தடத்தாளாழ்த்திப் போயினன் கணத்திலம்ம
தங்குறு சோதிக்கானத் தண்சிவ கங்கையுற்றான். (௰௬)

நவில்சிவ கங்கைத்தீர்த்த நாப்பணுற் றெழுந்தானங்குக்
கவினுறு காளீசன்ற னாலயங் களிப்பினோக்கி
யவணுறு மவர்கட்கெல்லா மன்னனிம் மகிமைகூறித்
தவமறை யவராற்கூறுஞ் சங்கற்பம் விதியிற்செய்து. (௰௭)

சிவபரஞ் சுடரினுக்குஞ் சிவகங்கைத் தடத்துண்மூழ்கி
நவமுறு பூதிகண்டி நன்குற வணிந்துசெம்பொ
னவிர்தரும் பங்கைவாங்கி யப்பெரும் புனன்முகந்து
கவர்தரு மன்பினுய்ந்து காளீசன் றன்னையாட்டி. (௰௮)

நறுமலர் பல்லகொண்டு நவிலருச் சனைபுரிந்து
செறிவிரைத் தூபதீபந் திகழ்தரக் காட்டிச்செவ்வை
யுறுநிவே தனங்களீரெட் டுபசாரங் களும்புரிந்து
பெறுமுள மகிழ்ச்சியோடு பிரிவிலைந் தெழுந்துமுன்னி. (௰௯)

வலங்கொளீஇச் சூழ்ந்துபோற்றி மன்னவ னிற்கவாங்கு
நலங்கொள்கா ளீசன்முன்போ னவிரறு மறையோனாகி
யலங்கொள விருத்தனாக்கி யானந்தக் கண்ணீர்மல்க
நிலங்கொளத் தாழ்ந்தெழுந்து நின்றுமெய் சிலிர்த்துக்கூறும். (௨௰)

எங்கணா யககாளீச விலங்குமா லயன்றாழ்நின்றாட்
பங்கயத் திடையறாத பத்திதந் தருள்கவென்ன
வங்கது தந்தோமற்று மன்பினிற் குடைந்தநம்பேர்க்
கங்கைநீ ராடுவோர்க்குங் கருதிய வனைத்துமீவோம். (௨௧)

என்றுருக் குமலிங்கத்து ளியைந்தனன் மறைந்தானாக
வன்றுதொட் டிடைவிடாம லவனடிக் கன்புபூண்டு
தன்றிரு நகரம்புக்குத் தனியர சுரிமையேற்று
மன்றவுண் மகிழ்ச்சிபூப்ப வழுதிவீற் றிருந்தான்மன்னோ. (௨௨)

ஆதலிற் கங்கையொக்கு மரியவிச் சிவகங்கைப்பேர்
மேதகு தீர்த்தமிந்த வியன்றடக் குணபாலுண்டு
தீதறு மகத்தியன்செய் தீர்த்தமங் கதனின்மூழ்கிற்
பாதக மகன்றுமுத்தி பாலிக்கு மின்னுங்கேட்டி. (௨௩)

உயர்சிவ கங்கைத்தென்பா லுமையினா லாக்கப்பட்ட
மயர்வறு தீர்த்தமொன்று மற்றதின் மூழ்குதற்கங்
கயர்வற முற்பிறப்பி லாக்கிய தவமுண்டாகி
னயமுற வன்புதோன்று நாணிலத் துற்றுளோர்க்கே. (௨௪)

நிகரிலச் சிவகங்கைக்கு நிருதிதிக் கதனிலுள்ள
புகரறு காளிதீர்த்தம் பொருந்திய வின்னல்போக்கும்
பகருமத் தடத்தின்றென்பாற் பாரதி தீர்த்தமாடி
லகமகிழ் கல்விமுன்னா மனைத்துமங் களிக்குமன்றே. (௨௫)

அன்னதன் கீழ்பாலுள்ள தயன்றட மதனின்மூழ்கின்
மன்னிய பிரமஞானம் வாழ்நாளு மிகவுண்டாகும்
பன்னிய சிவகங்கைக்குப் பச்சிமம் விண்டுதீர்த்தம்
பொன்னணி மார்பனன்று புரிந்தது புனிதமாகும். (௨௬)

மற்றதின் மாயன்மூழ்கி மகிழ்ந்துகா ளீசன்சென்னி
யுற்றிட வாட்டிப்பூசை யுஞற்றியிந் திரையையுற்றான்
றெற்றென மூழ்குவோர்க்குச் செல்வமிக் கெனவேநல்குந்
துற்றது காளீசன்றன் வாமத்தோர் தூயதீர்த்தம். (௨௭)

அன்னவன் றனைப்பூசிப்பா னுக்கினள் கவுரியென்பாண்
மன்னுமத் தீர்த்தமூழ்கின் மனத்தினி னினைத்தவெல்லாந்
துன்னுறு மதன்குணக்குச் சூழ்ந்துள தீர்த்தமுன்பு
பொன்னவ ளாக்கியன்பிற் பூசித்தாள் புனிதன்றன்னை. (௨௮)

இத்தகு தீர்த்தமேன்மை யெடுத்துரைப் பரிதென்னுனற்
பத்தியி னவற்றின்மூழ்கும் பண்பினர் பரிசிப்போர்க
ணித்தியங் காண்போர்தாங்க ணினைத்தவை யாவும்பெற்று
முத்தியும் பெறுவார்பின்ன ரென்றனன் முனிவர்கோமான். (௨௯)

தேவதாசப்படல முற்றிற்று.

ஆக செய்யுள் ௬௬௬.

---

# இலக்குமிசாபந்தீர்ந்தபடலம்.

நன்னர் மேன்மை நனிபெறு மெய்த்தவ
மன்னன் றேவதா சன்சீர் வழுத்தினம்
பொன்ன வட்குறு சாபம் புலர்ந்திடு
மன்ன காதையு மன்பின் வகுக்குதும். (௧)

கலம்புரிகையினர் கவினின்மேனியர்
பொலம்புரிநூலணி புனைந்தமார்பினர்
வலம்புரிசடையினர் மறிமென்றோலினர்
நிலம்புரிதவத்தினர் நெறிதவாதவர். (௨)

வாமனவடிவினர் வளர்ந்தமெய்யினர்
காமமும்வெகுளியுங் கடந்தசிந்தையர்
தோமறுசாத்திரந் தொகுபுராணங்கண்
மாமறைமுழுதுணர் மறுவில்காட்சியர். (௩)

சாலுமித்தகையினிற் சரதம்வாழ்குநர்
வாலகில்லியரெனும் மாதவத்தர்க
ளேனுமோர்மகங்குறித் தெழுந்துதெண்டிரை
ஞாலமுண்டவனகர் நண்ணினாரரோ. (௪)

நெடியவனிருக்கையை நெருங்குபோழ்தலர்க்
குடியவளாமிலக் குமிகுரூபமாம்
வடிவுடையவர்தமை மனத்திகழ்ந்தன
ரடிதுடித்தஞ்சுறுஞ் சுளிவுகொண்டனர். (௫)

ஏர்தருவடிவினீ யெம்மையிவ்வழி
நேர்தரவிகழ்ந்ததா னீயும்போய்நெடும்
பார்தருமகளிர்தம் பண்பினுகுகென்
றூர்தருசாபமிட் டனரருந்தவர். (௬)

மறைமுனிவரர்வசை வந்துசூழ்தலுங்
கறையுறுமாமகள் கவலலுற்றிட
முறையுணர்மாயவன் முழுதுந்தேர்தவத்
துறையுறுமந்தணர் சொன்மறுப்பதோ. (௭)

மாதவரவர்களென் மனத்தினுந்தொழு
மேதகுமெய்த்தவ விழுமம்முற்றவ
ராதலின்மற்றிதற் கறைவன்சூழ்ச்சியொன்
றேதெனக்கேட்டியென் றிசைக்கலுற்றனன். (௮)

தெண்டிரையுலகினிற் சீர்த்திமிக்கது
மண்டியவளந்திகழ் வழுதிநாட்டதங்
கண்டருந்தொழத்தகு மமலமாயது
தொண்டர்கட்கினியது சோதிமாவனம். (௯)

அத்தலமடைந்துநல் லன்பொடுங்குழீஇ
யித்தலம்பரவுகா ளீசன்றாளிணை
நித்தலுந்தொழுதிடி னெடியசாபமு
மெத்திறவினைகளு மிரிதலுண்மையே. (௰)

அன்றவண்வருவல்யா னடைகவின்னினி
யென்றனன்கேட்டன ளினிதுவந்தனண்
மன்றலங்கமலையு மானிடப்பெணாய்த்
துன்றினளெய்தினள் சோதிமாவனம். (௰௧)

கண்ணியதலத்தினிற் கவுரிதீர்த்தத்தி
னண்ணியகிட்டிசை நாட்டினளொரு
புண்ணியதீர்த்தமப் புனலினும்புக
ழண்ணியசிவகங்கை யதினுமூழ்கியே. (௰௨)

புந்தியுளன்பொடு பூசைசெய்தன
னெந்தைகாளீசனை யிறைஞ்சியேத்தினன்
சந்ததம்பன்னிரு சமைகழிந்தபின்
வந்ததோர்சுக்கிர வாரந்தன்னிலே. (மகூ)

அளவறுபேரரு ளண்ணலானனத்
திளநகைகாட்டிமுன் னெழுந்துநீடுரி
வளமுறுதவமுநம் மாட்டுவைத்தநின்
னுளமுறுமன்புமிக் குவந்துகொண்டனம். (மச)

ஓங்கியமாதவத் துயர்குலத்தவர்
நீங்கருஞ்சாபமு நீங்கினின்னுருப்
பாங்கமர்முன்னினும் பதின்மடங்குறீஇ
யாங்கெழினெடியவ னாகமன்னுக. (மரு)

கலக்கமிலன்பினீ கண்டதீர்த்தமு
மிலக்குமிதீர்த்தமென் றிலங்கவங்கதி
னலத்தொடேழ்குனர் நமதுகங்கைநற்
சலத்தினின்மூழ்குனர் தன்மையெய்துக. (மசா)

எனப்புகன்றக்கண மிலிங்கத்துற்றனன்
வனப்புறுகமலையு மனத்துளின்புறீஇத்
தனக்குறுவரங்களுந் தரப்பெற்றத்தலத்
தனப்பெடையரசென வமர்ந்திருந்தனள். (மஎ)

ஆயிடையெய்திய வருந்தவத்தவர்
வாயிடைமறையுடை வாலகில்லிய
ரேயுறுசத்திர யாகமுற்றவு
மாயவனவரறு மதிபெற்றனரோ. (மஅ)

பெற்றபினவ்வுழிப் பெயர்ந்துமென்மலர்ப்
பொற்றடக்காளிமா புரத்தைநண்ணினன்
நற்றவர்சிவகங்கை நளிர்புனற்குடைந்
துற்றகாளீசனை யுவந்துபூசித்தே. (மகூ)

மஞ்செனநின்றெதிர் வடசொலான்மகிழ்
பஞ்சரத்தினமுனிப் பாடியாடலு
மெஞ்சலில்லாதகா ளீசனின்னருள்
விஞ்சமுன்னின்றிவை விளம்பலுற்றனன். (உம)

மாயவவன் றூறு வாலகில்லியர்
தீயவன்சாபமுந் தீர்ந்திலக்குமி
யாயமுன்னினுமுரு வமர்ந்திருந்தன
ளீயவடன்னொடு நேயமாகியே. (உ௧)

இதமுறவிங்கிருந் தென்னையேத்துக
பதமுறுகின் றுதி பண்பிற்கொண்டன
னிதமதுசொற்றிடி னோர்ந்தென்மனுப்பல
சதமுரைத்திடுபயன் றருமென்றோதினன். (உ௨)

பெறும்பரிசிவ்வரம் பெட்பினல்கியே
யுறுந்திருவருட்குறி யொளித்தனன்றின
நிறந்திருவமரயா னெடியவத்தனிப்
புறந்திசைநிருதியிற் புக்கிலாக்கியே. (உ௩)

மற்றதிற்சுகந்தவ னேசனென்றபேர்
பொற்றிருந்தளிவளர் பிஞ்ஞகன்றனை
நற்றினந்தொறுந்தொழு நன்மைபூண்டன
னுற்றவையிவையினு முரைப்பக்கேட்டியால். (உ௪)

முன்னொருகாலத்தின் முகுந்தன்வன்பகை
துன்னுமோரவுணனைத் தொலைக்கவேவிய
பன்னருந்திகிரியப் படிசெயாமையாற்
சொன்னவன்சாபத்தாற் சுடரொழிந்ததால். (உ௫)

அன்னதுநீங்குநற் கவனுரைப்படி
மன்னுறுசோதிமா வனத்திலெய்திநற்
பன்னொளியிழந்தவப் பருதியன்பொடு
தன்னதுபெயரினுற் றடமொன்றாக்கிற்றால். (உ௬)

அங்கதன்புனலினு மரியதோர்சிவ
கங்கைதன்னினுமனங் கனிந்துமூழ்கியின்
றெங்கடமிறைவன்கா ளீசன்றாண்மலர்ப்
பங்கயந்தொழுதுசா பமுந்தொலைத்ததே. (உ௭)

கதிரொளியாயிரங் காலவாயிடைச்
சுதரிசனப்பெயர் தோன்றவுள்ளது
நிதிபெறுசக்கர தீர்த்தமூழ்குனர்
றுதிபெறவொழிவறு தூய்மைநண்ணுவார். (உ௮)

கண்டகாளீசனைக் கருதிப்பூசிப்பா
னெண்டிசைப்பாலரு மிசைந்துதம்பெயர்
கொண்டதீர்த்தங்களுங் குலவச்செய்தனர்
விண்டதன்பெருமையும் விளம்புவாமரோ. (உக)

இந்திரதீர்த்தமங் கியைந்துமூழ்குனர்க்
கெந்தநற்போகமு மினிதினீந்திடுஞ்
செந்தழற்றீம்புன றேசுநல்குமவ்
வந்தகன்றடநிறை யாயுளீயுமால். (௩௰)

நிருதியின்பூம்புனல் நீக்குமச்சமவ்
வருணவான்றடமது வாட்டும்வன்பிணி
மருவுறுகாற்புனல் வழங்குமாண்மையைப்
புருடவாகனன்றடம் பொருளளிக்குமே. (௩க)

ஏற்றவீசானிய னினியதீம்புனன்
மாற்றருஞ்செல்வமு மகவுமாயுளுந்
தேற்றமுமளித்திடுஞ் சிதைக்குநோய்பகை
மேற்றருசிவகதி வீடுநல்குமால். (௩௨)

போற்றுறுபற்பல புனிததீர்த்தங்க
ளாற்றவுமகிமையுள் ளனவவற்றினைச்
சாற்றுதற்கநந்தனுந் தகுதியல்லனேல்
வேற்றுரையென்னினி விளம்புமாறரோ. (௩௩)

இலக்குமிசாபந்தீர்ந்தபடல முற்றிற்று.

ஆ செய்யுள் சுககக.

# உருத்திரசாபந்தீர்ந்தபடலம்.

மாதவன்றிரு மார்புறைபிந்திரை
தீதடைந்தமை தீர்ந்தமைசெப்பினு
மாதிபாலுறை யம்மைசாபத்தினை
யேதுருத்திர ரோவியதோதுவாம். (க)

வேறு.

மதிமலர் கொன்றைவேய்ந்து வளர்சடா முடியரோங்குந்
துதிமலர் நீலகண்டர் சுடர்மழு மானோடேந்தும்
விதிமலர் தலைக்கையார்தீ விழியினர் புயங்கமாலை
கதிமலர் பூதியோடு கண்மணி விளங்குமெய்யர். (௨)

ஆயிரங் கோடியான வுருத்திர ரனைத்துந்தீயக்
காயிருந் திறலினோர்சங் காரருத் திரர்முன்னானோர்
பாயிரு ளகற்றியெங்கும் படரொளிக் கயிலைக்குன்றத்
தாயினு மினியபெம்மான் சந்நிதி யடைந்தாரன்றே. (௩)

அந்தரு கயிலைக்குன்றத் தணிதிக ழொருசாருள்ள
தொத்தலர் காமுய்யானந் துன்னியோர் தருவினீழற்
சுத்தமெய்ஞ் ஞானனந்தச் சுடரொளி நுதற்கண்வேத
வித்தகன் றன்னைக்கண்டார் விரைமல ரடியில்வீழ்ந்தார். (௪)

விழுந்தனர் பணிந்துபோற்றி மெய்சிலிர்ப் புறநின்றாங்குத்
தொழுந்தொறு முவகைபூப்பத் துலங்கிய கருணைபூத்த
செழுங்கடைக் கண்களோக்கிச் சிறிதுபுன் னகைசெய்தந்நா
ளெழுந்தனி யாலமுண்டோ னிருந்தன னிருக்குங்காலை. (௫)

அம்பிகை யனைத்துமீன்ற வெங்கனை மார்களோடு
வம்பவிழ் மலர்ப்பூஞ்சோலை மருவிமல் லிகைசப்பங்கி
பம்புரன் பகமுன்னாய பரிமளப் பூக்கள்கொய்து
கொம்பரி னொல்கிப்போந்தா ளுருத்திர குழாத்தைக்கண்டாள். (௬)

உருத்திர கணங்களோடு மொருத்தனெம் பெருமான்றன்னைப்
பிரிந்துசிவ றறியாள்சற்றுப் பேதுறீஇ யுடன்றெளிந்து
நிருத்தனு நிமலன்றன்னை நெருங்கின னின்றுளாங்குத்
தருக்குறு கணங்கடன்னைத் தாழ்ந்திலாத் தன்மையோர்ந்தாள். (௭)

தலையினிற் கலையுநெற்றித் தழல்விழி யதுவுமங்கைக்
கலையொடு மழுவும்பூதி கண்டிகை யணியுமார்பி
லலைவுறு பணியுங்கண்டத் தாலமும் பரித்தோனாமுஞ்
சிலைவிலெம் பெருமானெப்போ மென்றவர் செருக்கினின்றார். (௮)

என்றுசூழ்ந்தரிய கோபத் தெம்மனை யெதிரினின்று
துன்றுருத் திரகுழாத்தைத் துனிவினோக் குற்றுநீவிர்
மன்றவுட் கருவங்கொண்டு மதித்திலீ ராதலாலே
யின்றுதொட் டயிரையாவி ரெனச்சபித் திட்டாண்மன்னோ. (௯)

இட்டவக் கொடியசாப மேற்றுள நடுங்கியம்மை
மட்டவிழ் புண்டரீக மலரடி வீழ்ந்தியாங்கள்
கெட்டன மந்தோவென்றுங் கிளர்பெருங் கருணையன்னா
யுட்டிக ழறிவிலேஞ்செய் யுறுபிழை பொறுத்தியென்றார். (௰)

தாங்கருந் துன்பத்தாழ்ந்து துதிப்பவர் தம்மைநோக்கி
யாங்குள மிரங்கியெங்க ளருள்வடி வானாளீது
நீங்குதற் குபாயமொன்று நிகழ்த்துவ னுவந்துகேண்மின்
வாங்குதெண் டிரைநீர்வைப்பில் வளங்கெழு பாண்டிநாட்டில். (௰க)

தத்தலைக் கடற்குமேல்பாற் றளிப்புத்தூ ரதற்குத்தென்பா
லுத்தர கோசமங்கைக் குற்றிடு வடபாற்செய்ய
முத்தமிழ்க் கூடற்கீழ்பான் மொழிந்தநாற் றிசையுண்மேய
புத்தொளி நிரம்புகாளி புரமென வொன்றுண்டாமால். (௰உ)

அன்னகேத் திரத்திலென்று மமர்ந்துறை யருட்காளீசன்
றன்னுமேசா மேசனென்னத் தலங்கிரண் டிலிங்கமுண்டான்
மன்னிய வாங்குநீவிர் மருவினிச் சாபநீங்கு
மென்னனு மயிரையாகி யிருங்கட லுறைந்தாரன்னார். (௰ங)

ஆயிடை யயிரையாய மயிலையை யளிப்பானெங்க
டாயனை யானுங்காளீ சன்சொன்ன வல்லியோடு
மேயகீழ்க் கடற்றிண்கூலம் வில்லவ னேசனென்னப்
போயொரு விலிங்கமாகிப் பொலிந்தவ னிருந்தானன்றே. (௰ச)

இங்கிவை நிற்கமுன்னே ரிட்டசா பந்தாற்றீமை
தங்குதுன் மதனெனும்பேர்த் தானவற் கிருவர்மைந்தர்
பொங்குதிண் சாரன்கோர னெனும்பெயர் புனைந்தோர்விண்ணிற்
புங்கவர் முனிவர்தம்மைப் பொருறுதுன் புறுத்தாரன்றே. (௰ரு)

பாகசா தனனன்னோரைப் பதைத்திடக் கொல்வானெண்ணி
யேகிவச் சிரங்கைக்கொண்டாங் கெதிர்த்தன னவரச்சுற்றுச்
சாகரத் தொளித்துமீனாய்ச் சரித்துழக் கிடவிரத்தி
நாகர னெதிர்த்துப்பன்னா ளருஞ்சமர் புரிந்திளைத்தான். (௰சு)

பின்னரும் பல்லநாளப் பெருங்கடற் சிறுமீனுண்டு
துன்னிய வயிரைதம்மைத் துய்க்கவுந் தலைப்பட்டார்க
ளன்னதை நோக்கியம்மை யருளினா லேசொற்றாங்குச்
சொன்னவில் லுவவனேசன் சூலத்தாற் குத்தமாண்டார். (௰எ)

தானவர் மாண்டபின்னர்ச் சாகரத் தலைவனோடு
மீனமா னவையுமச்சம் விலகியின் புற்றிருந்த
வானகா லையிலவ்வாரி யதிலொரு பரவன்வீசு
மானவல் வலையுட்பட்டு மரித்தன வயிரையெல்லாம். (யஅ)

பற்றிய வவற்றையெல்லாம் பரவனங் கீர்த்துவாங்கி
வற்றல்க ளாக்கிவைத்து வாங்குவோர்ப் பார்த்திருந்தா
னற்றவச் சைவபத்தி நாடினோன் கூடனுள்ளோ
னுற்றவா ணிபமேற்கொண்டோ னொரர விந்தனென்பான். (யகூ)

பற்பல வணிகரோடு படர்ந்தான்கீழ்க் கடலின்பாங்கர்
முற்படு மவர்களல்ல முத்துக்கண் மணிகள்கொள்ளப்
பிற்படு மரவிந்தன்றான் பேணுறு திரவியங்கள்
சொற்பமா மதனாலாங்குச் சூழ்ந்தனன் பரவர்வீதி. (உய)

கண்டன னயிரையெல்லாங் கணக்குடன் விலைகொடுத்துங்
கொண்டனன் கொண்டவெல்லாங் கொடுத்ததற் கதிகமென்ன
வெண்டரு முவகைபூத்தா னிசைதர வவற்றைமூட்டை
துண்டுதுண் டாகக்கட்டித் தூர்வகத் தேற்றினானால். (உக)

கூடலை நோக்கிப்போவான் கூடவந் தவர்கடம்மை
நாடினன் சேய்மையாக நடக்கமாட் டாமையாற்றன்
வாடிய வெருத்திரேனாடு வழியிடைக் கானிற்பிற்பட்
டூடுற வருத்தமுற்று றுறுதுணை யின்மையாலே. (உஉ)

வெங்கதிர் தானுமேலை வேலையுட் புகுந்தானாக
விங்கர விந்தன்செய்ய வெழின்முகஞ் சாம்பியிந்தப்
பொங்குவெங் கானநீங்கிப் போவதெவ் வணமென்றஞ்சி
யங்குமெல் லெனநடந்திட் டருங்காளி புரமடைந்தான். (உங)

தன்றுணை யங்குங்காணான் றளர்ந்திருண் மிக்கதிந்தத்
துன்றுவெங் கானந்துட்ட விலங்கினஞ் சூழ்ந்ததிவ்வூ
ரின்றிருந் திருள்புலர்ந்து விடியலி லேகுவன்றென்
றொன்றுமீன் சுமையிறக்கி யொருங்குவைத் துறங்கினானால். (உச)

அவனரு னோதயம்பார்த் தருட்கட லாயபெம்மான்
றவவடி வோடிந்தாங்கு சடைமுடி புனைந்துகாலிற்
றிவவொளி விரிக்குந்தப் பாதுகை செறித்துக்கையிற்
சுவணவான் பிரம்பொன்றேந்திந் தோன்றினன் றுணைவின்மன்றோ. ()

அங்கையிற் பிரம்புநீட்டி யதனுனி யான்மீன்மூட்டை
தங்குகட் டவிழ்த்துக்கூப்பித் தன்சடைக் கங்கைவார்த்தான்
வெங்கதி ரிற்காய்ந்தாவி வீய்ந்தபன் மீன்களெல்லாம்
பொங்குருத் திரர்களாகிப் பொலிந்தனர் சாபநீங்கி. (உ௬)

புனிற்றிளந் திங்கள்வேய்ந்த புரிசடைமுக்கணீலத்
தனிக்கள மழுமானங்கை தரித்திடு பூதிகண்டி
வனப்புறு மெய்யராகி வழங்குறு வளங்களாய
வனைத்தொடும் விளங்கிநின்றா ராயிரங் கோடியானோர். (உ௭)

பற்றிய சாபநீங்கிப் பார்த்தனர் நான்குதிக்குஞ்
சுற்றியிவ் வனமேயம்மை சொற்றசோ திவனமென்றங்
குற்றன ரிரவிபோல வொளிர்சிவக் குறியுங்காணப்
பெற்றனர் காணவெம்மான் பேரெழில் வடிவுகொண்டான். (உ௮)

கலைமதி யிலங்குவேணிக் கங்கையுஞ் செங்கையேந்து
சிலைமறி மழுவுமூன்று செழுங்கணும் விழுங்குநீல
நிலைமணி கண்டமோடு நிறையருள் வடிவுநோக்கி
மலைமகள் கொழுனன்பாத மலர்முடி புனைந்துதாழ்ந்தார். (உ௯)

காரணங் கடந்துநின்ற கண்ணுதல் போற்றியெங்க
ளாரண மிசைநின்றாடு மையனே போற்றிபோற்றி
நாரண னயன்முன்னோர் நாடுதற் கரியாய்போற்றி
பூரண வருட்காளீச புராதன போற்றிபோற்றி. (௩0)

என்றிவை துதித்திட்டெந்தா யினிதுநின் னருளினாலே
யொன்றிய சாபநீங்கி யுய்ந்தன முறுமஞ்ஞானத்
துன்றிரு ளொழியநின்றன் சொரூபஞா னமுந்தெரித்தி
யென்றனர் காளீசன்று னிளநகை தோன்றநின்று. (௩க)

பூதங்க ளனைத்துமாகிப் பொறிபுலன் களுந்தானாகிப்
பேதங்க ளாயபேத பேதாபே தங்களாகிப்
போதங்க ளெல்லாமாகிப் பூரண மாகிப்போற்றும்
வேதங்க ளாகிநின்றான் விச்சுவ வுருவினின்றான். (௩உ)

ஆக்கிய சராசரங்க ளனைத்துமவ் வுருவந்தன்னி
னோக்கிய தமையுங்கண்டு நடுங்கியுள் ளச்சமுற்றுக்
காக்கவென் றடியில்வீழ்ந்து கண்டவிவ் வுருவந்தன்னை
நீக்குக போற்றியென்றார் நின்றுருத் திரகணங்கள். (௩௩)

ஐயனு முறுவலித்தாங் கமைதர வழகுவாய்ந்த
மெய்யொடு முன்போலுற்று வேண்டியிவ் வடிவந்தன்னை
யையமதகலக்கண்டவ ராதலி னீவிரோகன்
மெய்யுணர் வின்பமேய வியப்புறு பேறுபெற்றீர். (௩௪)

இனியுமதுலகமுற்றுங் கிருந்துவாழ்ந் திடுகவென்றான்
கனிவொடு காளீசன்றன் கட்டுரை கேட்டானந்தப்
புனிதவெள் ளத்துண்மூழ்கி யுருத்திரர் போயினார்பின்
றனிமுதல் காளீசன்ற னிலிங்கத்துட் சார்ந்தான்மன்னோ. (௩௫)

இங்ஙனே யிவ்வாறாக வேற்றமீன் மூட்டையெல்லா
முங்குருத் திரர்களாய வுதனையோர்ந் துவந்துமீனு
மெங்கையிற் பொருளும்போன விவ்வெறுஞ் சஞ்சிகொண்டே
யங்கினிச் செல்வேனென்றா னரவிந்த னகந்தளர்ந்தே. (௩௬)

கேட்டனன் சித்தனுக்கிள் ளரருட் காளீசன்றான்
மொட்டமுற் றுளம்வருந்தல் வன்சிறு கற்கள்யாவு
மீட்டிப்பின் சும்மையாக்கி யெருத்திடை யேற்றிக்கொண்டு
வீட்டினி லவிழ்த்துக்காண்பாய் வியப்புறு பொன்னுமென்றான். (௩௭)

என்னவே மறைந்தானீச னிசைத்தருண் மொழியைநம்பி
யந்நிலை நிகழ்ந்தசெய்தி யறிந்தவ னுதலாலே
வன்னிலைச் சிறியநற்க ளனைத்தையும் வாரிச்சஞ்சி
தன்னிலிட் டிறுக்கிக்கட்டித் தகவெருதேற்றிச்சென்றான். (௩௮)

கூடலிற் சார்ந்துதன்னிற் குறுகியச் சுமையவிழ்க்கத்
தேடருஞ் செம்பொற் கட்டித் திரள்களா யிருக்கக்கண்டா
னுடைய சித்தசாமி யருள்வினை யாட்டையுன்னி
யீடறு மரவிந்தன் மே லின்பவெள் ளத்துளாழ்ந்தான். (௩௯)

வனத்திடைச் சித்தசாமி வந்தது நிகழ்ந்தவாறுந்
தனக்குறு செல்வமுற்ற தன்மையுங் கூடற்கோமான்
பனைப்பரும் வீரசேன பாண்டியன் றன்பாற்கூறித்
தனிப்பெரு முவகையோடு சைவநன் னெறிமேற்கொண்டான். (௪௦)

அத்தகு பொருளையெல்லா மரனிடத் தன்புபூண்டு
சத்திய மாயபூதி சாதன நெறிமேற்கொண்டோர்
தத்தம துளம்பூரிக்கத் தருமதா னங்களாற்றிப்
பத்தியின் வழாதுவாழ்ந்தான் பரமனைப் பணிந்துமன்னோ. (௪௧)

உருத்திரகாபந்தீர்ந்தபடல முற்றிற்று.

ஆ செய்யுள் ௭௪௰.

# வீரசேனபாண்டியப்படலம்.

மாரவேளுரு மாய்த்தாருருத்திரர்
சாருசாபந் தவிர்த்தமைசாற்றினு
போருளார்வலி போர்க்கும்புயத்தினன்
வீரசேனன் வியன்கதைகூறுதும். (க)

வேறு.

ஈண்டிய வுலகமெல்லா மீன்றவங் கயற்கணம்மை
யாண்டரசியற்றுங்கூட லணிதிகழ் நகரந்தன்னிற்
றாண்டிய சைவபத்தித் துறைபுணின் றவனிகாக்கும்
பாண்டியன் வீரசேனன் பரிந்தரசியற்றுநாளில். (உ)

அன்னவன் றனக்குத்தார மாயிர மடவார்யார்க்கு
மன்னிய மகவொன்றில்லா வருத்தமிக் குழன்றுநாளுட்
சொன்னவா கழுவாய்பல்ல சூழ்ந்துசெய் தன்னதானங்
கன்னிகா தானமுன்னாக் கருதிய பலவுஞ்செய்தான். (௩)

சுந்தியிற் றினமுஞ்சோம சுந்தரக் கடவுடன்னைச்
சத்தியங் கயற்கணம்மை தன்னையுந் தாழ்ந்துபோற்றி
நித்திய மகவொன்றில்லா நெடுந்துயர்க் கடலுளாழ்ந்தே
யுத்திபுட் பலவுஞ்சூழ்வா னுறுதிறல் வீரசேனன். (௪)

தானமுந் தவமுஞ்செய்துந் தருமங்கள் பலவுஞ்செய்து
மானமின் னனையாரில்லா ராயிர ரிருந்துநம்பா
லீனமின் மகவொன்றில்லாத் தன்மையீ தென்னேயென்று
மானமெய்த் தவத்தோர்க்கண்டு வரம்பெற மனத்துட்கொண்டான். (ரு)

நனியுறு மதுரைப்பாங்கர் நலந்திகழ் தென்மேற்குற்ற
பனியுறு சோலைசூழும் பசுமலைச் சாரல்வைகு
முனியுறு தவத்தோன்காலக் கியனெனு முனிவன்றன்னைத்
தனியுறு சோபனுங்கி தன்னொடுஞ் சென்றுகண்டான். (௬)

அவ்வுழி முனிவர்கோனை யஞ்சலித் தங்கைகூப்பிச்
செவ்விய மறையோர்தம்பாற் றேவர்பாற் றருமம்பல்ல
வொவ்விய வாறுசெய்து முறுமக வின்மையாலே
திவ்விய தவத்தோய்நின்பாற் சேர்ந்தனன் வினையான்மிக்கேன். (௭)

காலமுன் றுணர்ந்தோரென்று கட்டுரைத் தனர்நின்கீர்த்தி
சாலநன் றதுகேட்டுன்பாற் சார்ந்தன னாதலாலென்
பாலொரு மகவுதோன்றாப் பழவினை யாதுகொல்லோ
சீலவின் றதனையோர்ந்து செப்புதல் வேண்டுமென்றான். (௮)

மனந்தளர்ந் தரசன்கூற மாமுனி கேட்டுச்சற்றே
நினைந்துறு நிட்டையுற்று நேர்ந்தவை யுணர்ந்துகூறுங்
கனந்திகழ் மன்னநீயோர் காலத்தில் வேட்டைமுன்னி
வனந்தனைப் படைகளோடு வளைந்தனை யன்னகாலை. (௯)

சேனையிற் றொடர்ந்துபோந்த சினமிகு சுணங்கனொன்றக்
கானகத் தோர்சாருற்ற கபிலமா முனிவன்காலி
னூனமுற் றிடக்கடித்த தோர்ந்தன னுணர்வுகொண்டவ்
வினைமுற் றதனைநாடி யிருஞ்சின முற்றுத் தூயோன். (௰)

துரிசற விருந்தவென்பாற் றுன்புறப் புரிந்தகுக்கற்
குரியவன் யாவனந்த வொருவனு யிரமில்லாரை
மருவினு மகப்பேறின்றி வருந்துக வென்றானந்தப்
பொருமறை மொழியினாலே போந்ததித் துயரமென்றான். (௰௧)

மன்னனம் மொழிகேட்டுள்ளம் வருந்தியான் மகப்பெற்றின்ப
நன்னலம் பெருமாறெங்ங னவிலுதி யென்னச்சான்றோன்
றுன்னிய மகவில்லார்க்குச் சுவர்க்காதி பதமின்றென்ப
வுன்னிய தொன்றுறாதே லோர்பரி காரமுண்டாம். (௰௨)

அன்னது கேட்டிநீயிங் காடகப் பசும்பொற்கொண்டு
மன்னுநூல் புகன்றவாறோர் மகப்புரிந் ததனையன்பின்
முன்னுவந் தென்றுநோக்கின் முளைநகை தீர்ந்தானந்தந்
துன்னலா மென்றானந்தத் தூய்த்தவன் மொழிமேற்கொண்டான். (௰௩)

மனைவியுந் தானுங்கூடல் வளநக ரெய்திச்சிற்ப
ரனைவருட் டேர்ந்தோற்கூவி யாசையி னைசைநல்கி
வினைகெழு மனையன்றன்னால் வியப்பவார்ப் பித்துத்தந்த
தனையனைக் கைவிடாது தன்னுயி ரெனநோக்குற்றான். (௰௪)

உடனுயிர் போலநீங்கா துடனுறு மகக்கண்டின்பக்
கடலிடை மூழ்கிவேந்தன் களிப்புறீஇ யிருக்குங்காலை
யிடமுள வந்நகர்க்க ணிருந்துறு செல்வம்பெற்ற
மடனிகு மரவிந்தப்பேர் வாணியன் வந்துகண்டான். (௰௫)

கானற்கீழ் கடற்பால்வாணி கங்கரு தித்தான்சென்றம்
மீனத்தின் சுமடுகொண்டு மீண்டது மிக்கிருட்கட்
கானப்பே ரூரில்வந்து கண்டபின் றதுவுமந்தத்
தானக்கா ளீசன்சித்த சாமியாய் வந்தவாறும். (௰௬)

உற்றபன் மீன்களெல்லா முருத்திர கணங்களாகக்
கற்பிர ளனைத்துந்தங்கக் கட்டிக ளாகக்கண்ட
மற்றவன் பெருமையெல்லாம் வகுத்தர சிந்தன்கூறப்
பற்றிய வுள்ளந்தாங்காப் பருமித முற்றான்வேந்தன். (௰௭)

காய்ந்தமீன் கணங்களாகக் கற்பிர டங்கமாக
வாய்ந்திடப் புரிந்தவள்ளல் மனத்தினி னினைக்கிலென்கை
வேய்ந்தபொற் பாவையும்புத் திரனென விளங்குமின்றென்
றாய்ந்தவன் சொன்னவாறே யவ்வழிச் சேறலுற்றான். (௰௮)

தன்னுயிர்ச் சோபனுங்கி தன்னொடு தானுந்தன்கை
மன்னுபொன் மகவினோடு வயங்குசில் பரிவாரத்தோ
டன்னநன் மதுரைநீங்கி யவிர்சோதி வனமந்துற்று
மன்னவன் வீரசேன மாறனுண் மகிழ்ச்சிபூத்தான். (௰௯)

வேறு.

உலர்ந்தமீன்களை யுருத்திரகணங்களாக் குதலாற்
சிலம்புதெண்டிரை யுருத்திரதீர்த்தமாஞ் சிவன்ற
னலர்ந்தவேணியிற் கங்கையினுக்கலா லென்றுந்
தலந்திகழ்ந்திடு சிவகங்கையெனும்பெயர்த் தடமே. (௨௰)

ஆடினும்பரி சிக்கினுநினையினு மன்பி
னாடினுங்கொடும் பாவங்கணசித்திடப் புரியுந்
தேடியங்கதின் மூழ்குறுசிந்தைய ராகி
யோடிமூன்றடி வைக்கினுமொழித்திடும் வினையை. (௨௧)

அத்தடத்தினைக் கண்டனனுவமுற் றடைந்தான்
பத்தியுற்றதில் விதிப்படிபடிந்தனன் பின்பு
கைத்தலத்துறு கனகமென்பதுமையை யந்தச்
சுத்தநீரினி லாட்டினனிருமுறை தொட்டு. (௨௨)

பற்றிமும்முறை யாட்டுமாடகப் பதுமை
கொற்றவாகரம் விடுகநீவிடுகெனக் கூற
வுற்றவாவொடு மிருமுதுகுரவரு முவந்தார்
பெற்றருளுவிற் பிரியமுற்றெடுத்தனன் செழியன். (௨௩)

கருதுநாற்பருவத்ததாய்க்கவினிய மகவை
யருமையுற்றத னுச்சிமோந்தணைத்தனன் மார்பிற்
றிருவுஞ்சிந்தையி னினைத்தவையாவையுஞ் சிறந்து
மருவநல்குமித் தடங்கர்வையகத் தில்லை. (௨௪)

எனவியந்துதன் சோபனுங்கியின்கர மீந்தான்
மனமுவந்துமார் பணைத்தனள்காதலான் மருவு
தனமிரண்டினும் பெருகுபாலூட்டினள் தழுவி
யெனதரும்பொரு ளேயெனவாழ்த்தியுண் மகிழ்ந்தாள். (௨௫)

அன்னதன்மைய தாகியமகவினுக் கருமைச்
சொன்னபுத்திர னென்றபிதானமுஞ் சூட்டி
யின்னமற்புத மிருக்கும்யாதேனுமென் றெண்ணு
மன்னனுய்ந்தன னச்சிவகங்கையின் மாட்டு. (௨௬)

பரிமளத்தமந் தாரமாம்பாதவங் கண்டா
னருகுநீர்த்தசும் பங்கையிற்கொண்டவண் போந்த
முருடனிவ்வுழி முனிவர்பூசித்திடு மிலிங்க
மருவிரண்டுள வென்றனன்கேட்டனன் மன்னன். (௨௭)

கானவன்கொடு காட்டியவவ்வயிற் கடவுண்
மானவன்குறி யிரண்டுடன்மருவவங் கோர்பால்
வானமின்மனோன் மணியொடுசுவணவல் லியையு
மீனவன்மனங் களிப்பொடுநோக்கினன் வியந்தான். (௨௮)

இகத்திலன்பருக் கறமுதலீபவ சரண
மகப்பெருந்துயர் மாற்றியவானவ சரண
மகத்தின்வாக்கினு னளவிடற்கரியவ சரணஞ்
சகத்தினைந்தொழிற் கிறைவகாளீச்சுர சரணம். (௨௯)

என்றுபோற்றனு மருட்கடலாயவெம் பெருமா
னின்றுவானச ரீரியாய்த்தோன்றிநின் றுதியை
நன்றுகொண்டன நாளுமித்துதிபுகல் வார்க்கு
மொன்றுமுள்ளமுற் றனவனைத்தருள்வமென் றுரைத்து. (௩௰)

பின்னுமித்தல முத்தமதலத்தினுட் பெரிது
மன்னுதக்கண கயிலையாமிங்கிதின் மகிழ்ந்து
துன்னுதூலமாய்ச் சூக்குமமாகியுந் துலங்கிப்
பன்னுமன்பர்தம் பணிபுளவாறுணர்ந் தருள்வோம். (௩௧)

ஆதலாலிவ ணரியதோராலயம் புரிகென்
றோதமன்னவ னவையெலா முள்ளுற நன்கு
காதிற்கேட்டலுங் களிப்பெனுங்கடலிடை மூழ்கி
மேதகும்பல சிற்பநூற்புலவரால் விரைவில். (௧௨)

கோடிசூரிய ருதித்தெனவிமானங்கள் சூலவு
பீடுலாமணி மண்டபம்பற்பல பெரிது
நாடுமாயிரக் காலுளமண்டப நாக
மூடுலாம்பல கோபுரஞ்செம்பொனா லுஞற்றி. (௧௩)

சுற்றுமாமதி லகழ்கிடங்கதன்புறந் துடவை
மற்றுநான்முறை வழாதுறு திருப்பணி யாவுந்
துற்றபன்மணிக் குவைகளாற்பசும்பொனாற் சூழ்ந்து
முற்றுறும்படி யாலயங்குறைவற முடித்து. (௧௪)

அடர்வனத்தினை யோசனைதூரமட் டழித்துப்
படரும்வீதிகள் பற்பலகுலத்தவர் தெருக்கள்
கடைகளுங்கழ கங்களோடன்னசத் திரங்க
ளடையநன்னக ராக்கினனண்டரும் வியப்ப. (௧௫)

ஆதிசைவர்க ளாகமபண்டித ரரிய
வேதவித்தகர் தங்களைமிகவர வழைப்பித்
தோதுமங்கவர்க் குரியனபொருண்முத லுதவிப்
போதுநித்திய பூசனைவழாதறப் புரிந்தான். (௧௬)

இன்னுமெங்கள்கா ளீசனோடரியசோ மேசன்
சொன்னவல்லிநற் சுந்தராம்பிகையிவர் தமக்கு
மன்னுமாவிடை மதியின்விசாகநா ளதினுந்
துன்னுதைமதிப் பூசநாடன்னிலும் தொடங்கி. (௧௭)

திருவிழாக்களை யியற்றிப்பின்னும்பல சிறப்பு
மொருவிலாதவ ணிகழ்தரப்புரிந்தன னுவந்து
பரிவொடுஞ்சிவ பத்திமேற்கொண்டனன் றிண்டோண்
மருவுதாரணி வீரசேனப்பெயர் மாறன். (௧௮)

தங்குசோமசுந் தரனையுங்கயற்கணி தனையு
மங்குநாடொறும் போய்த்தொழுவிரதமுற் றவன்போய்
மங்குன்மாரியி னனைந்துமெய்வருந்தியோர் பொழுதி
லெங்களையக போற்றியென்றடியில்வீழ்ந் தெழுந்தான். (௧௯)

அந்தயாமமுந் தொழுதனன் றுதித்தன னன்பான்
மந்தவேணியு மங்கசரீரியாய் மறைந்து
பத்தியானுயர் பஞ்சவகம்பத மறவா
நித்தியந்தொழு விரதத்தானிவனையொப்பா ரில்லை. (சய)

நீவருந்துறு தொன்றுநாகிகழ்த்துவ மிதுகேண்
மேவரும்பெருங் காளிமாபுரத்திடை வியக்கு
மாவருஞ்சொன்ன வல்லிகாளீச்சுர நாப்ப
ணுவருங்கயற் கண்ணியுநாமும்வந் துறைவோம். (சக)

இன்றுதொட்டுநீ யிங்குவந்தெய்த்துறு வருத்த
மொன்றுறுதவ னமைப்பணிந்திடுகவென் றுரைத்தா
னன்றுகேட்டுனந் தன்பிராவடியுமுன் னடந்து
துன்றுகாளிமா புரத்தினைக்கிடைத்தனன் றோன்றல். (சஉ)

ஆயிடைத்தனி விடைச்சுவடிருத்தலை நோக்கி
மேயவன்பொடு வியந்தனனங்குள மறையோர்க்
கேயசுந்தர னருள்விளையாட்டினை யெடுத்து
நேயமோடுமுன் னிகழ்த்தினன்களித்தனர் நினைந்து. (சந)

துன்னுதூயகா ளீசற்குஞ்சுவணவல் லிக்கு
மன்னுநாப்பணிற் சுந்தரலிங்கமும் வனப்பு
மின்னுமங்கயற் கண்ணியும்விளங்குறத் தாபித்
துன்னுமாலய முதற்பலவுஞற்றின னுவந்தான். (சச)

தினமும்பூசனை புரிதரப்புரிந்தனன் செய்து
மனமெய்வாக்குறு பத்தியின்வணங்கியுந் துதித்து
நனவினுங்கன வினுமறவாதுநம் பெருமான்
றனைநினைந்திருந் தனனுயர்தென்னவர் தலைவன். (சரு)

இன்னவாறவ னிருந்துபல்லாண்டர சாண்டு
சொன்னபுத்திரன் றனக்கரசுரிமையைச் சூட்டி
மின்னிலங்குகா ளீச்சுரன்விரிகரு ணையினாற்
றன்னிகர்த்துயர் கயிலைவான்பதத்தினைச் சார்ந்தான். (சசா)

வீரசேனபாண்டியப்படல முற்றிற்று.

ஆ. செய்யுள் எஅசு.

---

# வரகுணபாண்டியப்படலம்.

---

வருலாவுகா ளீசற்கடிமைசெய்
வீரசேனன் வியன்கதைகூறினு
மாரனன்ன வரகுணபாண்டியப்
பேரினான்றன் பெருங்கதைபேசுதும். (௧)

வேறு.

சொன்மலிந்தகா ளீசனாரடிமலர் தொழுவோன்
றன்மலிந்தவின் னுயிரெனமன்னுயிர்த் தாங்கி
மன்மலிந்தநூல் விதிமுறைவழாதர சளிப்போன்
வின்மலிந்தவேற் றிருந்தலர்க்கேறனை மிளிர்வோன். (௨)

ஆறிலொன்றுறு கடமைகொண்டன்பொடு குடிகண்
மாறுகொண்டிடா னுவப்புறவளர்ப்பவ னுமையோர்
கூறுகொண்டவ னாலயம்புதுக்கியுங் குறைவில்
சாறுகண்டிடப் புரிந்துமுள்மகிழ்தரு தக்கோன். (௩)

சத்தியந்தவ றுநெறிநனிவளர் சைவ
பத்தியந்தணர் நேயமற்பாத்திர முணர்ந்து
நித்தியந்தரு மஞ்செயனீதிசேர் சித்த
சுத்திமிக்கவன் சொன்னபுத்திரனெனுந் தோன்றல். (௪)

மாரனன்னவன் வனப்பினனுத்தம குணங்கள்
சேரநன்னலந் திகழ்தருகாட்சியாற் கருணை
வாரியன்னகா ளீசனார்திருவருள் வளத்தால்
வாரமன்னிய வரகுணனெனப்பெயர் வாய்ந்தான். (௫)

கன்னிநாடர சியற்றுறுகாலையில் வளஞ்சேர்
மின்னுபொன்னியந் துறைவனும்வீரசோ ழப்பேர்
துன்னுமன்னவன் வரத்தினிற்றோன்றுசோ ழைக்கன்
பன்னுபாரெலாம் வெற்றிகொள்படைத்திறம் படைத்தோன். (௬)

தனதிருக்கைவிட் டாலைக்காவெனுநகர் சார்ந்து
மனமுவந்தகி லாண்டநாயகிதனை வாழ்த்தி
யெனதுதோன்வலிக் கெதிரிலையெனவவ ணிருந்தான்
வனமிருந்தவிக் கிரமசோழப்பெயர் வாய்ந்து. (௭)

மன்னர்யாரையும் வென்றவர்சிரெலாம் வவ்வி
யன்னமன்னரைச் சிறையிலிட்டவனியை முழுதுந்
தன்னதாக்கினன் வரகுணபாண்டியன் றனையுந்
துன்னிவெல்வலென் றெழுந்தனன்மதுரையைச் சூழ்ந்தான். (அ)

அங்கிருந்தன னெழுந்தனனனலெனக் கனன்று
துங்கநால்வகைச் சேனையுஞ்சூழ்ந்திடப் புறப்பட்
டெங்கள்காளிமா புரத்திலுக்கிரண்டுயோ சனையிற்
றங்குசோழனாற் புரமெனுநகரிடைச் சார்ந்தான். (கூ)

அன்னசோழன்வந் திருந்ததாலந்நகன் னகர்க்கு
மன்னு நீர்வளச் சோழபுரப்பெயர் வழங்கும்
பன்னுமாயிடை மறையவர்பாரதி தீர்த்தத்
துன்னுமேன்மையுஞ் சிவக்குறிமேன்மையு முரைத்தார். (ய)

உரைத்தவாய்மைகேட் டந்நகர்ப்புறத்தினி லுளதாந்
திரைத்தபாரதி தீர்த்தமுற்றாடியங் கவளால்
விரைத்தபூக்கொடு பூசைசெய்விமலனாற் குறியைக்
கரைத்தவன்பொடு கைதொழுதிருந்திடு காலை. (யக)

வரமலிந்தகா ளீச்சுரனருள்பெறீஇ வயங்குந்
தரமலிந்தவவ் வரகுணபாண்டியன் றன்பாற்
றிரமலிந்தநம் படையெலாஞ்செல்லுமோ வலதவ்
வுரமலிந்தவன் படையினுலொழியுமோ வென்று. (யஉ)

கலக்கமுற்றன னுணர்ந்தனரமைச்சர்கை தொழுது
நிலத்துமன்னவர் யாவருநின்னடி பணிய
வலத்தவேல்கொடு புரிதிறன்மன்னவ வேங்கை
சலத்தவோசைகண் டஞ்சுமோவென்னிது சலித்தாய். (யங)

கடக்கரும்பகைக் கடல்விளையாட்டெனக் கடந்தா
யடுத்தவிச்சிறு குளப்படிகடந்திட லரிதோ
தடுக்கரும்பெருந் தானையும்யாங்களு மிருக்க
வெடுத்தசூழ்ச்சியீ தென்கொலாமென்றிசைத் தனரால். (யச)

இன்னவாசகங் கேட்டலும்வளவர்கோ னெழுமின்
மன்னனும்வர குணனொடுபோர்க்கென வயவர்
துன்னுவாண்மழு தோமரநாந்தகஞ் சூல
மென்னவாம்பல வாயுதபாணிய ரெழுந்தார். (யரு)

எழுந்தவீரர்கள் பாய்பரியானைதே ரேறி
யுழுந்திடற்கிட மின்றியெங்கணு நிறைந் தற்றார்
கொழுந்துவிட்டெழு சீற்றத்துவளவர்கோ னென்னார்
தொழுங்கழற்கண்வீ ரக்கழ றொடுத்தனன் றனையா. (௰௬)

நெடுங்கொடுஞ்சியந் தேர்மிசையேறின னிமிர்ந்தங்
கடுங்கொடுஞ்சது ரங்கமுஞ்சூழ்வர வாங்கு
நடுஞ்சயந்தனக் கொடிநடுமுறிந்தது நாடி
யடும்பரித்திரள் கண்கணீர்பொழிந்தன வன்றே. (௰௭)

இன்னவாகிய தீநிமித்தங்களை யெதிரிற்
சென்னிநோக்கிலன் கானப்பேரூர்ப்புறஞ் சென்றாங்
குன்னுவாள்களை யொன்றன்மேலொன் றுற வடுக்கித்
துன்னுகோட்டையொன் றாக்கினன்சேனைகள் சூழ. (௰௮)

மடங்கலும்புகற் கரியதாய்வானுற நிவந்த
தடங்கைவாளினாற் சமைத்தவாட்கோட்டையு ளிருந்தா
னடுங்குளிற்கர ரடித்தனர்பேரிகை யார்ப்பு
நடுங்கவெண்டிசை யெங்கணுநிறைந்தது நலிய. (௰௯)

பேரியார்ப்பது கேட்டனன்வரகுணன் பெரிதி
யாரிதென்னென வொற்றர்போயாவையு முணர்ந்து
நேரிலோதிடக் கேட்டனனடுங்குறீஇ நெஞ்சந்
தாருமிங்கிதற் கென்செய்வோமெனவினை யாயும். (௨௰)

அரசர்யாரையுஞ் சிறைப்படுத்தினனிவ னடற்போர்
விரசுசேனையை யெவ்வணம்வெல்குவம் விறல்சே
ரிரதமாதிய சேனையின்வலியுமிங் கில்லை
பொருளுமிக்கில்லை பூமியுமுள்ளன சிலவே. (௨௧)

பொருளுமேவலும் பூமியுநமக்கிவண் பொருவி
லருள்மிகுந்தகா ளீசனையன்றியிங் குளதோ
வெருவவந்துள வினையெல்லாம்வேண்டிமற் றவன்பா
லுரைசெய்வோமென வாலயச்சந்நதி யுற்றான். (௨௨)

சரணமென்னுயிர்க் குயிரெனவாழ்பவ சரணஞ்
சரணமெங்களை வழிவழியாள்பவ சரணஞ்
சரணம்வன்பகைக் கடற்குறுபுணையனாய் சரணஞ்
சரணமாரணம் போற்றுகாளீசவோ சரணம். (௨௩)

ஒன்றுகேள்பொனித் துறைவனு மொருவன்விக்கிரம
னென்றசோழன்மன் மன்னவர்யாரையு மெதிர்த்து
வென்றுமற்றவர் பொருளெலாங்கவர்ந்துவெஞ் செருக்கி
னின்றுநந்நகர்ப் புறத்தில்வந்திருந்துளம் வெகுண்டு. (௨௪)

பாண்டி நாட்டையும் வென்றிடப்படைகளைத் திரட்டித்
தூண்டியென்னொடும் போர்செயத்தொடங்கின னவனை
யீண்டியேற்றிட வலியிலேன்றுணையு மில்லேன்
வேண்டியாங்கருள் வித்தகவென்செய்வேன் றமியேன். (௨௫)

நீயலாற்கதி வேறிலேன்பாரெலா நினதே
தாயனையெனைக் காத்தருள்புரிகெனத் தாழ்ந்தா
னாயவேலையி லன்னையும்வானக நின்றாங்
கேயநின்பகை வெல்லுதும்போர்தொடங் கென்றான். (௨௬)

என்றவின்மொழி கேட்டுமிறைவனுண் மகிழ்ந்து
துன்றுதன்றுணைச் சேனைகள்சூழ்ந்திடச் சென்றா
னன்றுவந்துகா வீசனுங்காளியை யழைப்பித்
தின்றுநம்வர குணனொடுசென்னிவந் தெதிர்த்தான். (௨௭)

எதிர்ந்தசென்னியோ பாரெலாம்வென்றவ னிகலான்
முதிர்ந்தசேனையன் கொடியவன்மொய்ம்புளா னம்பாற்
பொதிந்தவன்புள வரகுணன்றனையெனப் போய்நீ
யதிர்ந்துசூழ்ந்துமற் றவன்றனைவென்றுமீள் கென்றான். (௨௮)

அய்யனம்மொழி கேட்டனளாங்குநங் காளி
வெய்யபூதங்க டமைவிளித்தெதிர்ந்தவர் மேவி
மெய்யராகிநம் வரகுணன்படையொடு மேவி
நொய்யசென்னியின் சேனையைக்கலக்குமா றுவலா. (௨௯)

தானுமாயையாற் பயங்கரவடிவொடு சார்ந்தங்
கானசோழன்வாட் கோட்டைகண்டதிசயித் தம்மை
மானவேல்வர குணன்முகநோக்கியான் வல்லை
தானைசூழுமவ் வளவன்வாட்கோட்டையைத் தகர்ப்பேன். (௩௰)

நீயுநங்கணஞ் சூழவந்திடுகென நிகழ்த்திப்
பாயவின்னொடு மண்ணுலாய்ப்பயங்கர வடிவ
மேயகாளிதான் மெல்லெனவைத்துவாட் கோட்டை
யீயுலாவினள் பொடிபடநொறுங்கிற்று விசையால். (௩௧)

கோட்டைதூள்பட வளவன்றன்சேனையுங் குதித்தங்
கோட்டமுற்றனு தூரத்தினள்பிடித்தன ளூரப்பி
நீட்டுகைகளாற் கால்களாலெட்டழல் பரப்பிக்
காட்டுகண்களாற் கனலினிற்பஞ்செனத் தொலைத்தாள். (௩௨)

நெடியசேனைக ளொழிதரநேர்ந்துவெஞ் சென்னி
கொடியவில்லினை வாங்கினன்குணத்தொனி செய்து
மடிவில்பல்கணை தூர்த்தனன்வரகுணன் றானுங்
கடியவெம்படை தொடுத்தவைதடுத்தனன் கனன்றான். (௩௩)

இருவரின்னண மிரண்டரைநாழிகை யெதிர்த்துப்
பொருதபின்னர்விற் பூட்டுவெங்கணைகளால் வளவன்
விருதுபெற்றகை வில்லொடுவலவனை வீழ்த்தித்
துரகதத்தையுந் தடிந்தனன்வரகுண சூரன். (௩௪)

பாகனோடுவெம் பரிவிழச்சிலையும்போய் வளவன்
வேகமாரமற் போர்வினைத்திடச்சின மேவி
நாகநோக்குறு கலுழனிற்பாய்ந்தன னசுக்கி
வாகுதேருற யாத்தனன்வரகுணன் கொணர்ந்தான். (௩௫)

ஆர்த்தபோழ்தினிற் பேரிகைசங்கமு மார்த்த
போர்த்தசேனையின் குதுகலிப்பெங்கணும் போர்த்த
கீர்த்தியான்மிகு வரகுணன்மீண்டனன் கீர்த்த
தீர்த்தனாயகா ளீசனால்வெப்பகை தீர்த்து. (௩௬)

அளவில்வான்புகழ்க் காளிமாபுரத்தினை யடைந்தங்
குளமுவந்துள வரகுணவுசிதன்விக் கிரம
வளவனைச்சிறை யிட்டனன்மகிழ்ந்துகா ளீசன்
முளரிநாண்மலர்த் தாளிணைபுனைந்தனன் முடிமேல். (௩௭)

அருளினோங்குகா ளீசனங்கரியசோ மேசன்
பெருமைமேயசொன் னவிநற்சுந்தராம் பிகைநீள்
கருணையார்தரு சோமசுந்தரன்கயற் கண்ணி
மருவிவர்க்குறு திருவிழாப்பலசெய்து வாழ்ந்தான். (௩௮)

சுற்றவிக்கிர மப்பெயர்ச்சோழனங் கோர்ந்து
கொற்றவாளிற்செய் கோட்டைமேனடந்தசா ரணத்தா
லற்றைநாண்முத லாகவாண் மேனடந் தானென்
றுற்றபேரொடு விளங்கினனுறுவலிக் காளி. (௩௯)

வரகுணபாண்டியப்படல முற்றிற்று.

ஆக செய்யுள் ௮௨௫.

# சுகந்தகேசிப்படலம்.

வன்புமிக்க வரகுணபாண்டிய
னன்புதொக்க வருங்கதைசொற்றனம்
முன்புய்த்த சுகந்தகேசிக்குநல்
லின்புறுத்த வியல்புதெரிக்குதும். (௧)

வேறு.

இன்னண நிகழ்ந்தபின்ன ரிருஞ்சிறை யுற்றவேந்தன்
றன்னக முன்னிச்சூழ்ந்து தனித்தொரு சந்தையேவ
வன்னவன் வரகுணப்பே ரரசனைத் தாழ்ந்துநின்று
சென்னியா லனுப்பப்பட்டேன் சிறிதிவை கேட்டியன்ன. (௨)

அருண்மலி காளீசன்ற னடிக்கம லங்கள்போற்றுந்
தெருண்மலி யுளத்தினின்றன் சீர்த்தியுங் கயிலையொக்கும்
பொருண்மலி வளத்தகாளி புரத்தின்மான் மியமுஞ்சேர்நட்
சுருண்மலி கூந்தலோடு சுந்தரன் போந்தவாறும். (௩)

மதிவளர் குலத்துண்மிக்க வரகுணப் பெயர்க்குத்தக்க
துதிவளர் பெருமையாவுந் துலங்குறக் கேட்டனன்பா
னிதிவளர் நின்பாற்போந்து காண்பது நினைத்தன்றிச்
சதிவளர் சமர்விளைத்த தன்மைவே றின்றுகாண்பாய். (௪)

கொற்றவேல் வலியால்வெற்றி கொண்டவென் கோவல்பூண்டு
துற்றமன் னவரெலாநின் றுனையடி தொழுவாராக
பெற்றவென் செல்வம்யாவும் பெறுகநீ யின்னேயென்னே
மற்றினிச் சொல்வதுன்றன் மாண்புமுற் றுணர்ந்ததாலே. (௫)

வரத்தினாற் பெற்றவென்றன் மகளெனுஞ் சுகந்தகேசி
கருப்புவிற் பிடித்தவேடன் கண்கவர் வனப்புமிக்கா
ணிரப்பிலாக் குணத்தினானை நினக்கென நிச்சயித்தேன்
விருப்பமுற் றன்பிற்கொள்ள வேண்டுமென் றிரந்தானென்றான். (௬)

என்றவன் போனபின்ன ரிவையெலா மனத்துளோர்ந்து
துன்றுவன் சிறையினீக்கிச் சோழனைக் கொணர்திரென்று
னன்றுவந் தவனைநோக்கி நனியுரை யாடிப்பின்னர்
நின்றனிச் சுதையைக்காணு நேயமுற் றனனியா னென்றான். (௭)

வளவர்கோன் மகிழ்ச்சியோடு மகளினைத் தருவித்தானுங்
களவில்பே ரழகினாளை யன்பொடு நோக்கிமாற
னுளமகிழ்ந் ததிசயித்தா னுமையொக்கு மிவளைநீயே
களவறு மணம்புரிந்து கவினின்வாழ் கென்றான்சென்னி. (௮)

என்றலு நகரமெல்லா மிமையவ ருலகமேய்ப்பத்
துன்றுற வலங்கரித்துத் தூரிய முழக்கஞ்செய்தா
ரன்றுநல் லோரையோர்ந்தங் கந்தணர் பல்லோர்சூழ்ந்தார்
மென்றளிர்ச் சுகந்தகேசி மின்னையு மலங்கரித்தார். (௯)

சென்னிதன் மடியில்வைத்துச் சிறுமிதன் கரத்தைத்தென்னர்
மன்னவன் வரகுணன்றன் மலர்க்கரஞ் சேர்த்தியன்பிற்
றன்னது கையாற்றாரை வார்த்தனன் றழன்முன்னாக
வுன்னிய வுவகையோடு மேற்றன னுசிதமாறன். (௰)

மறையவ ராசியோத மகளிர்மங் கலங்கள்பாட
நிறையொலி யாடல்பாட னிகழ்ந்தன வெங்கும்பின்னர்க்
கறையறு மணிகளாற்செங் கனகத்தாற் கற்பகத்தி
னறையவிழ் மலராலாய்ந்த நனிமண வறைபுனைந்தார். (௰௧)

திருவினாற் றனதனொப்பான் றிருமகள் மகனும்வெட்கு
முருவினான் மிக்கமாற னொளிதிகழ் மணவறைக்கட்
பொருவிலிந் திரனிகர்ப்பப் போந்துவீற் றிருந்தான்பாங்கர்
மருமலர்ச் சுகந்தகேசி மானையு மடவாருய்த்தார். (௰௨)

அனங்கனை நிகர்ப்பமாற னமளிமீ திருப்பவாங்கு
மனங்கனி சுகந்தகேசி வல்லியி னொல்கிநின்றாண்
முனங்கவி கூர்ந்துசெய்ய முகத்தினின் முறுவல்காட்டி
யனந்தனிப் போந்ததென்ன வமர்ந்தவ டன்னைநோக்கி. (௰௩)

கலைமக ளென்றுசெய்ய கமலமா தென்றுதெய்வ
நிலமக ளென்றுபோற்று நீரர மகளுமன்றித்
தலைமக டானுமன்று சகமெலா மீன்றவந்த
மலைமக ளிவளேயென்று மனத்தினுண் மதித்துக்கூறும். (௰௪)

மருமலர்க் கூந்தாலுன்றன் வடிவமுங் குணமுநோக்கிற்
பெருமித முற்றதெய்வப் பெண்ணெனத் தோன்றுகின்றாய்
வருகுழ லியற்கையாய வாசனை பொருந்துமாற்றாற்
பொருவறு சுகந்தகேசி யென்றபேர் புனையப்பெற்றாய். (௰௫)

கணவனு னல்லனெங்கள் காளீசன் றனேநல்ல
மணமக னுவனிற்கு மருவியின் புற்றுவாழ்கென்
றணவரு மனத்தனாகி யறைந்தனன் கேட்டுவெட்கித்
தணவரு மன்பினாளுந் தலைகுனிந் திசைக்கலுற்றாள். (௰௬)

என்னிது பரிகாசங்கொ லெளியவென் னுளஞ்சோதிப்பான்
றன்னினீ மொழிந்தாய்கொல்லோ வுன்னைநா யகனென்றெண்ணு
மென்னைமற் றொருவர்பாற்செ லென்பது நீதியன்றான்
மன்னவே றொருவர்தம்மை மனத்தினு நினையேனென்றாள். (௰௭)

பின்னரு மன்னனம்பாற் பேதைநீ வைத்தகாத
லின்னினி விடுகநங்கா ளீசனே நினக்குநாத
னென்னலுஞ் சுகந்தகேசி யிரும்புகழ் வளவர்கோமான்
மன்னிய மகனான்மற்றோர் தம்மையு மதிப்பன்கொல்லோ. (௰௮)

மன்னவர் மன்னனாக வானவர் கோனேயாக
முன்னியங் கவரைநோக்கேன் மூதுணர் வுடையமன்ன
நின்னலாற் கொழுனனில்லை யெனக்கென நிகழ்த்தலோடு
மன்னவ ளெண்ணநோக்கி யறைகுவன் றென்னர்கோமான். (௰௯)

உலகெலா மனைத்தாகு முரியவன் றனதனுவான்
சிலையெனக் கையிற்கொண்டான் செம்பொன்மே ருவையுமானு
மலரயன் முதல்வன்றேனு மாணடி வணங்கப்பெற்றோ
னிலகுநங் காளீசன்பா லென்குறை யுனக்கிங் கென்றான். (௨௰)

நொடிக்கொரு பயனின்மாற்ற நுவல்வதென் னெனதுதந்தை
கொடுத்தனன் றழல்சான்றாகக் கொண்டநீ யென்னைமற்றோ
ரிடத்தினிற் செல்கவென்ன லேற்பதோ வென்றுதென்னன்
றடுத்துரை புகலான்சற்றுத் தன்னுளே சூழ்ந்துசாற்றும். (௨௧)

நன்றிது நிற்கவின்னே நாமிரு வரும்போய்த்தங்க
ளொன்றிய காளீசன்றா ளுவப்பொடு தரிசிப்போமென்
றின்றுணைச் சுகந்தகேசி யுடன்வர வெழுந்துகோயிற்
சென்றிடு முன்பேயிற்குச் சென்றனர் பூசைச்செல்வர். (௨௨)

பூசக ரருத்தயாம பூசனை முடித்துப்பின்னர்த்
தேசுறு புதவமைந்துஞ் செறித்தனர் பூட்டிச்சென்றார்
பேசுவ தினியென்னென்று பெட்புறு சுகந்தகேசி
யாசையி னிற்பக்கோயி லணிகிளர் வாயினின்றான். (௨௩)

நின்றிவை சூழ்ந்திட்டெங்க ணின்மல வருட்காளீச
வன்றுதென் னவன்பொற்பாவைக் காருயி ரளித்ததன்மை
யென்றிடி லிக்கவாடந் திறக்கவென் றிசைத்தலோடு
மன்றது திறக்கவப்பா லடுத்தன னிரண்டாம்வாயில். (௨௪)

சேமமா ரருட்கடால்வாட் சேனையோ டடர்ந்துபோந்த
வேமமார் வளவன்றன்னை யெதிர்த்துநீ வென்றதன்மை
யாமெனி லிக்கவாடந் திறக்கவென் றறைதலோடு
நாமறத் திறந்ததப்பா னடந்தனன் மூன்றாம்வாயில். (௨௫)

விண்டலம் போற்றவன்பர் வேண்டியாங் கருள்வோயன்பாற்
கண்டவிப் பாரெலாநீ காத்திட லுண்மையென்று
லெண்டரு மிக்கவாடந் திறக்கவென் றிசைத்தலோடும்
பண்டெனத் திறக்கவப்பாற் படர்ந்தன னான்காம்வாயில். (௨௬)

துன்னிய கொன்றைவேணித் தோன்றலிச் சுகந்தகேசி
மன்னுபார்ப் பதியென்றேயான் மதித்ததிங் குண்மையென்றாற்
றென்னிசை யிக்கவாடந் திறக்கெனத் திறத்தலோடு
மன்னிலை கடந்துவல்லை மேவினனைந்தாம்வாயில். (௨௭)

தொகுஞ்சடைக் கங்கையாயிச் சுகந்தகே சிக்குநீயே
தகும்பதி யென்றியான்முன் சாற்றிய துண்மையாயி
னகுந்தனி யிக்கவாடந் திறக்கென நவிலலோடும்
புகும்படி திறந்ததெங்கள் புண்ணியன் றன்னைக்கண்டான். (௨௮)

தொழுதுகா ளீசன்றன்னைச் சுகந்தகே சியைக்கண்ணோக்கிக்
கொழுனனிற் கிவனேயாருங் கூடியின் புறுகவென்னப்
பழுதிலா னீயேயென்றன் பதியெனப் பகர்ந்துநின்ற
பொழுதுடை வாளைக்கையிற் பொருக்கென வாங்கினானால். (௨௯)

அன்னபோ தண்ணறோன்றி யலர்முக முறுவல்பூத்து
மன்னநீ தழன்முன்னாக மணம்புரிந் திவளையிங்கே
யென்னுழிக் கொணர்தலென்னை யென்றது மையமின்று
நின்னையுந் தேசித்தன்றி நிகழ்த்திலேன் மன்றலென்றான். (௩௰)

அண்டர்கோ னிவளையன்பி னன்றுகைப் பிடித்தாய்நீயே
கொண்டுசெ லென்றான்மன்னன் கொடுப்பதெல் லாமுநீயே
பெண்டுநற் பொருளுமுள்ள பெரும்புவி யனைத்துநீயே
பண்டுதந் தனையெலாங்காப் பவனுநீ யாதலாலே. (௩௧)

இன்றிவ டன்னைக்கோடி யின்றென மறுத்தியேலிங்
கென்றன துயிரைமாய்ப்பே னென்றுவாள் களத்திற்பூட்டத்
துன்றநம் பெருமான்றோன்றிச் சுகந்தகே சியையன்போடு
தன்றிருக் கரங்கணீட்டித் தழுவிலிங் கத்துட்புக்கான். (௩௨)

கலந்தமை தோன்றவந்தக் கன்னிறை சுகந்தகேசி
யிலங்குகாற் சதங்கைதோன்று மிலிங்கத்தின் வாமபாகந்
துலங்கிய நேசகந்தஞ் சூழுமவ் வனத்தையென்று
மலர்ந்தபூஞ் செழுஞ்சுகந்த வனமென வுரைப்பர்மாதோ. (௩௩)

அந்திற நோக்கினன்பே ரானந்தக் கடலுண்மூழ்கி
வித்தகன் வரகுணப்பேர் வேந்தனெம் பெருமான்றன்னை
நத்திய வன்பினோடு நாத்தழும் பேறவாழ்த்திச்
சத்திய நெறிமேற்கொண்டு தன்னகம் புக்கிருந்தான். (௩௪)

என்முனி கூறவேந்த னெழில்பெறு சுகந்தகேசி
தனைமணம் புரிந்தமாறன் மற்றவள் கவுரியென்று
மனதினி லுணர்ந்தவாறும் வள்ளறன் னிலிங்கத்தூடங்
கினைமெனக் கொண்டவாறு மிசைக்கென விசைக்கலுற்றான். (௩௫)

வேறு.

முன்னொருகாற் பெருந்தவத்துச் சனகாதி
முனிவரொரு நால்வரும்வான் கயிலைபுக்கு
மின்னொருவார் சடைமுடியெம் பெருமான்பொற்றாள்
வீழ்ந்துதுதித் தெழுந்துநின்று விமலாவெங்கட்
கின்னுயிரே யோகத்தின் பண்பைத்தோன்ற
வினிதுபுகன் றிடுதியென விரந்துநிற்ப
வன்னவனு மஃதுணர்த்த வன்புகூர்ந்தங்
கருந்தவரு மகன்றனர்தம் மிருக்கைபுக்கார். (௩௬)

அக்காலை யங்கணனைத் தொழுதெம்மன்னை
யருந்தவருக் கருள்புரிந்த யோகநற்பண்
பிக்காலை யானுமுணர்ந் திடவுட்கொண்டே
னென்றிடலுங் கனன்றுபெரு மானெய்யாமை
மிக்காயென் னுடனிருந்தாய் மதியாதுற்று
மீட்டுமென்பால் வினவினையின் றுதலானீ
புக்காதி மானிடப்பெண் ணெனச்சபித்தான்
பொறுத்தருள்க மதியிலியென் பிழையென்றாளால். (௩௭)

என்றலுமெம் பிரான்மகிழ்வுற் றிருநீர்வைப்பி
லிலங்குறுதக் கனகாளி புரமென்றோரூர்
துன்றுமதி லமர்ந்திருப்போ நீபோயாங்குச்
சோழதே யத்தரசன் றநயையாகிச்
சென்றபனி ரண்டாண்டில் வருவாய்நம்பாற்
சேர்த்திடுவோ மென்றனனவ் வண்ணஞ்செல்வா
ளன்றபயன் புத்திரகா மேட்டியாற்ற
வதிற்றோன்றி யவன்புதல்வி யாயினாளே. (௩௮)

சென்னிகுல திலகமெனத் தோன்றுஞ்செய்ய
சிறுமியெழில் வளநோக்கி யுவகைமீக்கூர்ந்
தின்னிலையென் பாலருளா லுலகமெல்லா
மீன்றவளே யெனக்குறுபெண் ணானாளென்று
தன்னிலவ டன்கரத்தி லளித்தானந்தத்
தளரியலும் பூரித்து வளர்க்குங்காலைப்
பின்னுகுழ லியற்கைமணங் கண்டுமன்னன்
பெயர்சுகந்த கேசியெனப் பேசினானால். (௩௯)

பெண்ணரசி யிவ்வண்ணம் வளருங்காலைப்
பேரெழிலுங் குணநலனும் பெரிதுநோக்கி
மண்ணரச ராசைகொண்டு பலர்வந்தீண்டி
மணங்குறித்து வளவன்பால் வினவவன்னான்
கண்ணனைய பெண்மணியை மடிமேல்வைத்திக்
காசினியா ளரசரிளங் குமரருண்ணிற்
கெண்ணமெவன் பாலுளதிங் கவற்களிப்பே
னென்றலுமொன் றுங்கூறாள் வெட்கிநின்றாள். (௪௰)

நின்றசுதை முகநோக்கிப் பலகாற்கூற
நின்னையெவர் வெல்கின்றா ரவரேயென்னை
மன்றல்செயக் கடவரெனு மாற்றங்கேட்டு
மகள்பருவக் குறிப்புணர்ந்து மனத்துட்சூழ்ந்து
துன்றுசமர் புரிந்தரசர் தம்மைத்தன்றாட்
டுணைதொழவைத் தவருரிமை யனைத்துங்கொண்டு
கன்றுசினத் தொடுபாண்டி நாட்டைவெல்லக்
கருதிவர குணனொடுபோர் கலக்கலுற்றான். (௪௧)

அன்னவனைக் காளீசன் றனையன்ப
னுயவர குணனுகி வென்றானந்தச்
சென்னிதன்பன் னிரண்டுவய தானசெல்வச்
சிறுமிவள ரெழிலோங்கு சுகந்தகேசி
தன்னையளித் தானன்பி னதனையோர்ந்து
தன்பாலுய்த் திடுமாறன் றனிக்களிக்க
வுன்னுசிவ லிங்கத்துள் ளொளிக்கச்செய்தா
னுடையவனெம் பெருமானீ துள்ளவாறே. (௪உ)

சுகந்தகேசிப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௪௬௭.

# விக்கிரமசோழன் சிவலிங்கப்பிரதிட்டைப்படலம்.

இகன்றவிக்கிர மச்சென்னியீன்றிடுஞ்
சுகந்தகேசியின் றாய்க்கதைசாற்றின
மகந்தழைத்தவ னன்பிற்சிவலிங்க
முகந்தவண்பதித் துள்ளசீரோதுதும். (௧)

வேறு.

தன்மலிந்த குலக்கொடியைத் தனிக்காளி புரக்கடவுண்
மின்மலிந்த லிங்கத்துள் விழுங்கினனென் பதுகேட்டிங்
கென்மலிந்த வியப்பெனக்கண் டிடவெதிர்வான் போன்றுதயத்
தென்மலிந்த வடுக்கன்முடி சேர்ந்தெழுந்தான் செங்கதிரோன். (உ)

காலையினித் தியகருமங் கழித்தமைச்ச ருடனெழுந்து
சீலவர குணனவைவிற் சேர்ந்திருந்தான் சென்னியர்கோ
னேலமுறு குழன்மடவா ரெழிற்சுகந்த கேசிதனைச்
சாலவுமெங் கணுந்தருவிக் காணுமை சாற்றினரால். (௩)

அன்னமொழி கேட்டபய னங்கறிவு மிகக்கலங்குற்
றென்னிதென வுடல்பதறி வின்மொழியால் வரகுணவென்
கன்னிதனை யரண்மனையிற் கண்டிலமென் றிசைக்கின்று
ரன்னவளெங் குறைகின்று ளென்றனனங் கயர்வுற்றான். (௪)

கடந்தமனத் தருந்தவருங் காண்பரிய காளீசன்
றடந்திகழுஞ் சிவக்குறியுட் டன்மயமாய்க் கலந்தவன்ற
னுடன்சுகித்தங் கிருக்கின்றா ளெனவுரைக்க வுன்னிவியப்
படைந்துகிரா ணங்கரம்வைத் தாங்குவிரைந் தெழுந்தனனால். (௫)

நேரியனும் வரகுணனு நேர்ந்தமைச்ச ரொடுங்குடும்பத்
தாரியலுங் குழன்மடவார் தம்மொடுமா லயத்தெய்த
வாரியரும் பூசகரு மருங்காலைக் கடன்கழித்துப்
பேரியலுங் காளீசப் பெருமான்முன் னடைந்தனரால். (௬)

பருவுதிருக் காப்பகற்ற மன்னவரு முன்சென்று
பொருவிலருட் காளீசன் புதியவருட் குறிநோக்கித்
திருவளரு மொருபாகத் தினிற்செழிய கங்கணமு
மருகினிற்கிண் கிணிக்குறியி னழகுமொளிர் தரக்கண்டார். (௭)

கண்டுவியப் பொடுவளவன் கண்பனிப்ப வானந்தங்
கொண்டுவர குணன்றனக்குக் கொழுந்தழலின் முன்னென்றன்
பண்டைவிதிப் படியவன்கைப் பற்றவளித் திட்டானென்
மண்டுமெழில் வளர்சுகுந்த கேசியெனு மடவரலை. (௮)

இன்றவடன் கைவளையுங் கிண்கிணியு மிவ்விலிங்கத்
தொன்றிவளர் கண்ணடியி னுள்ளுருவின் விளங்குவன
நன்றுவியப் பிவைகாண்மி னாயகனே பாண்டியனா
மென்றிடனிச் சயமென்றா னெல்லோருங் கேட்கநின்றே. (௯)

அத்தருணஞ் சடைமுடியு மணிபூதி கண்டிகையு
மொய்த்தவயோ திகமறையோன் முன்வந்து சந்நிதியிற்
பத்தியொடு காளீசன் பதம்பணிந்து வளவன்மக
ளந்தவளை யொடுசதங்கைக் குறிநோக்கி யகமகிழ்ந்தான். (௰)

ஆடுவா னண்ணலருள் விளையாட்டை யன்பூறப்
பாடுவா னயன்மாலுங் காண்பரிய பாதமலர்
சூடுவான் குதுகலித்த மறையோனைத் தொழுமாற
னேடிநீர் வந்ததெவ னீவிர்யார் நிகழ்த்துகென்றான். (௰௧)

நன்னலஞ்சேர் காஞ்சியெனு நகர்வதிவ தந்நகரின்
மன்னுசிவ பத்தியுள சங்கரப்பேர் மாமறையோ
னன்னவனற் றநயனெனக் கபிதானஞ் சிவகர்ப்பன்
றன்னிகரில் பூதிசா தனநெறியே கடைப்பிடித்தேன். (௰௨)

சிவநிசியி லேகாப்ப ரேச்சுரனைச் சிந்தித்தே
னவனருளின் விண்ணகத்தி லசரீரி யாய்ப்போந்து
புவனிமிசை யாமிருக்கும் புண்ணியவெத் தலங்களுளுந்
தவமகிமை யுள்ளவெனத் தருமதுரை காளிபுரம். (௰௩)

அன்னவற்றுட் காளிபுரந் தன்னினமக் கன்பானோன்
சொன்னவர குணன்றனக்குத் தோற்றவள வன்மகிழ்ந்து
மன்னுவிருப் பாலளித்த வளர்சுகந்த கேசிதனைத்
துன்னியநஞ் சிவக்குறிக்குட் டோன்றுகுறி யுறச்சேர்த்தோம். (௰௪)

அக்குறியைப் பௌரணையிற் காண்பவருக் கக்கன்னி
கைக்கணியும் வளைசதங்கை கண்கூடாத் தோற்றுமதைத்
தக்கமனத் தன்பினொடு தாழ்ந்திடிற்சா யுச்சியமு
மக்கணமே பெரும்புகழும் பெறுவார்க ளாதலினால். (௰௫)

முத்திநலம் வேண்டுவையேன் முதிர்காளி புரஞ்சென்று
பத்தியொடு தரிசிப்பா யென்றனனப் படிப்போந்து
சித்தியுறக் கண்டேனென் சித்தமகிழ்ந் துறவின்றே
யத்தருநற் பதம்பெறுவ லையமிலை யிதற்கென்றான். (௰௬)

அவ்விடைநங் காளலிங்கத் தோரொளியுண் டாயதனிற்
செவ்விமறை யோனொளிக்கத் தேர்ந்தனரங் குளபலரு
மெவ்வமறு மானந்தக் கடன்மூழ்க விருஞ்சோழன்
கவ்வையகன் மனத்தினனாய்க் கரங்கூப்பி யிவைதுதிப்பான். (௰௭)

அன்பர்தமக் கன்பாகி யாருயிருக் குயிராகி
யென்புருக வாண்டருளு மெந்தாயெங் காளீச
நின்பெருகு கருணையினா னேயமிலா வெளியேற்கு
மன்பெருமென் றுலந்துலங்க வளர்மகப்பே றருளுகவே. (௰௮)

கோலமதி புனைந்தருளுங் குளிர்சடையு மன்றுவரு
மாலமுவந் தணிமிடறு மழகுதருங் காளீச
சீலமிகு கருணையினாற் சிறியேன்றன் குலம்விளங்க
ஞாலமெலாம் பாலனஞ்செய் நன்மகப்பே றருளுகவே. (௰௯)

ஆரணமு மாகமமு மரியயனும் போற்றுபரி
பூரணனே யருள்வாரி பொருவுமெழிற் காளீச
பேரணவு தவத்தாள்யான் பெறுசுகந்த கேசிகையு
மோரணநின் றனக்களித்தே னெழின்மகப்பே றருளுகவே. (௨௰)

என்றுருகித் துதித்தலுமங் கினியஞ்சே லஞ்சலிவண்
டென்றுகனி கொடுபோய்நின் றுணைவியுணப் புரிகநினக்
கொன்றுதனிச் சந்ததியொன் றுண்டாமென் றெழுந்ததுவா
னின்றுமொழி காளீசன் றிருவருளா னிகழ்ந்தன்றே. (௨௧)

கேட்டலுமங் கமுதமெனக் கிளர்கனியொன் றறநோக்கி
நாட்டமகிழ்ந் தெடுத்ததனை நன்மனைவி கரத்தளித்தான்
வேட்டவளுந் ணலுங்கருவில் விளங்குமொரு புத்திரனை
வாட்டமறப் பெற்றனளம் மன்னவனு மகிழ்வுற்றான். (௨௨)

நிலம்விளங்கக் காளீச னேர்ந்ததுவு மருளாற்சேய்
குலம்விளங்கப் பெற்றவிறற் கோழியர்கோ னன்பதனாற்
றலம்விளங்கு தாளவன மெனப்புகலுந் தனிப்பெரிய
நலம்விளங்கு நாட்டரசன் கோட்டையெனு நன்னகரில். (௨௩)

ஞாலமகிழ் கண்ணுடைய நாயகிவீற் றிருந்தருளு
மாலயத்தின் றென்பாங்க ராகமநூல் விதிப்படியே
சாலமகிழ்ந் தோரிலிங்கந் தன்பெயராற் றாபித்தங்
கேலமுறு புனலாட்டி யெழிற்பூசை முறைபுரிந்தான். (௨௪)

கண்குளிரக் கண்டுசிரங் கைகூப்பி நின்றுதுதி
பண்குளிரப் பலபாடிப் பணிந்துவிடை பெற்றுமலர்ப்
பெண்குளிரு மனைவியொடும் புதல்வனொடும் பெரிதுவந்து
மண்குளிருந் திருவாணைக் காநகரில் மகிழ்ந்திருந்தான். (௨௫)

விக்கிரமசோழன் சிவலிங்கப்பிரதிட்டைப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௮௬௨.

---

# புட்கரப்படலம்.

---

வாய்ந்தவிக்கிர மன்சிவலிங்கமொன்
றாய்ந்துநன்கு பதித்ததறைந்தனந்
தீய்ந்தசெய்கையிற் றேர்புட்கரன்பவந்
தேய்ந்ததன்மை தெரியத்தெரிக்குதும். (௧)

சங்கவெண்மணி தாக்குந்தடந்திரை
பொங்குபூம்புனற் புண்ணியமாநதி
யங்கதிற்குடை வார்வினைபாற்றுறுங்
கொங்குலாமலர் கூருங்கோதாவிரி. (௨)

சாற்றுமந்நதித் தண்டடமுள்ளது
போற்றும்வேத புராணமுதற்பல
தேற்றுநான்முறைச் செல்வர்கள்வாணக
ராற்றுசீரிய லார்கரவீரமே. (௩)

அந்தமாநக ரந்தணர்தங்குலம்
வந்தவன்கொலை வஞ்சகம்பொய்யுளான்
றெந்தநண்பரைச் சூழ்ந்துகெடுப்பவன்
*குந்திபுண்டு கொடும்பழிசெய்பவன். (௪)

புலையமாதர்ப் புணரும்புணர்ப்புளா
னிலையிலாதவர் நீணெறிச்செல்பவ
ரலையவேசெய் தரும்பொருள்கொள்பவன்
றொலைவரும்பவஞ் சூழ்தருதீயவன். (௫)

பிறர்பெரும்பொரு ளுங்களுமபெற்றிய
னறவர்தங்களை யஞ்சப்புரிந்திடு
மறவரிற்கொடு வன்கணன்மாதரைக்
கறுவியங்கவர் கற்புங்கெடுப்பவன். (௬)

மாயமுற்றபல் வாகடங்கற்றவன்
றீயபற்பன் மருந்துகள்செய்பவ
னேயடுத்து நடங்கினர்க்கொல்லுவோன்
றூயுமில்லுமோர் தன்மையென்றுன்னுவோன். (௭)

வன்சொலால்வலி யாரைமயக்குவ
னின்சொலாலெளி யாரையுமேய்ப்பவன்
புன்செயற்புரி புட்கரனுமிவன்
றன்செயல்சொலத் தக்கதன்றுமரோ. (௮)

வேட்கைநல்லற மேவியவித்தகர்
கிட்டுநன்னெறி சேர்பரிசுத்தர்போற்
காட்டிமோசங் கடைப்பிடித்தொண்பொரு
ளீட்டிவாழ்ந்தங் கிருந்திடுங்காலையில். (௯)

---

* குந்தி - கள்ளு.

கம்பமாநதி யின்கரைக்கண் ணுளான்
பம்புசீர்மறைப் பண்ணவன்கன்மமே
நம்பி*யாறு நடத்துறுவித்தக
னும்பர்போற்று முயர்கன்மசீலனே. (௰)

அன்னவன்மனை யாளஞ்சுபாடணி
தன்னொடுந்தீர்த்த யாத்திரைதன்னையே
யுன்னியாண்டுள வுத்தமதீர்த்தமு
மன்னியாடிக்கோ தாவிரிவந்தனன். (௰௧)

வந்தவேதியன் வாழ்கரவீரமா
முந்துநன்னக ருற்றனனவ்வழி
முந்துபுட்கரன் முன்னர்வணங்கினை
னெந்தவூரைய வென்றுவினவினான். (௰௨)

ஊரும்பேரு முரைத்தவவ்வேதியன்
சேரநின்ற திருவனையாடன
பாரமுங்குழற் பந்தியுநேர்ந்துகண்
ணாரக்கண்டன னாசையுட்கொண்டனன். (௰௩)

எந்தவாறு மிணக்கியிவளையென்
சொந்தமாக்கிக்கொள் வேனெனச்சூழ்ந்துளே
யந்தணன்றனை யையவிச்சேணிடை
வந்தவாறெவ னென்றனன்வஞ்சகன். (௰௪)

கன்மசீலனற் கங்கையின்மூழ்கியே
சன்மசாபலி யம்பெறற்கெண்ணிநா
னென்மனைக்குரி யாளொடும்போந்தன
னின்மன்பேரு நிகழ்த்துகவென்றனன். (௰௫)

நின்னையொத்தவ னோர்பெரியோரைக்கண்
டுன்னருங்கலை யோதவும்யாவையு
மன்னவர்க்கிங் களிக்கவுமெண்ணினேன்
மன்னுநல்வினை யாலிவண்வந்துளீர். (௰௬)

என்னிலும்பொருள் யாவையுநம்மதே
யுன்னிவேண்டுவ வுங்களிப்பெனுப்
பன்னிநல்லுப சாரஞ்செய்புட்கரன்
றன்னிலந்தனிற் சார்ந்தங்கிருந்தனன். (௰௭)

---

* ஆறு - சட்கர்மம்.

தீயபுட்கரன் வஞ்சந்தெரிந்திலான்
சேயெனப்பணி செய்தலினன்புறீஇ
யாயநூல்க ளனைத்தையுமோதினு
னேயுமாறங் கிருந்தனன்சில்லநாள். (௰௮)

மாகமாமதி வந்தது கங்கையி
லேகிமூழ்கியிங் கெய்துவல்யானிவ
ளாகமோதளர்ந் தாளிவண்வைகுக
வீகநன்மருந் தென்றனனேகினன். (௰௯)

வேதியன்செல வெய்யவன்புட்கரன்
காதலாலவன் காதலிமால்கொளற்
கேதுவாமருந் திட்டுப்புணர்ந்தனன்
மாதனுள்பின் மயக்கந்தெளிந்தனள். (௨௰)

வெருவியுள்ளம் வெகுண்டடபாவிநீ
குருவின்பன்னியைக் கூடினன்றுகொ
லருகுநின்றிட லாகெடுவாயென
மருவிநின்று வணங்கிக்கரைப்பனுல். (௨௧)

மஞ்சுபாடணி நின்சொன்மறுக்கிலே
னஞ்சுபாவ மறங்குருசிட்டனென்
றெஞ்சுநூல்க ளிசைப்பதெலாமிவண்
வஞ்சமன்றி வருசுகமில்லையே. (௨௨)

கலைகள்யாவும் பிழைத்திடக்கட்டினர்
மலையில்வாழ்ந்திடு மாதவராய்த்திடிற்
றொலைவிலாத சுகத்தினையல்லதிவ்
வுலகில்வேறொன் றுணர்ந்தவர்யாவரே. (௨௩)

தருணைநீமெய் தளர்ந்தவன்வேதியன்
பருவமுற்றவென் பண்புமுணர்ந்தனை
யிருவருங்கலந் தின்புறலேயினிக்
கருமமென்றுணர் கண்மணியேயென்றான். (௨௪)

மாயவஞ்சகன் வாயுரையின்சொலா
லாயுநுண்ணிடை யாளுமிணங்கினு
ளேயவன்பி னிருவருமொன்றியே
காயவின்பக் கடலிடைமூழ்கினர். (௨௫)

இன்னவேலையி லெய்தியவேதியன்
றன்னவந்தனன் சூழ்ந்துமதித்திலார்
மன்னுபுட்கரன் வஞ்சகம்யாவையு
முன்னியுள்ளு ளுணர்ந்தனனுண்மையே. (௨௬)

கொடியபுட்கர னுந்தன்குடும்பியும்
*வெடியருந்தி விளைந்திடுமின்பமாக்
கடலின்மூழ்கிக் கிடந்திடக்கண்டனன்
படியிலாத பழமறைவேதியன். (௨௭)

கற்றவேதியன் கண்டமைகண்டனர்
மற்றவன்றனை யாருயிர்மாய்த்தன
ருற்றதங்கிரு வோரையும்பாதகம்
வற்றியுள்ளம் வறந்தனர்மாழ்கினர். (௨௮)

அறிவிழந்தன ரச்சமுற்றுவவெவன்
றறவருந்தின ருருமிழந்தனர்
மறவர்வாழும் வனங்களிலோடினர்
செறியும்பற்பல தேயங்கடந்தனர். (௨௯)

முன்னையூழ்வினை மூட்டிடமுன்னியே
யன்னைகாளி புரத்தையடைந்தன
ருன்னுசீர்த்தி யுருத்திரதீர்த்தத்திற்
றுன்னித்தாபந் தொலைந்திடமூழ்கினர். (௩௰)

புண்ணியப்புன லாடினர்போயின
திண்ணமுற்றெழு தீவினையாவையும்
விண்ணினுற்ற விமானமிழிந்ததா
லெண்ணமுற்றதி லேறிவிளங்கினர். (௩௧)

உமையும்பாகனு மொத்தனர்விண்ணிடை
யமையவும்ப ரலர்மழைதூற்றினர்
நமையிங்காளுடை நாயகன்றண்ணருட்
சிமையமேவித் திகழ்தரவாழ்ந்தனர். (௩௨)

ஆதலாற்சிவ கங்கையிலாடுவோர்
பாதகங்களைப் பாற்றுதறிண்ணமே
யீதலாதினு மேற்றமிக்குள்ளதொன்
றோதுவாமது வுந்தகக்கேட்டியால். (௩௩)

புட்கரப்படல முற்றிற்று.
ஆ_ செய்யுள் ௯௨௫.

---

* வெடி - கள்.

# பேய்கள் சாபநீங்கியபடலம்.

போதகற்கொலும் புட்கரனைத்தொடர்
பாதகந்தனைப் பாற்றியதோதினா
மோதுபேய்களை மொய்த்திடுசாபத்தைக்
காதுமாக்கதை காதலிற்கூறுவாம். (௧)

வேறு.

களிகொள்வண்டின முழங்குறுகவின்மலர்க் கோட்டி
னொளிகொடண்பொழிற் கனிகளைமணிகளா லுதிர்க்கு
நெளிகொடெண்டிரை சூழ்தருநிருமதா நதியி
னளிகொடீரத்தி லுளதுமாகிண்மதி நகரம். (௨)

பொருவிலந்நகர் வதிபவன்புண்ணியம் போற்றுந்
தருமபந்துவென் றிடுபெயர்த்தக்கமா மறையோ
னருமைவேதநூற் பொருளெலாமாய்ந்தவ னுரிய
கருமம்யாவையுங் கைவிடாதியற்றுறு சீலன். (௩)

அந்தவேதிய னமர்மனைத்தருமசீ லையின்பாற்
றந்தமைந்தனுக் குபநயனாதிய சடங்கு
முந்துநான்முறை முடித்தபின்முதுமறை பயிற்றிச்
சந்தமன்றனு மாற்றுவித்தனன்றம ருவக்க. (௪)

ஏகபுத்திர னாதலாலிடைவிடா தவன்பால்
மோகமுற்றனன் கைவிடான்முழுமறைப் பொருளு
மாகமப்பொரு ளுந்தெரித்ததன்வழி யுய்த்தான்
பாகமுற்றதன் றந்தைசொற்படிபடர் புதல்வன். (௫)

வஞ்சகக்கொடுங் கள்வர்கணேயத்தின் மயங்கி
விஞ்சுவேசையின் மையலிற்பட்டனன் விழைந்து
மிஞ்சுகள்ளுணல் களவுபொய்வெளிப்படா தியற்ற
வஞ்சுமாறலை யுணர்ந்தனன்றுதையுள் ளழிந்தான். (௬)

அழிந்தமைந்தனைத் தந்தைகூயரியநங் குலத்திற்
கிழிந்தசெய்தனை யென்னிதென்றின்மொழி பலவு
மொழிந்துமற்றுள முதியவர்தங்களைக் கொண்டு
கழிந்திடாவகை கூறியுங்கேட்டிலன் கவன்றான். (௭)

பின்னரூரவர் தன்மலோபப்பெயர் பேசி
மன்னியங்குறு தகற்றினர்மற்றுமோ ரூரிற்
றுன்னிவேசிபர் துணிமுதற்கவர்ந்தனன் சூழ்வுற்
றன்னிலைக்கணும் பொருந்துறுதடித்தன ரகன்றான். (அ)

சென்றொளித்தன னங்கொருசேரியிற் றிரிந்து
பொன்றிறைச்சியும் வேரியுமுண்டொரு புலைச்சி
தன்றுணைத்தனந் தழுவினன் கண்டனர் புலைய
ரன்றுதன்மலோ பனைத்தடிந்தழலிடை யிட்டார். (௯)

அந்தணர்க்குறு கருமங்களாற்றுறு வதனால்
வெந்தழற்படு தன்மலோபனும்*வியந் தரமா
யுந்திமேலெழீஇ யொருவருந்தாபமுற் றுழன்று
விந்தமுற்றவெவ் வனத்தினிற்றிரிந்தனன் வெருவி. (௰)

இலகுமவ்வனத் தெங்கணுந்திரிதரு தீய
வலகைநான்கினோ டைந்தெனச்சேர்ந்துதந் துன்பம்
பலவுமொன்றினுக் கொன்றுசொல்பரிசுகண் டழுது
புலம்பலென்றுக ணீர்தரப்புலம்புறீஇ வதியும். (௰௧)

அன்னகாலையி லரியகாளீசனைக் காண்பான்
பன்னுமாதவக் கவுதமமுனியங்குப் படர்வான்
றுன்னுபேய்களின் றுயரமெலாநனி நோக்கி
யென்னைநீரிவண் வருந்துதலெனச்சொலும் பேய்கள். (௰௨)

ஐயகேட்டியா னரியபாகின்மதி நகரின்
றய்யவேதியன் மகனெனத்தோன்றியோர் புலைச்சி
மெய்யுறப்புணர்ந் தின்புறீஇவிளிந்துபே யானே
னுய்யுமாறறி யேனெனவொன்றுரைத் ததுவே. (௰௩)

தலத்தின்முந்துபாஞ் சாலதேயத்தினி லரசர்
குலத்தில்வந்தனன் றன்மதனெனப்பெயர் கொண்டேன்
நலத்தவந்தணர் பொருளெலாங்கவர்ந்தன னசித்தே
னலத்தலுற்றபே யாயினெனென்றதொன் றம்ம. (௰௪)

கலிங்கதேயத்திற் சூடசிகாமணி யெனும்பேர்
மலிந்தவைசியன் மகனெனத்தோன்றினன் மறையோர்
நலந்தரும்பொருள் வஞ்சித்துக்கவர்ந்துட னலிந்தே
னலந்துவன்†மய லாயினேனென்றதோ ரலகை. (௰௫)

* வியந்தரம் - பேய். † மயல் - பேய்.

மற்றிரண்டுபேய் மாமலையாளமா நாட்டி
லுற்றருத்திர சோதரியொடுமறை யோர்கள்
பெற்றபெண்ணொடும் புணர்ந்தனம்புலியடித் திறந்து
தெற்றெனக்கழு தாயினந்திரிந்தன மென்ற. (௰௯)

என்றபேய்களி னிரங்குறுமொழியெலாங் கேட்டு
நின்றுகௌதமன் கருணையானீவிரஞ் சற்க
வொன்றுமுங்களை யுறுதுயர்*மறைமொழி யொழிப்போந்
துன்றியென்னுடன் வருகெனவுரைத்தனன் றொடர்ந்த. (௰௭)

அலகையின்வர வருந்தவத்தவனுமுன் சென்று
நிலையெரிந்தரு ணின்மலன்றிருவரு ணினைந்து
மலர்தகர்தமா வனத்திலுற்றனன் மகிழ்ந்து
பொலியுருத்திர தீர்த்தத்தைக்கண்டனன் புகழ்வான். (௰௮)

ஈருமூன்றினைத் துடைவையையெரிப்பதோர் தாவ
நேருமன்பமாய் நமற்குநீர்நிறைதரு மெழிலி
யாருமூழ்குநர்க் கயிலையிலேற்றிடு விமானம்
பாரொரைம்புகழ் புண்ணியமுறைதரும் பாழி. (௰௯)

இங்குயார்கழித் திங்களாதிரையின்பூ ரணையிற்
கங்கையாதிய நதிகளுமூழ்கியே கழுவும்
பங்கவல்வினை யாதலிற்பகருமத் திதியிற்
றங்கியாடுநர் கயிலைவான்பதமுறல் சரதம். (௨௰)

அன்பொடிங்குடைந் தித்தடக்கரையினி லமர்ந்து
தென்பெருங்குலப் பிதிரரைநினைந்துறு திலத்தான்
முன்புதர்ப்பண மாதியசெய்திடின் மூழ்கும்
வன்பெருங்கொடு நரகநீத்தேறுவர் வானம். (௨௧)

மன்னுநீர்குடைந் தெங்கள்காளீசனை வாழ்த்தி
யன்னமாதிய மறையவர்க்கருத்திடி லவர்கள்
பன்னுமும்மையுமும் வானமும்பணிந்திட மகிழ்ந்து
தன்னிகர்த்தவான் கயிலையைச்சார்ந்தினி திருப்பார். (௨௨)

உன்னினுந்தரு மொழிவாறுதிருவுநன் மகவும்
பின்னுமாயுளும் பெரிதளித்திடுமெனி லென்னே
யன்னுமாறுள தென்பெருந்தவத்தினாற் பரவ
வின்னிலந்தனிற் கண்டிடப்பெற்றன னிதனை, (௨௩)

---

மறைமொழி - சாபம்.

என்றுபோற்றின னங்குறைமறையவர் யாரு
நன்றுகேட்டுள மகிழ்தரநவில்கவு தமன்று
னன்றுபூரணை மார்கழித்திங்களா தலினாற்
றன்றுமூழ்கினன் றாயகாளீசனைத் துதித்தான். (௨௪)

பின்னரத்தடங் கரையமர்பேய்களின் மீது
மன்னுபுண்ணிய நீரினைவாரியங் கிறைத்தா
னன்னபேய்களவ் வுருவகன் றமர்விமா னத்தின்
மின்னெனப்பொலிந் தரியவான் கயிலைமே வியவால். (௨௫)

தருந்தவத்தினர் சாற்றுடன்மறையவர் யாரும்
புகழ்ந்துபோற்றினர் புண்ணியதீர்த்தமா மிதற்குச்
சகந்தனிற்றுணை யில்லையென்றுரைத்தனர் தாழ்ந்து
மிருந்தவன்பொடு மெங்கள்காளீசனை வியந்தார். (௨௬)

பேய்கள் சாபநீங்கியபடல முற்றிற்று.

ஆ செய்யுள் ௯௱௧.

---

## கங்கைபாவந்தீர்ந்தபடலம்.

திங்கள்மௌலிதன் றீர்த்தத்தினம் பேய்களின்
பொங்குசாபம் புலர்ந்ததமை சொற்றனம்
முங்கிமூழ்கினர் முற்பவம் பாற்றிடுங்
கங்கைபாவங் கரைந்ததுங் கூறுவாம். (௧)

வேறு.

ஏத்துமாவயி ராவதக், கேத்திரத்துள மறையவர்
தூத்தனிச்சிவ கங்கைநற், றீர்த்தமுற்றுட னாடினர். (௨)

இருந்தகொளகமர் முன்புவந், தருந்தவாவென வேத்திய
திருந்துசேவடி தாழ்ந்தனர், பொருந்துமாறிவை புகலுவார். (௩)

நேரினின்றபல் பேய்கண்மே, னீரைவாரி யிறைத்துவா
னாருருப்படி செய்ததை, காரின்மின்னின் விளங்கினார். (௪)

எவரின்னவ ரெந்தவூர், தாவருந்துயர் வந்ததென்
மேவருப்படி கூறென, வேவவருந்தவ னுரைசெய்வான். (௫)

துய்யநீர்த்துறை சேர்தலிற், றையிலென்மதி தழுவுநா
ளுய்யுமாறவ னுடிவான், செய்யதாரியி னெய்தினேன். (௬)

மேவுயா துயர் கண்டன, னோவுமாறு புரிந்தன
னாவபேய்கள்செய் பாவமு, நாவதாற்சொல லாவதோ. (௭)

மண்ணுருத்திர தீர்த்தமார், புண்ணியப்புன லெய்தினார்
நண்ணுபோயுரு நீங்கினா, ரெண்ணுகைலையி லெய்தினார். (௮)

என்றுமாமுனி கூறலு, நன்றுமாமறை யோர்மகிழ்ந்
தின்றுருத்திர தீர்த்தமென், றொன்றுபேர்வர லானொடும். (௯)

துய்யமான்மியந் தன்னையு, மையநீங்க வெமக்குரை
செய்யவென்றலுந் தீதிலா, மெய்யமாமுனி விள்ளுவான். (௰)

முன்றுலங்குகா ளீசனார், துன்மிடைஞ்சடை நீரினா
லன்றுலர்ந்திடு மீன்களை, யொன்றுருத்திர ராக்கினார். (௰௧)

ஆதலாற்சிவ கங்கையு, மோதுருத்திர தீர்த்தமு
மேதுவாகுமீ சானியம், போதலானுநா மம்பெறும். (௰௨)

என்னதீர்த்தம தாடினு, மின்னதீர்த்தமுள் ளெண்ணிலிந்
நன்னர்நீரினி லாடுவார், மன்னுபேறுறு வார்களே. (௰௩)

தொடுத்தவிப்புனல் மூழ்குவா, னெடுத்துமுன்றடி வைக்கினு
மடுத்துமூழ்கின ராவரே, யடுத்ததீவினை கழலுமே. (௰௪)

நாடுசோமவா ரத்தினி, லாடினாறுபத் தாறுறுங்
கோடிநீரினு மாடுநர், கூடுபேற்றினைக் கொள்வரால். (௰௫)

முன்னினும்பரி சிக்கினு, மன்னிமூழ்கின ராகுவா
ரின்னுமிப்புனன் மான்மியம், பன்னுவாமெனக் கூறுவான். (௰௬)

கங்கையாதிய நதியெலாந், தங்கண்மூழ்கினர் பாவமா
ரங்கமுற்ற வழுக்கொடும், பங்கயன்பத முற்றனா. (௰௭)

வேதனைத்தொழு தாங்கவர், பூதலத்துள மானிட
ரோதுபத்தியி னெங்கள்பான், மோதிடத்தின மூழ்கலால். (௰௮)

ஆங்குமற்றவர் தீவினை, யாங்கள்பெற்றன மாதலாற்
றாங்குதற்கரி தாமிவை, நீங்குதற்கருள் செய்கவே. (௰௯)

எனவுரைத்தவர் நிற்றலும், வனசமாமலர்ப் புங்கவ
னினையதீவினை நீங்கிட, வெனதுவாசகங் கேண்மினோ. (௨௰)

பாரிலோடிவை கைக்கெதிர், சேரவேவட திக்குறு
நேரில்காளி புரத்துள, தோருருத்திர தீர்த்தமே. (௨௧)

மற்றவண்செலு மின்கணீர், பற்றுவின்மதி யாதிரை
யுற்றபூரணை நாளினிற், பெற்றவன்பொடு மூழ்குமின். (௨௨)

கள்ளவல்வினை போமெனீர், வெள்ளைமெய்யின ராகுவீ
ருள்ளவன்பொடு நாடியே, தள்ளருந்தல மேகலாம். (௨௩)

என்றவாசகங் கேட்டனும், துன்றுவாணியின் கொண்கனை
நன்றுதாழ்ந்துடன் மீண்டனர், நன்றுமேவின ரவனியே. (௨௪)

மன்னுசோதி வனத்தினிற், சொன்னநாளதைச் சூழ்ந்தன
ருன்னியாடின ரன்பொடு, பன்னுபாவமும் பாற்றினர். (௨௫)

அங்குருத்திர கங்கையின், பொங்குமான்மியம் போற்றினர்
கங்கையாதிய நதிகளுந், தங்கடங்கடேஞ் சார்ந்தனர். (௨௬)

அந்தநாள்வரு டந்தொறும், வந்துமாநதி யாவையு
முந்துருத்திர தீர்த்தநீ, ருந்திமூழ்கி யுவக்குமால். (௨௭)

அன்னகாரணத் தாலதிற், றுன்னுவின்மதி யீசனுண்
மன்னுபூரணை தன்னிலே, யுன்னிமூழ்குந ருய்குவார். (௨௮)

இந்தவாறுரை செய்தனன், கந்தமோவுறு கவுதம
னந்தணாளர்க ளானவருஞ், சந்ததந்துதி செய்தனர். (௨௯)

கங்கைபாபந்தீர்த்தபடல முற்றிற்று.

ஆ. செய்யுள் ௩௭௰.

---

# கவுதமப் படலம்.

---

வானம்பெற்ற வரநதி யேமுத
லானவற்றி னகந்தீர் வறைந்தனங்
கானமுற்ற தவத்துக் கவுதமன்
ஞானம்பெற்ற நலக்கதை நாட்டுதும். (௧)

வேறு.

பண்ணியதவத்துக் கவுதமமுனிவன் பகர்தருமுருத்திர தீர்த்தப்
புண்ணியமகிமை யனைத்தையும்புகன்று போற்றிநித்தியக்கடன்முடித்
தண்ணியவிடைமே லெழிற்சிவகாமி தன்னொடுங்கனகசபேசன் [துத்
மண்ணியவீதி வலம்வருங்காட்சி மகிழ்வுறக்கண்டனன்றுதித்தான். (௨)

மறுகிடைநோக்கி யெங்கள்காளீச வள்ளறன்பன் மணிக்குயிற்றிச், செறிகதிர்விரிக்கும் விமானமும்போற்றித் திகழ்தளியுட்புகுந்தொரு மும், முறைவலம்வந்தை முறைதொழுதெழுந்து முன்னியெண்சுலோகத்திற் றுதிந்தான், கறைகெழுமிடற்றெங் கண்ணுதற்பெருமான் கருணையிற்றோன்றி நின்றனனால். (௪)

இருகணீர்வாரத் தழுதழுத்தாற்று மிருந்தவமுனிவனைநோக்கிப்
பெருகுநின்றுதியா மகிழ்ந்தனமிங்கு பெறுகவேண்டியவெலாமென்ன
பொருவில்காளீச சச்சிதாநந்த பூரணநின்னருளதனாற் [ப்
கருவொழித்திடுகை வல்லியபதமே கருதுவதெளியனென்றிசைத்தான்.

பிரணவப்பொருளாம் பரமனுண்மகிழ்ந்து பெருந்தவகேட்டியென் றுரைக்கு, பரியயற்கரிய வெனதுருவண்ட மனைத்துமாமடியர்கண்டன் பிற், பரவுதற்கெளிதாய்த் தலந்தொறுமிலிங்கப் படிவத்தினின்றருள் கின்றேன், றருவுபேரறிவிற் றுறவியரென்னைச் சுவசொரூபத்தினிற் காண்பார். (௫)

திகழ்திருவாரூ ராணைக்காவருணை தில்லைநாளத்திறற்காசி
நகுதருமூலம் வளர்சுவாதிட்டா னந்தனிப்பூரகம்போற்ற
வகமலர்துன்ற நாகதம்விசுத்தி யாஞ்ஞையாமிம்முறையறிந்து [ல்.
தநவெனத்தலங்க டொறுந்தரிசித்துத் தாண்டிடிற்கயிலைகண்ணுறுமா
காணுறுகயிலை பிரமரந்திரமாங் கடந்திடிலாலவாயாகுந்
நோணுறுதுவாத சாந்தமற்றதன்மேற் சூக்குமஞ்சோதிமாவனமாம்
பேணுறுமிதிலெக் காலமுமுறைவேன் பூரணசோதியேவடிவாய்க்
கோணுறுபிரள யத்துமிங்குதான் குலைவுறாதிருப்பதென்றறிவாய். ()

ஒன்றுமாய்ப்பலவு மாகியெங்கணுமா யொளிருமெய்ப்போதவின்பமுமா
நின்றசூக்குமமாய் நிரஞ்சனமாகி நிலவுறுசோதியாயிமையோர் [ய்
துன்றுதற்கரிய தேவதேவனுமாய்ச் சொன்மனமிறந்தவான்பொருளா
யென்றுநான்மறைசொ லிருவாக்கா யென்றுமாயிருப்பவன்யானே. ()

பெருகுமாத்துமதத் துவமுணர்ந்தரிய பிரமதத்துவமுமோர்ந்தொல்லை
வருசுவாசுவங்களனைத்தையுமிகந்தோன் மனத்திலுட்சுத்தநித்தனுமாய்
பொருவிலைந்தொழிற்குங் காரணனாகிப் பூரணபுராணனுமாய் [ப்
மருவுறுமகத்தா யாரணங்கடந்த வான்பொருளாவதுநானே. (௯)

மண்ணலர்தீகால் விண்ணொடுமிரவி மதியியமானனென்றிவையா
மெண்ணுருவாகிச் சராசரமனைத்தி னிடையுறாதிருப்பவன்றானு
நண்ணுறுநானே யென்றுணர்பவரே நலிவுறுவினையெலாமகன்று
கண்ணுறுமென்னுட் கலப்பவராவார் காணுதியென்றிவையுரைத்து. ()

பின்னருமிவ்வா றிங்கெனையுணர்வோன் பேரின்பமுத்தனுமினியுன்
றன்னொருவரவைப் பல்லநாட்கருதித் தவத்தர்காத்திருப்பதனானீ
முன்னியதீர்த்த மாந்தனுக்கோடி மூழ்கிவந்திவ்வழிவதிக
வின்னுமோர்வரமிங் களிப்பனீயென்னை யேத்தியதோத்திரமினிதே. ()

அந்தனித்துதியைச் சோமவாரத்தி லன்பொடுசுத்தராயென்னைப் [பின்
பத்தியிற்றுதிப்போர்க்கெண்ணியவெல்லாம் பரிவொடுமளித்திடுவேன்
முத்தியுமளிப்பே னென்றுகாளீசன் மூலலிங்கத்தினுளொளித்தா
னித்தலுங்களித்தங் கிருந்தனனுவகை நிரம்பியகவுதமுனிவன். (௰௨)

சில்லநாட்செல்லப் பின்றனுக்கோடி தீர்த்தமுற்றாடியன்போடு
பல்லவான்புகழ்சே ரிராமலிங்கத்தைப் பருவதவர்த்தனிதன்னைச்
சொல்லியசேது மாதவன்றன்னைத் தொழுதுபின்மங்களேசுரனை
மல்லல்வான்பொழில்சூழுத்தரகோச மங்கையுட்கண்டனனேத்தி. ()

சன்னிதிநின்று துதித்திடும்போழ்து சாத்தியபூதிகண்டியனு
யன்னிலைக்கண்ணோ ரந்தணனடிக்க வங்குளமங்களேச்சுரன்றன்
மின்னசரீரி யாகியந்தணனை விளித்தினுமுப்பிறப்பொழிக்கிற்
றன்னிகர்முத்தி தருவனிச்சன்மந் தன்னிலேவண்டுமென் றனையேயல்.

எண்ணியசோதி வனத்தினைச்சேர்க வென்றனனொளித்தனனிறைவ [ன்
னண்ணியங்குறைந்தோர் யாவருங்கேட்டு நனிவியப்புற்றனர்நலங்கொ
புண்ணியமுனிவ னிவையெலாமுணர்ந்து புளகமுற்றவ்விடைநீங்கிச்
கண்ணியசோதி வனத்தினையுற்றுக் காளீசற்கண்டுளங்களித்தான். ()

அங்குளமுனிவ ரனைவருங்குழுமி யருந்தவக்கவுதமற்கண்டு
பொங்குறுமுவகை பூத்துமுன்வணங்கப் புனிதனுமுத்தரகோச
மங்கையுணிகழ்க் கண்டவையனைத்தும் வகுத்துரைத்தன்றுகாளீசன்
றங்கியங்கிருக்கும்படிதனக்குரைத்த தன்மையுநிகழ்த்தினனிருந்தான்.

இருந்தவக்காலை யுத்தரகோச மங்கையுளிருந்தவனுய
பொருந்துமைந்தெழுத்தையுச்சரித்தணிந்த பூதிகண்டிகைசடாமுடியுந்
திருந்தணிபூத்த சிவதந்தனெனும்பேர்ச் செழுமறையவனுமங்கெய்த
வருந்தவர்யாரு மெதிர்கொடுபூசித் தழைத்தனரதிசயமுற்றார். (௰௭)

வந்தவந்தணனு மம்முனியுரைத்த வண்ணமேநிகழ்ந்தவாறுரைப்பச்
சிந்தைகூர்ந்துவகை யொருவருக்கொருவர் தெரிந்திடக்கூறியுட்களித்
சந்ததங்காளீ சன்றனைநினைத்துத் தருமறையோனொடுமுனிவர் [தார்
முந்துகேதமனு மூலலிங்கத்து முளைத்தருள்சோதியுட்கலந்தார். (௰௮)

கவுதமப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௧௧௮.

# வெள்ளையானை சாபந்தீர்ந்தபடலம்.

தீதியற்றுபொய் தீர்ந்துயர் முத்திசேர்
கோதமன்கதை கூறினம் வானவெண்
போதகத்தினைப் பொத்திய தாயவெம்
பாதகந்தவிர் பண்பினிப் பாடுதும். (௧)

வேறு.

பொன்னக ரரசன்மேனாட் பொருந்துதன் குரவற்காணான்
மின்னுமீ ரிருகோட்டும்பன் மீமிசை யிவர்ந்துசென்று
மன்னெடுங் கயிலைமேவி வளர்மணி மிடற்றெம்மண்ணை
றன்னடி வணங்கியாசான் றனைக்கொடு மீள்வானாக. (௨)

அந்தவே லையில்வெள்ளைவேழ மண்ணல்சந் நதியினின்ற
சந்தமால் விடையைக்கிட்டித் தன்றுதிக் கையாற்பற்றி
நந்துமூப் புற்றதென்ன நகைத்ததைத் திடக்கண்டெம்மா
னிந்திரன் முதல்வானோர்க ளெவருங் காணக்கூறும். (௩)

இரண்டுறு கோட்டுமைமா வாகுதி யீரைஞ்ஞூறு
திரண்டுறு வருடமென்றான் சிந்துரஞ் சிந்தைநொந்து
முரண்டரு முகத்தினோடு முன்னறன் றன்னைப்போற்றச்
சரண்டரு மெந்தையானோன் றண்ணருள் புரிந்துநோக்கி. (௪)

ஆலவாய் நகர்க்குநேர தாம்வட கிழக்கிலுற்றுக்
காலமாம் பிரளயத்துங் கழிவறு சோதிக்கானஞ்
சீலமா முனிவர்போற்றுஞ் செழிப்புள தாங்குச்சென்று
மாலுற வீரைஞ்ஞூறு வருடஞ்சஞ் சரிப்பாயாக. (௫)

பின்னரவ் வனத்திற்காளி புரத்தினிற் பெரிதுநாமே
நின்னைமீட் டருள்வோமென்று நிகழ்த்தின னுகவன்றே
யன்னது புவியிற்கார்மா வாயது வானோர்கோனுந்
தன்னருட் குரவனோடு சார்ந்தனன் சுவர்க்கமன்னோ. (௬)

நிலந்தனில் வீழ்ந்துமைமா நிலைகலங் குற்றுவிந்தச்
சிலம்படைந் தொருவிச்செய்ய நிருமதா தீரத்துற்ற
நலங்கிளர் பொழிலிற்பன்னா ளலிவொடுஞ் சரித்துமேலாந்
தலங்களிற் றிரிந்துபோந்து சய்யவெற் படைந்ததம்மா. (௭)

அங்குள கரிணியாவு மருகுறீஇக் கரங்கணீட்டித்
தங்குழிப் புணர்த்தக்காமத் தலைப்படா திருத்தனோக்கிப்
பங்கமுற் றோடுஞ்சில்ல பரியொடு சூழுஞ்சில்ல
கங்குலி னிருண்டவேழங் களிப்புறு தாழையுன்னி. (௮)

இன்னண மெங்குஞ்சூழ்ந்தங் கிரும்பொழிற் சோதிக்கானந்
துன்னிவல் லரிவாய்ப்பல்லிற் றுதிக்கையை யுரிஞ்சிவேழந்
தன்னுடற் றினவுநீக்குந் தன்மையு மாணின்கன்று
மன்னு*புன் மடியிற்பாலுண் மகிமையு நோக்கிற்றம்ம. (௯)

மருமலர் பிலிற்றுந்தேறல் வரிச்சுரும் புண்டுபாடப்
பெருகுதேங் கனிகளுண்டு பிள்ளையங் கிளிகள்பேச
வருகுமாந் தளிர்களுண்டாங் கருங்குயில் கூவவான்போய்ப்
பொருநெடுங் கோட்டுமஞ்ஞை பொலிவினு முவகண்டன்றே. (௰)

அருந்தவ ரிருக்கைகாணூஉ வடிமேல வைத்திட்டங்க
ணிருந்தகார்க் கியரைநோக்க வீசனு ருய்ப்பவந்த
கருந்தடங் களிறீதென்னக் கருதினன் ஞானநோக்கால்
வருந்தகை யுணர்ந்தேன்சோதி வனமிது வாகுங்காண்டி. (௰௧)

கயிலையெம் பெருமான்மேனாட் கழறிய வண்ணமின்றுன்
செயலுறு சாபநீங்கு மென்றனன் செப்பச்சின்னு
டுயருறீஇப் பின்னர்வேழஞ் சோமசே னெழிற்காளீசன்
பயிலுறு பூசைசெய்வான் பரிவுறீஇ யெழுந்ததன்றே. (௰௨)

அண்ணலா லயத்திறைக்கு நேயத்தி லப்புவீழ்த்திநந்
தண்ணிய சிவகங்கைப்பே ரரும்புன லாடுவானங்
கெண்ணிய செல்லுங்காலை யிதனுளஞ் சோதித்தற்கெங்
கண்ணுதற் பெருமானந்நீர் கடிதினில் வற்றச்செய்தான். (௰௩)

கண்டது புனலிலாமை கருணையின் விளையாட்டென்றுட்
கொண்டது புவியைக்கோட்டிற் குத்தியங் கிடித்துத்தள்ள
விண்டது பாதலத்தின் விரைந்தெழு புனலின்மூழ்கித்
தொண்டர்தம் பெருமான்றன்னைத் தொழுதலுக் கெழுந்தவேலை. (௰௪)

ஒன்றிய வதன்கோட்டாற்போழ்ந் துளைற்றிய மடுவாறுதந்
துன்றுபா தாளநின்று சுடர்கெழு மணிப்பணங்கள்
குன்றலி லாதிசேட கூர்மங்க ளெழுந்துவந்து
நின்றன வந்தவாறென் னிகழ்ந்ததென் றதுமால்வேழம். (௰௫)

---

* புல் - புலி.

யாங்களிவ்வுலகமெல்லா மேந்திட வல்லேமென்று
தாங்கிய வகந்தைகொண்டோந் தாழ்ந்தனம் வலியிழந்தோ
மாங்கது பெறுவான்முக்க ணண்ணலை யடைந்துவேண்ட
வோங்கியநீலகண்ட மந்திர முபதேசித்து. (௰௬)

அளிவளர்சோதிக்கான மடைந்துநம் முன்னிருந்து
தெளிவளர் சிந்தையோடு சிந்திக்கின் வலியுண்டாமென்
றொளிவளரருளாற்கூற வுற்றன மென்றுகூறி
நளிகொளக் கங்கைமூழ்கி நயந்துசோ மேசற்றாழ்ந்து. (௰௭)

பல்லநாட் சிந்தித்தோர்நாட் பரவின துதித்துநின்ற
வெல்லையிற் சோமேசன்போந் திருப்வலி யளிக்கப்பெற்றங்
கொல்லையிற் சென்றேயிந்த வுலகத்தைத் தாங்கிநின்ற
மல்லல்வா ரணமும்பூசை மகிழ்வொடு புரியவோர்நாள். (௰௮)

காலையின் மூழ்கிநன்னீர் கரங்கொடு முகந்துகொண்டு
மூலமார் காளீசற்கு முறைகெழு சோமேசற்குஞ்
சாலவு மாட்டிவாச தளமலர் புனைந்துநோக்கிச்
சீலமா வாயினல்வாத் தியவொலி முழக்கிநின்று. (௰௯)

துதித்திடக் கருணைகூர்ந்து சோமேச னருட்கணோக்கக்
கதித்தநாற் கோட்டுமால்வெண் கயிலையின் விளங்கிநின்று
மதித்தெழு முவகைபூத்து வள்ளாலித் தடத்தினுக்கும்
பதிக்குமென் பேர்விளங்கப் பார்த்தரு ளென்றதன்றே. (௨௰)

அன்னவா றுகவென்றெம் மண்ணலு மறைந்தானாக
மன்னயி ராவதப்பேர் யானையு மகிழ்ச்சிபூத்த
தின்னகா ரணத்தாலானை மடுவென்று மிருப்பாதாலந்
தன்னினின் றெழுதலாற்பா தலகங்கை யென்றுமாமே. (௨௧)

அன்றியூழ் வினையினாலா நல்குர வனைத்துப்போக்கு
நன்றிகொ டீர்த்தமென்று நற்சிவ கங்கையென்றுந்
துன்றிய நாமமாகுந் துதிபெறு தலத்தினுக்கு
மென்றுமை ராவதப்பே ரெழினக ரென்பர்மாதோ. (௨௨)

வெள்ளையானை சாபந்தீர்த்தபடல முற்றிற்று.

ஆ செய்யுள் ௲௨௰.

# இந்திரன் சாபநீங்குபடலம்.

சோபமுற்றுத் துயர்கொள்வெள்ளானையின்
பாபமுற்றும் பயிந்ததைப்பாடினுங்
கோபமுற்ற குருவான்மகேந்திரன்
சாபமுற்றுத் தவிர்ந்ததுஞ்சாற்றுவாம். (௧)

வேறு.

முன்னொரு கற்பந்தன்னின் முதிர்வலிச் சம்பனென்பேர்
மன்னிய வசுரற்கொன்று மலிந்தபே ருவகைபூண்டு
துன்னுபே ரிகைமுழங்கச் சுரர்மலர் மாரிதூற்ற
மின்னென வரம்பையாட விளங்குகந் தருவர்பாட. (௨)

தும்புரு நாரதாதி சூழ்ந்துகட் டியங்கள்கூறப்
பம்புபாற் கடலின்மீதாம் பங்கயக் கண்ணனென்னக்
கிம்புரி நாற்கோட்டியானை மீமிசைக் கிளர்ந்துதோன்றி
யும்பர்கோ னிருக்கைபுக்கங் குயர்மணிப் பீடத்துற்று. (௩)

போர்க்களத் துதவியாற்றும் புலவர்கந் தருவராதி
யார்க்குமவ் வவர்கட்கேற்ற வினியசம் மானஞ்செய்தங்
கீர்க்குநல் லன்பினோடு மெழுந்துவேற் கருங்கட்செவ்வாய்க்
கார்க்குழ லிந்திராணி தன்னொடுங் களிப்புற்றானால். (௪)

தன்னவை யெய்திச்சிங்கா தனத்தில்வீற் றிருந்துசூழ்ந்து
மன்னுநங் குரவற்காணு வகையென்கொ லெங்குற்றானென்
னின்னுயிர் தன்னையெங்குக் காண்பலென் றினையுங்காலைப்
பன்னுநா ரதன்வந்துற்ற பரிசுகண் டவற்பணிந்தான். (௫)

முனிவநின் வரவானுய்ந் தேதமென் றுநன் முகமன்கூறி
யெனையுமோர் பொருளாவெண்ணி யெய்திய தென்கொலென்னத்
தனிவளர் கயிலைப்பெம்மான் சந்நிதி நிற்குங்காலை
யுனதருட் குருவைக்கண்டே னுறுதுயர் முகமுங்கண்டேன். (௬)

நின்னது வெற்றிகூறக் கேட்டன னின்னைக்காண்பான்
றுன்னினனென்றான்வேந்தன் றொழுதுமா முனிவவெங்கள்
பொன்னவன் றனக்கென்குற்றம் புரிந்தனன் வருத்தமென்னே
யன்னது புகலவேண்டு மென்றன னயர்ந்துநின்றான். (௭)

குருமொழி யுத்திகொண்டு கொற்றவே லசுரர்ச்செற்றோய்
வருமவர் தம்மையெல்லா மதித்தனை யவனைத்தக்க
வருமையின் மதித்தாயில்லை யாதலின் வருத்தமுற்று
மருவிவே றிடத்திலுற்றான் மற்றது நின்பாற்குற்றம். (அ)

குரவனே யீசன்மேனி கொண்டவ னாதலாலே
குரவனுட் களிக்கச்செய்யிற் குறைவறு செல்வமுண்டாங்
குரவனுள் வெறுப்பானாகிற் குலைந்திடுஞ் செல்வமெல்லாங்
குரவனைத் தெய்வமென்பார் தமக்கொரு குறையின்றென்பார். (௯)

ஆதலி னினைசென்று னாரியன் றன்னைக்கொள்கென்
றோதினன் முனிவன்சென்றா னும்பர்கோ னுந்தோட்டம்பான்
மீதிவர்ந் துயர்வான்கோட்டு வெள்ளிவெண் கயிலையென்னும்
பாதவங் கண்டானக்கைப் பாதவ நின்றிழிந்தான். (௰)

நந்தியெம் பெருமான்றன்னா னல்கிய விடைபெற்றுள்ளே
முந்தினன் கேசமில்லா முண்டிதர் மிகப்பருத்த
தொந்தியர் நெடியர்குள்ளர் தூலர்மெல் லியருமான
பந்தியர் பூதிகண்டி பரித்துறை கணங்கள்கண்டான். (௰௧)

தடுத்திடு கணங்களாலே தானவ மறிக்கப்பட்டங்
கெடுத்தடி வைக்குந்தோறு மெண்ணுவா னம்மூர்தன்னில்
கொடுத்திடு தருக்கள்சிந்தா மணிக்குவை குறையாவின்ப
மடுத்தவின் னமுதந்தேனு வருநிதி முதலவுள்ள. (௰௨)

பொன்னகர்க் கிணையொன்றில்லை பொருந்தவிங் குள்ளவெல்லா
மன்னிய பூதிகண்டி மலிதரு கணங்களல்லா
லன்னிய மிலையெவ்வண்ண மரசனவ் வண்ணந்தானே
தன்னுறு முலகமென்னச் சூழ்ந்திகழ்ந் தப்பாலுற்று. (௰௩)

கண்ணுநற் பெருமான்றன்னைக் கண்டனன் றாழ்ந்துநிற்க
வண்ணலு மவனைநோக்கி யடைந்தனை யகந்தையுற்று
நண்ணிய குரவன்றன்னை நாடிலை யவமதித்தா
யெண்ணிநங் கணங்கடம்மை யிகழ்ந்தனை யாததாலே. (௰௪)

களித்துவண் டிமிருந்தாரோய் காசினி மனித்தனாகென்
றளித்தனன் சாபமுள்ள மஞ்சினன் பதறிவேந்த
னொளித்திடுங் குரவற்காண்பா னுங்குவந் திதனைப்பெற்றுக்
குளிக்கப்போய்ச் சேறுபூசிக் கொண்டவன் றன்னையொத்தேன். (௰௫)

நாரத முனிவன்கூறு நல்லுரை பலித்ததென்னப்
பாரிடைப் பணியின்வீழ்ந்து பனிமலர்க் கண்ணீர்வார
நேருற வெழுந்துசென்னி நெடுங்கரங் கூப்பிநின்று
நீரொடு கொன்றைவேய்ந்த நிமலனைத் துதிக்கலுற்றான். (௰௬)

கண்ணகன் ஞாலங்காக்குங் கருணையங் கடலேயன்று
விண்ணிடை யெழுந்தநீல விடமுண்ட விமலவுள்ளக்
கண்ணிடை யகலாவன்பிற் கரையுமார்க் கண்டன்காண
மண்ணிடைக் காலன்வீழ மாய்த்தநின் மலர்த்தாள்போற்றி. (௰௭)

பொன்னணி நிறத்தினானும் போதகப் புத்தேடானு
மின்னமும் மறிதற்கெட்டா வெந்தைநின் றனையேநம்பு
மென்னரும் பிழைபொறுத்திங் கினிதருள் புரிதல்வேண்டு
நின்னலாற் கதிமற்றில்லை நிரஞ்சன போற்றிபோற்றி. (௰௮)

இன்னணம் போற்றவெம்மா னினிதுள மகிழ்ந்துபோநங்
குன்னுளத் துறுவவேண்டு கென்றலு மும்பர்கோமா
னென்னது சாபநீக்கி யென்றுல குருவைக்காண
முன்னுற வருள்கவென்றான் முடிமிசைக்கரங்கள்கூப்பி. (௰௯)

அண்ணாலு மருட்கணோக்கி யவனியிற் பாண்டிநாட்டி
லெண்ணுறு மருத்துவானென் றிடுபெய ரரசனாகி
நண்ணிய நமதுகாளி புரந்தினி னம்மைப்போற்றி
மண்ணிய கோபுரங்கண் மண்டப முதலுண்டாக்கி. (௨௰)

திருவிழாப் பலவுஞ்செய்து செம்மணிப் பூணுஞ்சாத்தி
மருவுபூ சனைகளொன்றும் வழாதுற நடப்பித்தென்றும்
வருமறைக் குலமுன்னான்கு குலத்தவர் தமையுங்காத்துப்
பொருவிலா துண்டுவாழ்ந்து புகுகநின் சுவர்க்கலோகம். (௨௧)

செல்லுதி யென்றான்பின்னர்த் தேவர்கோன் றானும்பாரி
னல்லசீர் திகழும்பாண்டி நாட்டினி லரசனாகி
வல்லமை சீர்த்திசான்ற மருத்துவா னென்னும்பேரோ
டல்லலற் றரசநீதி யறம்வழு வாமலாண்டான். (௨௨)

அன்னவ னரியசோதி வனத்தினை யடைந்தானோர்கா
முன்னைய நிகழ்ச்சியெல்லா முளைத்தன மனத்தினூடு
துன்னிய தீர்த்தமூழ்கிச் சோமேசன் காளீசன்று
ளுன்னிய போற்றிப்பின்ன ருய்யான முழுதுஞ்சூழ்ந்தான். (௨௩)

காடெலா மழித்திட்டெங்கள் காளீசன் முதலானோர்க்குக்
கேடரு விமானங்கர்ப்பக் கிரகமண் டபங்கள்பல்ல
நீடிய கோபுரங்கள் புயலொடு நிலவச்செய்வித்
தாடமா வணங்கள்பல்ல வீதிமுன் னனைத்துஞ்செய்தான். (உச)

மயன்றனாற் சோமாக்கந்தர் முதலவாய் வழங்கப்பெற்ற
நயமுறு விம்பம்யாவும் புரிவித்து நல்லோர்போற்றுஞ்
சயமுறு காஞ்சிவாழுஞ் சைவநூல் வல்லோர்வேத
நியமநன் னெறியராதி சைவரை நிரம்பக்கூவி. (உரு)

விதிமுறை தாபித்தாறு காலமும் விளங்குபூசை
மதிதரச் செய்வித்தெட்டு மாதிரங் களினுங்காளி
வதிதரத் தாபித்தின்னும் வயங்குறப் பலவுஞ்சூழ்ந்து
நிதிபல கோடிவீசி நிசிமணிப் பணிகள்செய்தான். (உசா)

கண்ணுதற் காளீசற்குங் கருதுறு சோமேசற்கு
மண்ணிய மேடமோடு விடைவரு மதியிலோர்ந்து
பண்ணியல் விழாக்கள்பல்ல பரிவொடு நடத்தியன்பி
னெண்ணிய வளப்பிலாத பணிவினை யாவுஞ்செய்தான். (உஎ)

ஆண்டொரா றுபதோர்ந்தா னங்கொரு காலைவைக
லீண்டுபுண் ணியநீராடி யீசனை வணங்கிப்போற்றிப்
பூண்டபே ரன்பினோடு புளகமுற் றிரந்து நின்றான்
காண்டகு மருளாற்றோன்றிக் காளீச னிசைந்துகூறும். (உஅ)

நின்றுதி மகிழ்ந்துகொண்டோஞ் சாபமு நீங்கிற்றின்னே
யுன்றனக் குறுவவேண்டிக் கொள்கென வுவகைபூத்து
வன்றிற லொளியிலங்கும் வச்சிர பாணியாகி
நின்றனை யென்றும்போற்று நினைவுளே னருள்கவென்றான். (உகூ)

சமைதொறு மிடபத்திங்கட் பூரணை தன்னிலென்னை
யமைவுறத் தொழுகவீறு னயிராவ தந்தான்மேற்கொண்
டிமையவ ருலகம்புக்கங் கின்புட னிருந்துவாழ்கென்
றெமையரு ளீசன்மூல விலிங்கத்து ளொளித்தானன்றே. (௩0)

அம்மொழி செவிபுட்கொள்ளா வாயிரங் கண்ணன்றானு
மும்மத நாற்கோட்டியானை மொய்ம்புற விவர்ந்துதேவர்
செம்மலர் மாரிதூவத் திவ்விய னகரம்புக்கு
விம்மிமைக் குருவினீழல் வீற்றிருந் தரசுசெய்தான். (௩க)

இந்திரன் சாபநீங்குபடல முற்றிற்று.

ஆ செய்யுள் ௬௬௧.

---

# கண்ணுவப்படலம்.

ஈசனார்மலை யின்கட்பிழைத்திடு
வாசவன்பழி மாற்றமறைந்தனம்
பாசமுற்றவும் பாற்றியகண்ணுவ
மாசின்மாமுனி வண்மையுமோதுதும். (௧)

தாவுவார்திரைத் தாரணிமீதினிற்
காவுலாம்வளக் கன்னடதேயத்திற்
பாவுலாமறைப் பண்ணவர்சூழ்தரு
மாவராக புரத்தினில்வாழ்பவன். (௨)

கூறுகாசிப கோத்திரத்துற்பவ
னாறுகன்மமு மாசறவாற்றுவோ
னீறுகண்டிகை நீங்கருமேனியான்
வேறுகாம விராகநற்சிந்தையான். (௩)

இன்னுமந்தணர் செய்தொழில்யாவையுந்
துன்னுசீல துரந்தரன்பல்கலை
பன்னுவித்தகன் பற்றறுமெய்த்தவன்
மன்னுகண்ணுவ மாதவப்பேருளான். (௪)

அனையகண்ணுவ னாற்றுந்தவத்தினாற்
றனயனாஞ்சு சரிதன் றனைப்பெற்றான்
புனையுமாமறை போற்றும்பொருள்களு
மெனையநூல்களு மேற்றிடக்கற்பித்தான். (௫)

வதுவையாற்றியில் வாழ்வுறவைத்தனன்
சுதனுந்தந்தைதன் சொல்வழிநின்றுளா
னிதமுணர்ந்தவன் றன்னையிலத்திடை
நிதமும்வைக நிதீஇப்புறமேகினான். (௬)

போமவன்முன் பொறிவழிப்பாசண்டர்
தாமமர்ந்த சரியையைச்சார்ந்தனன்
வேமரும்பிணிப் பட்டுவிழுந்தனன்
றாமருந்துக ளுண்டுந்தொலைத்திலன். (௭)

பாதகம்பல செய்தனன்பாவியேன்
வேதமெய்ந்நெறி விட்டனன்பொய்மிகு
தீதுளார்தமைச் சேர்ந்தனனென்றென்று
வேதனைப்பட ருற்றுவெதும்பியே. (௮)

சிறுவன்பாலுறீஇத் தீர்வதின்றிப்பிணி
யிறுதியுற்ற தினிப்பிழையேனெனைச்
செறியுந்தீய நரகிடைச்சேர்க்கினு
முறுதியோர்கழு வாய்செயவுன்னினேன். (௯)

மன்னுசேதுவிற் சென்றுமனத்தினி
லென்னையுன்னிக் குடைந்திவணெய்தெனச்
ரென்னிதாழ்ந்துடன் சென்றனன்மைந்தனு
முன்னுநாடு நகருமொரீஇனான். (௰)

வளருஞ்சோதி வனத்தினிலுற்றனன்
கிளருமேன்மையுங் கீர்த்தியுங்கெட்டன
னளவில்மான்மியத் தானமடுவினைக்
களவில்சிந்தையன் கண்டனனாயிடை. (௰௧)

விடியுங்காலை விரும்பிவிதிப்படி
குடைகுவோமெனக் கூடிக்குளிர்ந்தோர்
படியினன்று படுத்துத்துயின்றன
னடையிளைத்து நலிதருபண்பினான். (௰௨)

அந்தவேலை யயர்ந்தகனவினிற்
றந்தைவந்தனன் றன்பிணியாவும்போய்
முந்தைநல்லுருப் பெற்றுமுதிர்ந்தெழிற்
சந்தமாடை தரித்தெதிர்நின்றனன். (௰௩)

ஐயநின்பிணி யாவுமொழிந்தவா
வெய்புமெவ்வுழி நின்றிவணெய்தினை
மையினற்றவ வென்றுவணங்கவுஞ்
செய்யசீலகே ளென்றிவைசெப்புவான். (௰௪)

நீயகன்றபி னேர்ந்தனர்காலர்க
ளையதண்டனை யாவையுஞ்செய்தனை
மேயகும்பியில் வீழ்த்திடப்போம்பொழு
தாயவென்முன மந்தகன்வந்தனன். (௰௫)

இன்னவன்றன் றநயனல்லன்பொடு
சொன்னசோதி வனத்திடைப்புண்ணிய
மன்னுமானை மடுவினின்மூழ்கிட
வுன்னியங்க ணுறங்கினனாதலால். (௰௬)

விடுகவென்றன னென்னைவிளித்தன
னுடனுறும்பிணி யாவுமொழிந்தநின்
னிடமதிற்சென் றிருந்தினிவாழ்கென
விடைகொடுத்திட மீண்டனனென்றனன். (௰௭)

என்றுரைத்தன னேகவிழித்தன
னன்றிருந்தவர் யார்க்குமறைந்தனன்
மன்றயானை மடுவினின்மூழ்கினன்
றன்றுமானந்த வெள்ளந்துளைந்தனன். (௰௮)

தன்னுழிச்செலூஉத் தந்தையைக்கண்டவன்
மன்னுமக்கன விற்கண்டவண்ணமே
யன்னருற்றதை நாடினனொடொறுந்
துன்னுமானை மடுவைத்துதித்தனன். (௰௯)

ஆதலாலிந்த வானைமடுவிலோர்
போதுமூழ்கினு மேழ்கடற்பூம்புனன்
மோதவாடின ராகுவர்முன்னிலுந்
தீதில்கங்கை திளைத்தவராவரே. (௨௰)

கஜாரண்யப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் தொகை.

---

# தேவசேனப்படலம்.

மேவுகண்ணுவ வேதியன்மெய்யுறும்
பாவநோய்த்துயர் பாறியதோதினை
மாவவென்ன வமும்பழியோவிய
தேவசேனன் சிறப்புந்தெரிக்குதும். (௧)

## வேறு.

சீருலாவு சிங்களப், பேருலாவு தேயநள்
ளேருலாம்வி சாலையா, நீருலாவு மூருளான். (உ)

தேவசேன னென்றொரு, காவலன் களிப்புளான்
மேவுநீதி நெறிவழா, தாவசெய்து வாழ்பவன். (௩)

தருமசீலன் மறையவ, ரருமையாய்ந்து தொழுபவன்
கருவிமேவி வருபகை, வெருவமாட்டி வீழ்ப்பவன். (௪)

பூதிகண்டி புனைபவ, ளுதனன்பு நணுகுவோன்
வேதநூலின் பொருளுணர், தீதிலாத சிந்தையான். (௫)

கானில்வேட்ட மாடுவான், றுனினொந்தோர் காலையில்
யானைமீ திவர்ந்தனன், சேனையோடு சென்றனன். (௬)

சிங்கமோடு பன்றியை, யங்கமார வெட்டின
னெங்குநாடி யெய்த்தொரு, துங்கமான் றொடர்ந்தனன். (௭)

வெருண்டமானு மோடியோ, ரிருண்டசோலை யுற்றிடுந்
தெருண்டமா தவன்புடை, மருண்டுவந் தொளித்ததே. (௮)

திருந்துமானி னுரிவைபோர்த், திருந்தவஞ்செய் வோன்றனைத்
திரிந்துவந்து கண்டவ, னிரிந்தமானென் றெண்ணினன். (௯)

சிலையில்வாளி சேர்த்தியே, நிலையினின்றங் கெய்தனன்
கலைவலானு மாண்டனன், குலையவஞ்சி நின்றனன். (௰)

முனிவனில்ல முன்னின, டனிமனந் தளர்ந்தன
ளெனதுகொண்கற் கொன்றனை, யுனதுவாழ்வு பொன்றுக. (௰௧)

என்றுசாப மிட்டன, ணின்றதீய நிருபனை
யொன்றுபாத கந்தொடர்ந், தென்றுமுள்ள மாழ்கினன். (௰௨)

சேரவந்த சேனைக, ளாரநொந்து போயின
நேரலார்க ளோர்ந்தவன், பாரெலாங் கவர்ந்தனர். (௰௩)

பிரமகத்தி பற்றியே, யரசனைத் துரத்தலும்
வெருவிநித்த னித்தலும், பொருமலுற்ற லைந்தனன். (௰௪)

முன்னைநல் வினைப்பயன், பின்னருந்த முன்னடந்
துன்னுசோதி மாவனந், தன்னைவந் தடைந்தனன். (௰௫)

துன்றுமானை மடிவினை, யொன்றவொன்ற வொன்றியே
நின்றபாத கங்கழன், றன்றுதீர வண்ணினன். (௰௬)

மண்டியானை மடுவினைக், கண்டவேந்து தாபமேற்
கொண்டுவீழ்ந்து முழ்கினான், விண்டொழிந்த வினைகளே. (௰௭)

நண்ணிநின்ற வனைவரு, மெண்ணியுள் வியந்தனர்
மண்ணுமானை மடுவினற், புண்ணியம் புகழ்ந்தனர். (௰௮)

மன்னனுள் வியந்தெழூஉத், தன்னுரங்கா ளீசனை
யுன்னிமுன் றுதித்தனன், முன்னவன் முனைத்தனன். (௰௯)

நீதிவேந்த நிற்றெறும், பாதகந் தொலைந்தது
தீதுசேர்நி னுன்னலர், கோதுநீஇக் குலைந்தனர். (௨௰)

நேருநின்ற னண்பரே, யீரிரண்டு நாளினிற்
சேருவார்க ளவருட, னூருறச்செல் கென்றனன். (௨௧)

அன்னவாசு கந்கொளா, மன்னனங் கிருந்தனன்
சொன்னநாளில் வந்தனர், நன்னலங்கொ ணண்பரே. (௨௨)

வந்தழைத்த நண்பரோ, டுந்துசேனை சூழ்வர
முந்துதேவ சேனனு, மந்தநாடு புக்கனன். (௨௩)

நிகரில்செல்வ மோடுநீஇப், பகர்பெரும் வளங்களாற்
றிகழ்தரும் விசாலையா, நகரில்வாழ்ந் திருந்தனன். (௨௪)

ஆகையாலிம் மடுவினி, லோகையோடு முழ்குவோர்
தோகைபாகன் வாழ்தரு, மாகைலாய மன்னுவார். (௨௫)

தேவசேனப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் ௩௪௩.

---

# மகாகாளேசப்படலம்.

கொற்றவேட்டங் கொளுந்தேவதாசனைப்
பற்றுமத்தி பறிந்ததைப்பாடினங்
கற்றசீர்த்திமா காளன்சரிதையுங்
குற்றமுற்றவுங் கூறிடக்கூறுதும். (௧)

வேறு.

கண்ணகன் ஞாலம்போற்றுங் கவின்றிகழ் மிமயவெற்பி
னண்ணிய வொருசார்வைகு நற்றவன் காசிபப்பேர்ப்
பண்ணவன் முனிவர்யாரும் பரவுறு மேலோன்மெய்ந்நூ
லெண்ணிய சீலன்பூதி கண்டிகை யிலங்குமெய்யன். (உ)

அன்னவன் றன்னையன்பி னருந்தவ முனிவர்சூழ்ந்து
நன்னிலை யுணர்ந்தோய்வேத நற்பொரு டெரிக்குகென்ன
முன்னருந் தவத்தான்மிக்க காசிப முனியுநன்றென்
றுன்னரு மறையந்தத்தி னுட்பொரு ளுரைக்கலுற்றான். (௩)

அத்தவ முனிவரோடு மயலிடத் திருந்தோனங்கள்
வித்தகப் பெருமான்சைவ கணங்களுண் மேலோன்வல்ல
சுத்தமா காளனென்னுந் தூயவ னொருவனந்த
முத்தருட் சிறந்தோனுகி மொழியுங்கா சிபனைநோக்கி. (௪)

அம்மொழி தனக்குக்கூறு மதுபொரு ளன்றென்றுங்கு
வெம்மையி னிராகரிக்க வெகுண்டமா முனிவேதாந்தச்
செம்மைசேர் மொழியையோர்ந்து தெரிந்துரை பகர்ந்தவென்பா
லிம்மொழி புகன்றதாலே யிக்கண மூங்கையாக. (௫)

என்றலு மாகாளன்று னின்சொலால் வணங்கிநிற்க
வன்றுமா முனியுஞ்சீற்ற மடங்கியுள் ளன்புபூத்தங்
கின்றுகா ளிரஞ்சென்றி யானைமா மடுவின்மூழ்கி
நின்றுகா ளீசன்றன்னைப் பூசிக்கி னீங்குமென்றான். (௬)

மாமுனி கூறுஞ்சோதி வனத்தினிற் போந்தியானை
மாமடு வதனுண்மூழ்கி வள்ளலைக் காலமாறுஞ்
சேமமார் பூசையாற்றிச் செய்தவம் புரியவோர்நாள்
காமரு காளீசன்றான் கருணையிற் றோன்றிநின்றான். (எ)

நின்றவ மகிழ்ந்தோமூக நீங்குக நிகமாந்தத்
தொன்றிய பொருள்களெல்லா முணர்கவென் றருளிப்புக்கா
னன்றுபல் கலைவல்லோனு யணிபல பொருந்தப்பாடிப்
பொன்றனில் காளீசன்றாட் புதுமலர் துதித்திட்டானல். (அ)

துதிக்குள மகிழ்ந்துபின்னுந் துகளறு விடையின்மீது
மதித்திடத் தோன்றிநின்று மகிழ்பட்ட பரணப்பேரைக்
கதித்திடப் பெறுவாயின்னுங் கருதிய வரங்கேளென்ன
விதிக்குமெம் பெருமான்முன்னர் மாகாளன் விளம்பலுற்றான். (௯)

என்பெரு மானிற்போற்று மென்பெயர் நின்றனக்கு
நின்பெருந் தலத்தினுக்கு நிறுவுதல் வேண்டுமென்று
னன்பிடை மூளைத்தோன்றனு மப்படி யாகவென்று
முன்பென மூலலிங்கத் தொளித்தனன் முக்கணெம்மான். (௰)

மாகாளன் கைலைமேவி மாகவி யாகிவாழ்ந்தான்
மாகாளன் வரம்பெற்றுள்ள மகிழ்ந்தரா டொடங்கியென்று
மாகாளேச் சுரனென்றெம்மான் றன்பெயர் வழங்குமவ்வூர்
மாகாள புரமென்றிம்பர் வழங்குறும் பெரிதுமாதோ. (௰௧)

மகாகாளேசப்படல முற்றிற்று.
ஆ செய்யுள் ௲௱௭.

---

# சோமநாதப்படலம்.

காளலிங்கமுன் கண்டுபூசித்தமா
காளனற்கதை கண்டதுரைத்தன
மீளவில்கய வெம்பிணியம்புலி
மீளவந்தனை மேவியதோதுவாம். (௧)

வேறு.

உமையுறு நிமித்தஞ்சோமே சப்பெயர்க் குரைத்தனேதபோ
லமையுறு சோமநாதப் பேர்க்குமிங் கறைதியென்னச்
சுமையுறு பூடன்கேட்பச் சுரந்தருண் முகமலர்ந்து
கமையுறு முனிவனந்தக் காரணந் தெரிக்கலுற்றான். (௨)

பிரசமா மலரோன்றுளின் பெருவிரற் றோன்றுந்தக்கன்
றரவரு மைம்பான்மாதர் தங்களுண் மூவொன்பானும்
வரமதி னிர்ப்புணர்ந்த மதியுரோ கணிப்பெண்மீது
விரகமுற் றேனையோரை விழைவுறா னிருக்குங்காலை. (௩)

அனையவர் தந்தைபாற்சென் றறிவுறத் திடனுஞ்சீறிக்
கனைவுறிஇ யல்லோற்கூவிக் கயரோகி யாகுகென்றான்
மனமிக வுழன்றவன்றாண் மலர்பணிந் திரக்கவன்னான்
சினமொடென் சாபநீக்கச் சிவனும்வல் லவனேவல்லன். (௪)

என்முன மிசைத்தமாற்றம் பொய்த்தனை யென்னையென்று
நின்முகம் பாரேனென்ன நிசாசரன் மனம்புழுங்கி
நன்முள ரிக்கணுன்மா னற்றவ முனிவர்பல்லோர்
முன்முகம் புலர்ந்துசென்று முறிந்திலை தக்கன்சாபம். (௫)

கருதிய தவத்தின்மேலோன் சுகோளமா முனிபாற்சென்று
பொருதுயர் கூறவன்னோன் புவியிலுத் தமமார்தான
மருமலர் பொதுளுஞ்சோதி வனமதிற் செல்வாயாகி
லொருவிமோ சனங்கிடைக்கு மென்றன னுளத்துட்கொண்டான். (௬)

மண்ணிடைச் சிறந்தசோதி வனத்தினை யடைந்துசோமன்
புண்ணிய தீர்த்தமாதி பொலிதரக் கண்டுவப்புற்
றண்ணிய காளீசன்முன் னுயவர் தமையுநோக்கி
யுண்ணிகழ் மகிழ்ச்சியோடு முடல்புள கித்துமாதோ. (௭)

சன்னிதிக் குணக்குமூன்று தனுக்கடைத் தூரந்தன்னிற்
றன்னது பெயரினுலோர் தடாகமுண் டாங்கியாங்கு
மன்னிய சுத்தநீரான் மருவுசோ மேசன்மூன்னோர்க்
குன்னிரா னஞ்செய்வித்தங் குறுவிதிப் படிபூசித்தான். (அ)

இன்னணம் பன்னாட்பூசை யியற்றிட வொருநாட்காலை
யன்னிலைத் தூலலிங்கத் தருளொடு மழகுவாய்ந்த
நன்னிதி யனையமேனி நகைமலர் முகத்தினோடு
முன்னவன் றோன்றியாலோன் முகத்தினை நோக்கிக்கூறும். (௯)

தக்கன்றன் சாபமெம்மாற் றகர்த்திடத் தக்கதன்று
மிக்கமற் றதற்குபாயம் விளம்பக்கே ளமரர்யார்க்கும்
பக்கமுன் னமுதமீவாய் பதினைந்து நாளின்மட்டு
முக்கவக் கலைகள்யாவு முடன்வளர் தரவளிப்பேம். (௰)

இன்னவா றளித்தலாலிங் கிமையவர் மகிழ்வாருள்ள
முன்னுட லமுதமூறி யொளிர்தர வளருந்தக்கன்
றன்னது சாபத்திற்குந் தாழ்விலை யுய்வாயாக
வென்னவு முய்ந்தேனுய்ந்தே னென்றவண் டிங்கள்கூறும். (௰க)

இன்றுதொட் டென்பேர்நிற்கு மியான்செயுந் தடத்தினுக்கு
நன்னுற வேண்டுமீது நல்கென நவிறலோடுங்
கொன்றைவே ணியனுமவ்வா றுகவென் றருளிப்புக்கான்
பொன்றிய வுடல்பூரித்துப் புதுமதி யாயினுனல். (௰உ)

ஒவ்வொரு கலையோர்நாளு மும்பருக் களித்தைம்மூன்று
செவ்விய கலைகணீங்கச் சேடித்த தொன்*றமாவி
லவ்வுட லுற்றதாக வதுபின்னு நிறையவாழ்வுற்
றெவ்வமின் மதியிருந்தா னிரும்புவி யேத்தமன்னோ. (௰௩)

துன்னிய வர்னாடொட்டுத் தூலமா லிங்கத்திற்கு
மன்னிய சோமநாத னென்றபேர் வழங்குமன்னோன்
றென்னிய தீர்த்தமுஞ்சந் திரபுட்க ரணிப்பேர்சாரும்
பன்னிய வதுவுமங்கண் பரவுதீர்த் தத்துளொன்றாம். (௰௪)

அன்புட னந்தத்தீர்த்த மாடுவார் தமக்குநாளு
மன்புகழ் செல்வங்கல்வி வனப்புமுன் னுயவெல்லா
மின்பமோ டளிக்குமேலு மேற்றிடு கயரோகத்தாந்
துன்பமு நீங்கியென்றுந் துலங்குவர் புவியின்மாதோ. (௰௫)

சோமநாதப்படல முற்றிற்று.
ஆ செய்யுள் ௩௱௨௨.

# சுந்தரமூர்த்திப்படலம்.

சோமநாத னெனத்தூலலிங்கமே
நாமமுற்ற கதையைநவின்றன
மேமநாடரு மேத்தெழிற்சுந்தரர்
தாமநாளிய றன்மையுஞ்சாற்றுதும். (௧)

வேறு.

பல்வளஞ் செறிந்தசோழ நாட்டினிற் பாருளோங்கு
நல்வளஞ் செறியுமாரூ ரெனுமணி நகரந்தன்னி
லல்வளஞ் செறியுங்கண்டத் தணிவளர் தியாகேசன்பாற்
சொல்வளஞ் செறிந்தவன்பர் சுந்தர மூர்த்தியென்பார். (௨)

பிறைமுடித் தருளும்பெம்மான் பிரதிவிம் பத்திற்றோன்றி
நிறையருட் சைவபூதி சாதன நெறிமேற்கொண்டோர்
மறையவர் குலம்விளங்க வந்தருள் கருணைவள்ளல்
கறைகெழு கண்டத்தோனைக் கனவினுந் துதிக்குநீரார். (௩)

* அமா - அமாவாசை.

தலந்தொறுஞ் சென்றுசென்று தம்மடி யார்கூட்டத்தோ
டலம்பெற தமிழ்ப்பாமாலை யங்கணன் றனக்கணிந்து
நிலம்பல சுற்றிவையை நீருலாம் பாண்டிநாட்டி
னலங்கெழு திருச்சுழிப்பேர் நகரினை யடைந்தார்மன்னோ. (௪)

அத்தல முறைபெம்மானை யருச்சித்தங் கணிந்துபோற்றித்
தத்துநீர் தவழ்குண்டாற்றின் றடங்கரை மடத்திற்றங்கி
நித்திரை செய்வார்தம்மு னிகழ்தரு கனவிற்பூஞ்செண்
டுத்தன்கா ளீசன்காளை யாகிமுன் றோன்றிநின்றான். (௫)

ஐயநீர் யாவரென்றா ரவர்சோதி வனத்துளேம்யா
மையணி கண்டத்தோனை வளம்படப் பாடுவோய்நீ
துய்யவுள் ளன்பினோடு துதிக்குக நமையுமென்றான்
பையநித் திரையினீங்கி விழித்தனர் பரிவுபூண்டார். (௬)

ஆயிடை யிருந்தேகாளீ சன்றனை யன்பிற்பாடிச்
சேயிடை யுள்ளதாய திருப்புன வாயிற்கேக
வேயதோர் முயற்சியுள்ளத் தெய்தினர் காளீசன்றான்
வேயுறு தோளியோடு விளங்கினன் மறையோனாகி. (௭)

உற்றவர் தம்மைநீவிர் யாவரெங் குள்ளீரென்ன
மற்றவை சொல்வோம்பின்னர்ப் பசிக்கனம் வழங்குகென்றான்
றெற்றென வுண்டியட்டுத் தேடினர் மறையோற்காணார்
சுற்றினர் திரும்பிவந்து சுந்தரர் நோக்குங்காலை. (௮)

அட்டதோ ருண்டிகாணா ரண்ணறன் விளையாட்டென்று
தொட்டெழு முவகையுற்றார் சோதிமா வனத்திலென்னை
யெட்டிய வன்பிற்காணு தெங்குற நினைக்கின்றாயென்
றொட்டிய வோசையொன்று விண்ணிடை யெழுந்ததம்மா. (௯)

கேட்டன ரந்தவோதை கிளர்சோதி வனத்திற்கிந்தக்
கூட்டமோ டெவ்வாறேகு வோம்பிரான் கூறுமந்தக்
காட்டினைக் கண்டதில்லை யென்றிவை கருதும்போது
சூட்டிய விடையின்மீது தோன்றிநா முன்னர்ச்செல்வோம். (௰)

குண்டையின் சுவடுநோக்கிக் கூடிநீ வருகவென்ற
விண்டயங் கொலிகேட்டங்கு வியந்துதங் கூட்டத்தோடு
பண்டையெம் பெருமான்பின்னர்ப் படர்ந்தனர் படருங்காலை
யண்டர்கோ னருளாலேற்றி னடிச்சுவ டாங்குகாணார். (௰௧)

மயங்கினர் நெருங்குகாட்டில் வழியுண ராதுநின்று
தயங்கின ரடியரெல்லாஞ் சுந்தரர் தாமுநோக்கி
நயந்துகா ளீசன்றன்னை நண்பொடு துதித்தாராக
வயங்குமா னடியைநோக்கி வருகென வொளித்தார்பின்னும். (௰௨)

சென்றனர் சில்லதூர மிலிங்கமாய்ச் செறிந்தவெங்குந்
துன்றடி பெயர்க்கக்கூடாத் துயருறீஇ யொருசாருள்ள
தொன்றுமோர் நெறியிற்சென்று ரொளிவன வனங்களெல்லா
நன்றுற நோக்கிச்சென்றார் நம்பனல் விமானங்கண்டார். (௰௩)

கண்ணுறக் கோபுரங்கள் கண்டனர் வணங்கிப்பத்தி
யுண்ணிக ழடியர்கூட்டத் தோடுபூம் புனல்குடைந்து
நண்ணிய காளீசன்று ணாடிய புகுந்தாரங்க
ணண்ணறன் னருளாலந்த வாலய மறையச்செய்தார். (௰௪)

சுந்தரர் நோக்கிக்காணச் சூழ்ந்தவா லயங்களெங்கே
யந்தர மாயிற்றென்றங் கண்ணறன் விளையாட்டுன்னி
முந்துநாங் காளீசன்றாண் முன்னில மதனூல்வந்த
திந்தவா றென்றோர்செய்யு ளிசைத்தனர் துதித்தாரன்றே. (௰௫)

உற்றதோ ரொளியைக்கண்டா ருவந்தனர் துதித்தார்பின்னுந்
தெற்றெனத் துதிக்குந்தோறுஞ் சிகரமுன் னெவ்வோரங்கந்
துற்றுமுன் றோன்றச்செய்தா னலங்கக்காட் டினன்றன்கோயின்
முற்றவுங் கருணையுள்ள முதிர்ந்தகா ளீசன்மாதோ. (௰௬)

மன்னுசுந் தரர்தமன்பு வயங்குற யார்க்குங்காட்டி
யன்னிலை யெதிர்போய்நெம்மா னளவறு பொருளுநல்கத்
துன்னிய வடியர்கூட்டஞ் சூழ்ந்திட வவணின்றேகிப்
பன்னிய தலங்கடோறும் பாடிய சென்றாரன்றே. (௰௭)

சாற்றுநன் னீர்க்குண்டாற்றின் றடங்கரை யதின்முன்னுற்றுப்
போற்றுசுந் தரர்பால்வந்த புனிதனங் காளீசன்றன்
பாற்றுலங் கம்மையோடு மின்னுமப் பதியுள்வாழ்வா
னேற்றமிக் குளவத்தான மான்மிய மேவர்சொல்வார். (௰௮)

சுந்தரமூர்த்திப்படல முற்றிற்று.

ஆக செய்யுள் ௲௱௪௰.

# தேவராதப்படலம்.

முந்துசுந்தர மூர்த்திகளீசர்பால்
வந்துபாடிய வாறுவகுத்தன
நந்துந்தேவரா தன்பெறுநன்மையு
மந்தில்யாமு னறிந்ததுகூறுவாம். (௧)

வேறு.

தெண்டிரை கொழிக்குமுந்தஞ் செறிகுண கடற்குமேற்கி
லண்டர்போற் றடாணைக்கு வடகிழக் கதுகிதாய
தண்டலைப் புனவாயிற்குச் சார்ந்ததென் குடக்கிலுள்ள
தெண்டரு கீர்த்திசான்ற விந்திர புரமென்றோரூர். (௨)

அன்னக ருறையுஞ்சில னருமறை பலவுங்கற்றோன்
பன்னருஞ் சோமயாகஞ் செய்துள பண்புமிக்கோன்
பொன்னினும் போற்றுகின்ற பூதிசா தனங்கைக்கொண்டோ
னின்னநல் லொழுக்கம்பூண்ட வெழிற்றேவ ராதனென்பான். (௩)

அத்தகு தேவராதற் கருமகா ரிருவருள்ளா
ரொத்தெழு மூத்தமைந்தற் குபநய னஞ்செய்து
வித்தக நூல்கள்பல்ல வியப்புறக் கற்பித்தன்பிற்
கத்துநீர்க் கங்கையாடக் கருதினன் முயற்சியுற்றான். (௪)

முன்னவ னனமைந்தன் மொய்யெழில் வினதன்றன்னைப்
பொன்னணி விளங்குகாளி புரத்தினின் மாமனில்லின்
மன்னவைத் திளையமைந்தன் றன்னொடு மனைவியோடுந்
துன்னினன் றுன்னுபாவந் தொலைத்திடும் வாரணாசி. (௫)

சீருறு தேவராதன் செல்லவிந் திரபுரப்பே
ரூருறு பொருள்களெல்லா முள்ளவ ரபகரித்தார்
பாருறு புகழ்சேர் காளி புரத்தினில் வளர்ந்திருந்தான்
பேருறு வினதனம்மான் பெட்புறு காந்தனில்லில். (௬)

வினதனற் பருவநோக்கி விவாகமுற் றுவிப்பானெண்ணித்
தனநனி பெறுவான்வேண்டிச் சாற்றுமம் மருகனோடு
வனையுமிந் திரபுரத்தை மருவியங் குள்ளோர் தம்பான்
மனனமர் மாமனும்மம் மறையவ னவிலலுற்றான். (௭)

மன்னிய தேவராதன் வாரணாசிக்குச்சென்று
னின்னமும் வராமையாலவ் வெழிற்சுதன் றனக்குமன்றன்
முன்னினன் பொருளைக்கொண்டு முடிக்கவேண் டுதலாலன்னோன்
றன்னது நிலத்தையாவர் தாமறு பவிக்கின்றாரோ. (௮)

மற்றவ னுதியத்தை வரைபுரிந் தளிக்கவென்று
னுற்றமா சனங்கள்யாரு மொன்றுபட் டன்னோன்சென்ற
பிற்றனி யரசற்கியும் பெருமிறை யீதற்காக
விற்றவை தீர்ந்தவொன்று மீந்ததின் றெனப்புகன்றார். (௯)

என்றவர் புகறலோடு மின்சொலாற் காந்தனென்பான்
சென்றவன் றநயனுங்கள் தநயனீர் செறுத்திவ்வாறு
கன்றிடக் கூறனன்றன் றெனப்பல கழறிக்கேட்டு
மொன்றுமிங் கில்லையென்றே யொறுத்தனர் துரத்தலுற்றார். (௰)

பின்னருங் காந்தனென்பான் பெரிதுளம் வருந்தியிங்கு
நன்னெறி யில்லையோகேட்க நாட்டவ ரில்லையோபாரின்
மன்னர்தா மில்லையோவென்று வாய்வெரீஇக் கூச்சலிட்டு
நன்னக ரானகாளி புரத்தினை நண்ணினனால். (௰௧)

நண்ணியங் கிருக்குங்கால மாமறு நமனூர்புக்கா
னெண்ணிய வினதனங்க ளியாவர்தந் துணையுமின்றி
யுண்ணிய வுணவுமின்றி யுள்ளமிக் கழுங்கியெங்கள்
புண்ணியன் காளிசன்றன் பொன்னடி தினமுந்தாழ்ந்து. (௰௨)

விரவிய பிரமசாரி விரதந்திற் றவறாகிப்
பெருகிய வில்லறத்தோறும் பிச்சையேற் றுண்டிருந்தான்
கருணையெங் கடலாமெங்கள் காளீச னுமையாளோடுந்
தருமிளங் குமரனோடுந் தந்தைபோல் வரனையுற்றார். (௰௩)

தலைச்சுமை தன்னைத்தோளிற் றாங்கிநின் றாற்றிக்கொண்டு
கலைத்தலைக் கங்கைத்தீரத் *காவெனக் கட்டித்தூக்கிப்
பலித்திட வேடம்பூண்டு படர்புகழ்க் காசிநின்று
நிலத்திவண் வருவான்போன்று நேருறீஇ வினதற்கண்டான். (௰௪)

தனயனைத் தழுவியாங்குச் சார்ந்தவர் யாருங்காண
மனமுவந் தவ்வில்சென்றுள் வதிந்துபின் வினதனோடு
மினமுறு தேவராத னெனவரு காளீசன்றான்
றுணைவொடு சென்றுசேர்ந்தான் றுலங்குமிந் திரபுரத்து. (௰௫)

---

* கா - காவடி.

கண்டன ரூரிலுள்ளார் கலங்கிய சிந்தைகாட்டார்
கொண்டன ருவகைபோலக் கூறிமுன் னுபசரித்தா
ருண்டவ ணிருந்துபின்னு ரூரிலுள் ளாரைநோக்கிப்
பண்டுநான் காசிசென்று பல்லநா ளாயவன்றோ. (௰௬)

இதுவரை யெனதுபங்கி லெவளவு தியம்வந்துள்ள
ததில்வரிச் செலவுநீக்கி யறுதியாய்க் கணக்குப்பார்த்திங்
குதவுமின் மூத்தமைந்தற் குறுமணை முடித்தல்வேண்டும்
பொதுவுளீ ரென்றலோடும் புகலுவார் மாசனத்தார். (௰௭)

அன்றுநீர் கங்கைசெல்வா னளந்திடு செய்களெல்லாந்
தன்றுறப் பிறர்பால்விற்றீர் சூழ்ந்துவந் தின்னுங்கேட்டாற்
பின்னையார் கொடுப்பார்பித்துப் பிடித்துளீர் போலுமென்று
ரென்றுநான் பித்தன்றனீ ரெடுமினெனன் கைச்சாத்தென்றார். (௰௮)

வேறுபொய்ச் சாதனங்கள் விளம்பின ரெடுத்துக்காட்டத்
தேறுதற் கரசன்மாட்டுச் செல்லுது மென்றுகோபித்
தேறுடைப் பெம்மான்றேவி கோட்டையிற் சிறந்துவாழும்
பேறுடை நீதிசான்ற பெருந்தகை நேர்செங்கோலான். (௰௯)

பெருங்குல பூடணப்பேர்ப் பாண்டியன் பிறங்குகோயி
னெருங்கியுட் புருதலோடு நேர்ந்தன னரசன்கண்டங்
கருந்தவர் போலுமென்றே ராதனத் திருக்கச்செய்து
பொருந்திவண் வந்தவாறென் புகலுமி னென்றான்மன்றே. (௨௰)

நடந்தவை யாவுங்கூற நரபதி யின்னேயந்தக்
கொடுந்தகை யாரையெல்லாங் குணர்கெனக் குழுமிவந்தங்
கடைந்தவர் காட்டுஞ்சான்று மாவண மும்பொய்யென்றே
திடம்பட வுணர்ந்துதேவ ராதவே திபனைக்கூவி. (௨௧)

இந்திர புரத்திலன்றேறும் கெவையுள வவற்றையெல்லாஞ்
சொந்தமுற் றிடக்குறித்துச் செலுத்தினன் சுகுணமன்னன்
வந்தவ னவ்வூருற்று வாழ்ந்தனன் சின்னாட்பின்னர்
முந்திய வினதனுக்கு மணவினை முடிப்பானெண்ணி. (௨௨)

அன்னவன் குலத்திற்றக்க வணிகிளை ரணங்கைத்தேடி
நன்னலந் திகழுமன்ற னடத்தின னந்தவேலை
முன்னைய தேவராதன் முனையொடு மனைவியோடு
மன்னிலை வந்தானுக வங்குளா ரதிசயித்தார். (௨௩)

மகிழ்ந்ததி சயிப்பச்சொன்ன வல்லிகா ளீசன்சேயு
மிகந்தன ரொளித்தார்தேவ ராதனை யிருந்தோர்சூழ்ந்து
நிகழ்ந்தன வுரைப்பக்கேட்டு நித்தலுங் காளீசன்றாள்
புகழ்ந்தன னிருந்துவாழ்ந்தான் பொருவருங் காட்சிபெற்றான். (௨௪)

இலகுமிந் திரபுரத்தி லெங்கள்கா ளீசன்மேனி
நலமுறு சொன்னவல்லி நாளும்வீற் றிருந்தாரன்றே
ரலமுற வுறைந்தவவ்வூர்க் கழகிய மங்கலப்பேர்
நிலவுற வின்னுமிந்த நீணிலம் புகலுமாதோ. (௨௫)

தேவராதப்படலமுற்றிற்று.
ஆ- செய்யுள் ௲௱௬௫.

---

காந்தபுராண சங்கரசங்கிதையிலுள்ள

# கதாசங்கிரகப்படலம்.

---

பிரமகை வர்த்தம்பேசும் பெருமைசால் கானப்பேரூர்ச்
சரிதையி தென்றுரைத்தான் சௌநகன் முதலோரின்பப்
பரவையுண் மூழ்கிப்பின்னும் பராவருந் தவத்தான்மிக்க
முரணறு தவத்துச்சூத முனிவரன் பாதம்போற்றி. (௧)

கலையுணர் முனிவனையக் கானப்பே ரூரின்மாய
வலையுணர் வொழிக்குந்தூய மான்மிய வளங்கொழிக்கு
நிலையுணர் விருப்பமின்னு நீடிய தெளிவேயுள்ளத்
தலையுணர் மற்றைநூலுட் சாற்றிய துஞ்சொல்கென்றார். (௨)

மற்றது கேட்டசூத மாமுனி மகிழ்ச்சிமீக்கூர்
வுற்றது நன்றென்றுள்ளத் தொளிவனப் பெருமான்றன்னை
முற்றுணர் வதனாலுன்னி முழங்குகாந் தத்துட்கூறப்
பெற்றது சங்கரப்பேர்ச் சங்கிதைப் பெருக்கின்மாதோ. (௩)

வழங்கிய சோதிக்கான மான்மியங் களையுமுள்ளம்
விழைந்திடு மன்புகூர்ந்து வினவிய தன்னைச்சார்ந்து
தழைந்துள சௌநகாதிச் சார்பிலார் தம்மைநோக்கிச்
சழங்கறக் கேண்மினென்னாச் சாற்றலுற் றனன்மெய்ச்சூதன். (௪)

வெள்ளியங் கிரியிலோர்கால் வெள்விடை யவனம்மைக்கவ்
வொள்ளிய சோதிக்கானத் துறுபுக ழுரைக்கக்கேட்ட
வள்ளிலை வேற்கையண்ண லகத்தியற் குரைப்பவன்னான்
றெள்ளிதி னத்தலத்தைச் சேர்ந்துநோன் புழந்தவேலை. (௫)

ஈசன்பே ரொளியாய்த்தோன்றி யெவைக்குமா தாரம்யாமே
பூசனை விதிகளென்று புகன்றனன் பின்னரம்மை
காசக லரன்கண்பொத்திக் காளியா யுற்றசாப
மாசகல் கானப்பேரில் வந்துதீர்ந் தின்பமுற்றாள். (௬)

பண்டய னரியரன்றும் படைத்துக்காத் தழிப்பகர்தை
கொண்டதா லகன்றுதூல சூக்குமக் குறியைநோக்கி
மண்டுகா னப்பேரில் வந்துநத் தனிமுத்தீர்த்தங்
கண்டுபூ சித்துமீட்டுங் கழறுமுத் தொழில்பெற்றாரால். (௭)

இந்திர னவையரம்பை யேதின்றி நகைப்பவன்றோன்
முந்திடு சாபத்தாலே முதுமண வூரிற்றோன்றி
வந்துதா சியெனச்சோதி வனத்திற்றைப் பூசத்தானை
தந்திடு மடுவின்மூழ்கிச் சாபநீத் தவ்வானுற்றாள். (௮)

முந்துநாள் கைலைவெற்பின் முன்னவன் றிருவோலக்கத்
துந்திய வன்னவூர்தி யூர்வசி கலைகாணிக்க
வந்திலா றுவைக்கண்டாசை யடைதலு மீசன்சாபம்
வந்தது கானப்பேரில் வந்துதீர்ந் தணிந்தான்கோயில். (௯)

மறைமலர் மீதுவாழ்வாள் வாலக்கில் வியரைநிந்தை
யுறைதர வன்னூர்சாப முரைத்திடக் கானப்பேரிற்
புறையற நோற்றப்பாவம் போக்கியோர் தீர்த்தங்கண்டு
விரைவிற்கா ளிசன்பூசை மேவித்தன் *றவனைச்சார்ந்தாள். (௰)

முன்னர்நைந் திருவனென்னு முனிமகட் கண்டுவாயு
துன்னியிச் சிக்கவன்றே டினியுறிஇத் தந்தைக்கோத
வன்னவ னிற்றெழுப் †கஞ் சுதபின்ன மாகவென்றான்
பின்னரக் ‡காலுமப்பெண் பேயாக விட்டான்சாவம். (௰௧)

அன்னவா றுயபெண்ணோ டம்முனி காத்தியாயன்
றன்னதாச் சிரமங்ஙலித் தமிழ்முனி வரக்கண்டோத
மன்னிநீர் கானப்பேர்க்கு மாசிப்பூ ரணையில்வம்மின்
றுன்னுவல் காலோடியானுந் துயர்போமென் றுரைத்துப்போனான். ()

உற்றனைத் திருவனப்பெண் ணோடுகா னப்பேரண்மி
முற்றுசீர்ப் புனிததீர்த்த மூழ்கியப் புனமெறியிப்பப்
பெற்றுடன் மயன்மெய்யோவி மேயினள் பண்டைமேனி
கற்றுணர் கும்பயோனி காலினோ டாங்குச்சார்ந்தான். (௰௩)

---

* தவன் - நாயகன். † கம் - தலை. ‡ கால் - வாயுதேவன்.

கந்தவா கனுமத்தீர்த்தங் கண்டெழு குதனுஞ்சாப
நந்திய தவனையப்பெண் ணாயக னாகச்செய்தான்
முந்திய கடனிருண்டான் முன்னவன் காளீசன்றாள்
வந்தனை மன்னுராற்ற வரதனுங் கருணைபூத்தான். (௰௪)

கின்னரர் பிராணேர்நாளிற் கிளர்சோதி வனத்திலுற்றுப்
பொன்னவிர் விமானங்கண்டு போற்றிக்கா ளீசன்றன்னைத்
துன்னியர்ச் சித்துநின்று துதித்துநற் கருணைபெற்றுப்
பின்னரோ ரிலிங்கந்தானும் பிரதிட்டை செய்தானங்கே. (௰௫)

தூயபாற் கடலிற்றேவர் துறைதந்தமு தங்கடைந்தா
ராயபோ தங்கண்கூர்ம மைராவ தஞ்சேடன்சீர்
தாயகா னப்போர்க்காளீ சன்முன நீலகண்டத்
தேயமந் திரத்தாற்பூதாங் கேணனி யடைந்தமன்றே. (௰௬)

கதாசங்கிரகப்படல முற்றிற்று.
ஆ செய்யுள் ௩௱௮௪.

# தலவிசேடப்படலம்.

சங்கரப்பெயர்ச் சங்கிதக்காதையு
மிங்குறுங்கட் கியல்பினறைந்தனந்
தங்குமந்தத் தலத்துவிசேடமும்
பொங்குமன்பிற் பொருந்தப்புகலுதும். (௧)

வேறு.

மேருவே தண்டங்காசி வியன்கெழு தில்லைகூடல்
சீருல வருணையாரூர் திருவாலங் காடுவேணுர்
பேரிடை மருதையாறு பிறங்குமா யூரங்காழி
நேருறு திருக்குற்றால நேரில்கா ரோணஞ்சையம். (௨)

திரிசிர புரத்திநோடுந் திருவானைக் காமுன்னுக
வருபல தலங்களுள்ளு மருவுறுஞ் சிவபிராற்கிங்
குரியநற் றலமாயெல்லா மேன்மையு முள்ளதாகிப்
பொருவருஞ் சீர்த்திக்காளி புரமொன்றே யோங்குமென்ப. (௩)

பத்தியெல் லாமும்வேண்டிற் பாவங்கள் பாறவேண்டிற்
சித்தநற் சுத்திவேண்டிற் திகழ்தரு முத்திவேண்டி
லத்தலந் தோர்நாளேனு மமர்ந்திட வேண்டுமென்னி
லெத்தலத் ததற்கீடாமொன் றியம்புதல் கூடுங்கொல்லோ. (௪)

எவ்வரு ணத்தாரேனு மெவ்வகைச் செந்துவேனு
மவ்வியற் றலத்தோர்திங்க ளமர்ந்திடி லளப்பிலாத
வெவ்வமி லின்பமுத்தி யெய்துதற் கையமில்லை
கவ்வையில் பக்கமுற்றாற் கழியும்பா தகங்களெல்லாம். (௫)

திரமுறு வாரந்தன்னிற் றீயபா தகங்கடீருந்
தரமுறு மூன்றுநாளிற் சமபாத கந்தீய்ந்தோடும்
பரவிய விரண்டுநாளிற் சங்கலி கரணம்பாறும்
பெருகுமோர் நாளிற்சாதிப் பிரமிச பாவம்போகும். (௬)

பகருமேழ் முகூர்த்தத்தேய பாத்திரி கரணம்பாறுந்
திகழுமும் முகூர்த்தத்திற்சங் கீரணத் தீதுதீரு
நிகரறு முபாரகத்தி னேர்ந்திடிற் சனனநீங்கிப்
புகரறு கயிலைமேவிப் புனிதராய் வாழ்வர்மன்னோ. (௭)

முன்னிய தரிசம்பவ்வ முதற்பல பருவநாளி
லன்னமங் கொருவர்க்கிட்டா லரியவான் கயிலைநல்கு
முன்னுமே காதசப்பே ருருத்திர மாதிவேதஞ்
சன்னிதி யிருந்துராற்றிற் றந்திடு நினைத்தவெல்லாம். (௮)

பேணியத் தலத்திலென்றும் பிதிர்சிராத் தஞ்செய்வாரேன்
மாணுறு கயையிற்செய்த மாபல னடைவர்மற்றுந்
தாணுவின் சோமவாரந் தனிற்சிவ பத்தர்க்கேனும்
பூணுசந் நியாசிக்கேனும் புசிப்பிப்பார் கயிலைசார்வார். (௯)

தருமங்கள் புரிவோரந்தத் தலத்திடை யொன்றுசெய்யிற்
பரவுபல் லாயிரங்க ளாகவே பல்குமன்பி
னொருவர்தம் பசிக்கங்கன்ன மூட்டிடின் மற்றிடத்து
வருபதி னாயிரர்க்கு மகிழ்ந்திட வளித்தலொக்கும். (௰)

பேருல கத்தில்வந்து பிறந்தவர் யாவரேனு
நேருற விறக்குமுன்ன நிமிடமா யினுமன்போடு
சீருற வத்தலத்தில் வதிந்திடிற் சீவன்முத்தர்
தாரணி யாவும்வந்து தன்னடி தாழவாழ்வார். (௰௧)

அன்பிலா னேனுஞ்சாற்று மறிவிலா னேனும்வேசை
யின்பமே கருதியேனும் யாதுகா ரணத்தாலேனு
மன்பெரு மத்தலத்தில் வதிந்திடி லோர்நாளன்றேன்
றுன்பமார் நரகினீங்கித் தூயபே ரின்பமெய்தும். (௰௨)

தெரிந்துபல் பாவமாற்றுந் தீயசண் டாளனேனும்
புரிந்தமுன் னூழாலோர்நாட் பொருந்தியங் குறைவானாயிற்
பொரிந்திடும் பாவமெல்லாம் புனிதவான் கதியைமேவு
மருந்தவ மங்குச்செய்யி னதனைமற் றுரைப்பதென்னே. (௰௩)

போற்றுமான் மியத்தகாளி புரத்தினிற் கிடாமென்று
வேற்றொரு தலத்தைநாவால் விளம்பினும் வேதநின்று
போற்றுகா ளிகாமப் புத்தேளுக் கிணையாமென்று
வேற்றொரு தெய்வந்தன்னை விளம்பினு நீசனாவான். (௰௪)

முன்னைவல் வினையால்வந்து மூடிய பிணியுற்றாலு
மன்னுறு வறுமைநோயால் வருந்துறி னுங்காளீசன்
சன்னிதி யடைவராயிற் சஞ்சல மனைத்துநீங்கித்
துன்னிய பேரானந்தக் கடலிடைத் துளைகுவாரே. (௰௫)

மல்லல்வான் பொழில்சூழ்சோதி வனத்தினி னொன்குதிக்கி
னெல்லையுள் வதிவோர்யாவ ராயினு மெண்ணியாங்குத்
தொல்லைவல் வினையினீங்கிச் சுத்தராய் முத்தராவார்
சொல்லுமந் தலத்தின்மேன்மை சூழ்ந்துயா ருரைக்கவல்லார். (௰௬)

தலவிசேடப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௲௱௬௯.

# முனிவர்பூசித்தபடலம்.

நித்தியன் கயிலைநாத னிலவுகா ளிசனாகி
வித்தக வன்பர்க்காக வீற்றிருந் தருளும்பாரி
லுத்தம மானகாளி புரத்தினை துயர்ந்தமான்மி
யத்தினை யிவ்வாறன்பி னருந்தவச் சூதன்கூற. (௧)

மாதவர் யாருங்கேட்டு மனங்களித் தவகைபூத்துக்
காதலி னந்தலத்தைக் கண்டுகை தொழுவான்வேண்டி
மேதகு மன்பினோடு விண்ணெறிச் சென்றாங்கட்
டாதவிழ் கொன்றைவேணித் தாதையை மனத்துளுன்னி. (௨)

சேணிடைத் தோன்றுஞ்சோதி வனத்தினைச் செறியக்கண்டார்
வேணியிற் கங்கைதைத்தோன் வியப்பினைப் புகழ்ந்தார்சில்லோர்
நீணிலைக் கோபுரங்க ணேர்ந்துகை தொழுதார்சில்லோர்
மாணுறு மான்மியங்கண் மதித்தனர் மகிழ்ந்தார்சில்லோர். (௩)

இன்னணம் புகழ்ந்துகாளி புரத்தினி லிறங்கினார்தொக்
கன்னதன் மகிமைபோற்பல் வளங்களு மளக்கவொண்ணாத்
துன்னிய கயிலையென்னத் துலங்குதல் கண்டுசூழ்ந்து
மின்னுபுண் ணியதீர்த்தத்து விதிப்படி குடைந்தார்மன்னோ. (௪)

கண்டிகை புனைந்துபூதி கவின்பெறப் பூசியங்கட்
பண்டொண் மேனடந்த பத்திரை தனைப்பணிந்தங்
கண்டர்தாழ் காளீசன்முன் றயிலோர் தமையுந்தாழ்ந்து
மண்டபங் களினின்றிறந்து மறையவர் தமையும்வாழ்த்தி. (௫)

ஐங்கர னந்தியாதி யனைவரையுந் தொழுதுசூழ்ந்து
சங்கரற் காண்டற்கேற்ற தரும்பொருள் கைக்கொண்டுசென்
றங்கெழிற் காளீசன்சோ மேசனை யபிடேகித்துத்
தங்குமா யிரநாமங்கள் சாற்றியர்ச் சித்தாரன்றே. (௬)

சன்னிதி நின்றுதாழ்ந்து தருமறைப் பொருள்களாலே
யுன்னினர் துதித்துள்ளன்பி னுருகினர் நிற்கவாங்கு
நன்னிதிக்கர் காளீச னருளொடுமா னிடவிற்றோன்றி
யென்னிவண் வேண்டுமாறிங் களிக்குது மிசைமினென்ன. (௭)

பவக்கடல் கடந்துபோங்கள் பற்றற வுள்ளன்போடு
முறைக்குநின் கமலப்பொற்றாண் முயக்க வேண்டுமென்னத்
தனக்கனர் தமைநோக்கித் தக்கநந் தாடங்கேட்டின்
னவத்தமி லன்பினோடுங் கடைந்துநற் றுதியுஞ்செய்தீர். (௮)

பத்தியில் லார்தன்றூன பாகமில் லார்களேனு
நத்தியித் தலமுற்றோரெ னக்குவம் யாவுமேலா
முத்தியு மென்றூற்றிவ்வை யங்கட்கு மொழிவதன்னே
சத்திய மிவணடைந்தார் தம்மைவிட் டகலேமென்றான். (௯)

என்றது முனிவர்யாரு மெங்கள்காளீசன் பொற்றாண்
மன்றலங் கமலந்தாழ்ந்து மனத்துயிர் தொழுதுமெண்ணி
யன்றுமெகாட் டங்குதனை யாண்டருங் கடவுள் முத்தி
பொன்றுமா றிலாசந்தி தாற்றுவாய்ந் திருந்தாரன்றே. (௰)

முனிவர்கள் முத்திபெற்ற படலம் முற்றிற்று.

ஆ. செய்யுள் [illegible].

## வாழி.

வாழியந்தணர் மாமறை வாழியே
வாழிமன்னவர் வையகம் வாழியே
வாழிசோதி வனத்திற் காளீசன்றாள்
வாழியன்பர் மலர்ப்பதம் வாழியே.

---

காளையார்கோயிற்புராணம் முற்றிற்று.

